# ஆத்ம போதம்

(ஸ்ரீ ஆதிசங்கரர் சுலோகங்கள்,
ஸ்ரீ இரமண மகரிஷி வெண்பாக்களுடன்)

உரை விளக்கம் :

பேராசிரியர் T.K. நாராயணன்




வெளியீடு :

திருமலை திருப்பதி தேவஸ்தானம்

திருப்பதி.

1994

## PUBLISHER'S NOTE

Among the charitable activities of the T.T.D. the publication of spiritual books in different languages and their distribution at cheaper rate is one. Sri Adi Sankara's "ATMA BOTHAM" now brought out by T.T.D. is one among such publications.

All the 68 slokas containing in this work provide the blissful knowledge of the self. Sri Ramana Maharshi translated these Sanskrit slokas into Tamil in Venba metre. The present book contains an excellent commentary by Prof. T.K. Narayanan of Madurai along with the original text both in Sanskrit and Tamil.

We are extremely happy to present this unique work to our readers and it is our earnest hope that they derive immense joy and wisdom from this book.

**D.V.L.N. MURTHY**
EXECUTIVE OFFICER
T.T.D., TIRUPATI.

# முன்னுரை

உலகு, உயிர், இறை என்னும் முப்பொருள் பற்றிய ஆராய்ச்சியாகவே உலக தத்துவ ஞானம் அமைந்-துள்ளது. இம்மூன்றன் உண்மை, இன்மை, இம்மூன்-றனுக்கு இடையே அமைந்துள்ள தொடர்பு, தொடர்-பின்மை பற்றிய விவாதங்கள், விளக்கவுரைகள் இந்தப் பாரத பூமியில் பல்லாயிரம் ஆண்டுகளாக வனங்களி-லும் வனாந்தரங்களிலும் குருகுலங்களிலும் அர-சவைகளிலும், வீட்டிலும் வீதியிலும் தொடர்ந்து நிகழ்ந்து வந்துள்ளன. அவற்றுள் ஸ்ரீ ஆதிசங்க-ரர் கண்ட அத்வைதம், ஸ்ரீ மத்துவாச்சாரியர் கண்ட துவைதம், ஸ்ரீ இராமானுஜாச்சாரியார் கண்ட விசிஷ்-டாத்துவிதம் ஸ்ரீ மெய்கண்டார் கண்ட சிவாத்துவிதம் என்பன குறிக்கத்தக்கன.

அத்வைதம் கண்ட ஸ்ரீ ஆதிசங்கரர் சிறந்த ஆன்ம ஞானி . இவர் இயற்றிய நூல்களும், உரைகளும் ஆன்ம ஞானத் தெளிவு பெறத் துணையாவன. அவ்-வாறு அவர் இயற்றியருளிய நூல்களுள் இந்த 'ஆத்ம போதமும்' ஒன்று. சாத்திரங்களை, சாத்திர மேற்கோள்-களைச் சரியாகப் புரிந்துகொள்ள உதவும் பிரகண நூலாகும் இது. இதன்கண் உபநிடத உண்மைகள் தக்க உவமைகள் வழித் தெளிவுதரப் பெற்றுள்ளன.

இதன்கண் சமஸ்கிருதத்தில் அமைந்த அறு-பத்தெட்டுச் சுலோகங்களையும் தெளிந்த, செறிந்த வெண்பா யாப்பில் ஸ்ரீ இரமண மகரிஷி தமி-ழில் அருளியுள்ளார். அவை கற்றோர்க்கே உதவுவன. அனைவர்க்கும் விளங்குமாறு அரிய தெளிவுரையோடு

இனிய, எளிய நடையில் உரிய உதாரணங்களுடன் பேராசிரியர் T.K. நாராயணன் அவர்கள் வழங்கியுள்ளார். அவர்க்குத் திருவேங்கடவன் எல்லா நலன்களும் அருளுவானாக.

இந்த நூல் திருமலை திருப்பதி தேவஸ்தான வெளியீடாக அச்சேறிய போது தொடக்கத்தில் கண்ணுங்கருத்துமாக மெய்ப்புப் பார்த்து உதவியவர் சப்தகிரி தமிழ்ப்பகுதி பதிப்பாசிரியர் திரு. N.S. இராமமூர்த்தி என்பது குறிப்பிடத்தக்கது. வடமொழிச் சுலோகங்களைத் தொடர்ந்து பார்த்து அவ்வப்போது அச்சுப்படியைத் திருத்தியருளியவர் பதிப்புத்துறை மேற்பார்வையாளர் ஸ்ரீமான் N. இராம கிருஷ்ண சாஸ்திரிகள். அன்னவர்க்கெல்லாம் நன்றி கூறல் கடப்பாடு ஆகும்.

பொன். சௌரிராஜன்

# ஆத்ம போதம்

ஸ்ரீ ஆதிசங்கரர் ஆச்சாரியர்களுள் சிறந்து விளங்குகின்றவர். ஆத்ம ஞானிகருள்ளும் பெருமதிப்புடன் திகழ்கின்றவர். அவர் இயற்றிய நூல்கள் பலப்பல. பகவத் கீதை, உபநிடதங்கள், பிரம்மசூத்திரம் ஆகிய முப்பெரும் நூல்களுக்கு அவர் எழுதியுள்ள பாஷ்யங்கள் பிரசித்தி பெற்றவை. இவையல்லாது இறைவன் மீது அவர் பாடியுள்ள பிரார்த்தனை சுலோகங்களும் எண்ணற்றவை. அந்தப் பக்திப் பாடல்கள் ஒரு சீரிய அத்வைதி எவ்விதம் சிறந்த பக்திமானாகவும் விளங்கமுடியும் என்பதை நமக்கு எடுத்துக்காட்டுவனவாக அமைகின்றன.

பாஷ்யங்கள் பலவற்றை அருளிய ஸ்ரீ ஆதிசங்கரர் பிற்காலத்தில் ஆரம்ப சாதகர்களுக்குத் தத்துவத்தைப் புகட்டும் வகையில் ஆத்ம போதம், விவேக சூடாமணி போன்ற நூல்களையும் இயற்றலானார். சாஸ்திரங்களில் காணப்படும் பல்வேறு பதங்களையும், மேற்கோள்களையும் விளக்கும் வகையில் அமைக்கப்பட்ட இந்த நூல்களுக்குப் பிரகரணங்கள் என்று பெயர். சாஸ்திரங்களில் காணப்படுகின்ற கருத்துக்களை இந்தப் பிரகரண நூல்கள் அழகிய முறையில் விளக்குகின்றன. எவ்விதம் தற்காலத்தில் பள்ளிகளிலும், கல்லூரிகளிலும் வகுப்புகளில் பாடமாக வைக்கப்பட்டுள்ள பல்வேறு ஆங்கில, தமிழ்ப் பாடநூல்களை எளிதில் விளக்குவதற்காக விளக்க நூல்கள் அமைந்திருக்கின்றனவோ, அந்த வகையில் சாஸ்திரங்களுக்குப் பிரகரணங்கள் அமைந்துள்ளன. உபநிடதங்கள் பலவற்றிலிருந்து தொகுத்தெடுக்கப்பட்ட கருத்துக்கள் அழகிய உவமானங்களுடன் இந்த ஆத்ம போதத்தில் தரப்படுகின்றன.

இவ்வரிய நூலைத் தமிழில் பாக்களாகவே மொழி பெயர்த்து அருளியுள்ளார் ஸ்ரீ ரமண மகரிஷி. மூல சுலோகத்திற்குரிய ஸ்ரீ ரமணரின் பாக்களுடன் இந்த நூலின் உட்பொருளைத் தெரிந்து கொள்ள முற்படுவோமாக.

# 1

तपोभिः क्षीणपापानां शान्तानां वीतरागिणाम् ।
मुमुक्षूणामपेक्ष्योयमात्मबोधो विधीयते ॥

தபோபி:க்ஷீணபாபாநாம் சாந்தானாம் வீதராகிணும்।
முமுக்ஷுணமபேக்ஷ்யோ(அ)யமாத்மபோதோவிதீயதே॥

தவங்களினாற் பாவந் தவிர்ந்தவராய்ச் சாந்தி
யவிர்ந்தவரா யாசையறுந் தாராய்ப்-பவமுக்தி
யாதரமார்ந் தாருக் கடையத் தகுமான்ம
போதமா மீது புகல்

[ஸ்ரீரமணர்]

तपोभिः தபோபி: - தவங்களால், क्षीणपापानां க்ஷீணபாபாநாம் - பாபம் குறைந்தவர்களும், शान्तानां சாந்தானாம் - அமைதி கொண்டவர்களும், वीतरागिणाम् வீதராகிணும் - ஆசை குறைந்தவர்களும், मुमुक्षूणां முமுக்ஷுணும், - விடுதலையை விரும்புகிறவர்களுமானவர்களை(க்), अपेक्ष्य அபேக்ஷ்ய - குறித்து, अयं அயம் - இந்த, आत्मबोधः ஆத்மபோத: विधीयते விதீயதே - வகுக்கப்படுகிறது.

கருத்துரை :-

புலன்களை அடக்கி மனதின் கெட்ட போக்கைத் தடுத்து அதனால் அமைதியும், பற்றற்ற தன்மையும் கைவரப்பெற்ற மோக்ஷம் விரும்பிகளுக்கு இந்த ஆத்ம போத நூல் எழுதப்படுகிறது.

இந்த முதல் சுலோகத்தில் ஆத்ம போதம் படிக்க விரும்பும் அன்பர்களிடம் என்னென்ன தகுதிகள் இருக்கவேண்டும் என்பதை ஸ்ரீசங்கரர் விளக்குகின்றார். ஒரு

செயலைச் செய்யத் துவங்குகையில் இந்தச் செயலை எப்படிச் செய்யவேண்டும், செய்ய நம்மிடம் என்னென்ன தகுதிகள் இருக்க வேண்டும், இப்படிச் செய்தால் இன்ன பலன்கிடைக்கும் என்றெல்லாம் நன்கு சிந்தனை செய்வது அந்தச் செயலைச் செய்தபின் கிடைக்க இருக்கும் வெற்றிக்கு முன்னோடியாக அமையும். அது போல ஆத்ம போதத்தைப் படிக்கத் தொடங்குமுன் அதைப் படித்து நன்கு புரிந்து கொள்வதற்கு நம்மை நாம் ஆயத்தப்படுத்திக்கொள்ள வேண்டும்.

நல்லதொரு அஸ்திவாரத்தின் மீது கட்டப்பட்ட கட்டடம் நிலைத்து நிற்கும். அதுபோல் தகுதிகளைப் பெற்றுக்கொண்டு சீரியதொரு செயலில் ஈடுபட்டால் வெற்றி நிச்சயம். ஆத்ம போதம் என்ற வார்த்தையே 'தன்னையறிதல்' என்று பொருள் படுகிறது. 'தன்னையறியத் தனக்கொரு கேடில்லை' என்பதன்றோ திருவாக்கு. ஆத்ம போதத்தைப் பெறுவதற்கு நம்மிடம் விவேகம், வைராக்கியம், ஷட்சம்பத்தி, முமுக்ஷுத்வம் ஆகிய முக்கியமான நான்கு அடிப்படைத் தகுதிகள் இருக்க வேண்டும். அப்பொழுதுதான் நூலினுடைய உட்கருத்தை உள்ளவாறு புரிந்துகொள்ளும் திறன் வாய்ந்தவர்களாவோம்.

எல்லா நூல்களையும் எல்லோராலும் படிக்கமுடியாது. படித்தாலும் புரிந்து கொள்ள முடியாது. எம்.ஏ. வகுப்புப் பாடத்தை நான்காம் வகுப்பு மாணவனால் எவ்விதம் படித்துப் புரிந்துகொள்ளமுடியாதோ, அதுபோல் உயரிய வேதாந்த நூல்களை ஆரம்ப சாதகர்களால் படித்துப் புரிந்து கொள்ள முடியாது. அந்தந்த நூலைப் படித்துப் புரிந்து கொள்வதற்கு அந்தந்தத் தரத்திலமையும் மனபரிபாகம் வேண்டும்.

'ஆத்ம போதம்' படித்துப் பயனடைய விரும்பும் சாதகர்களுக்கு என்னென்ன தகுதிகள் தேவை என்று இந்த சுலோகத்தில் சங்கரர் விளக்குகின்றார்.

இறைவனை நம்மிடமிருந்து பிரிப்பது நாம் செய்த பாப காரியங்களாகும். பாபங்களாகிய திரை இறைவனை உணரவொட்டாது நம்மைத் தடுக்கிறது. பாபங்கள் குறையக்குறைய அந்தத் திரை சிறிது சிறிதாக அகலுகிறது. திரை அகல அகல இறையுணர்வு நம்மிடம் கூடுகிறது. முற்றிலும் பாபங்கள் நீங்கின நிலையில் நாம் இறைமயமாய் விடுகிறோம். அதாவது தன்னில் தானாய் லயித்து விடுகின்றோம். பாபங்களைப் போக்கப் பல சாதனங்கள் உள்ளன. அவற்றில் ஒன்று தவம். தவத்தின் மூலம் பாபத்தை அகற்றலாம். தவம் மூவகைப்படும். மனம், மொழி, மெய் ஆகிய மூன்றாலும் தவம் செய்தல் வேண்டும். மனம், மொழி, மெய்யால் அனைத்துயிர்களுக்கும் யாண்டும் நலமே செய்தல் சிறந்த தவம் ஆகிறது. அத்தகைய தவத்தால் பாபம் தேய்கிறது. எனவே முதற்கண் தவத்தின் மூலம் நம்மிடத்திருக்கும் பாபத்தை நாம் நீக்கிக்கொள்ள வேண்டும்.

பாபங்கள் அகல்கின்ற பொழுது நம்மிடம் ஒரு வித அமைதி உண்டாகின்றது. உள்ளத்தே உண்டாகும் அமைதி ஆத்ம சாதனத்தில் நாம் முன்னேறுகிறோம் என்பதற்கு ஒரு அறிகுறி. பாபம் செய்யத் தூண்டுவது எது? விருப்பு - வெறுப்பு. பொருள்களிடம் வைத்துள்ள பற்றுதலின் காரணமாக நாம் தீயவை புரிகின்றோம். பற்றுதலற்ற நிலைமையில் நாம் பாபம் செய்ய மாட்டோம். பாபம் செய்யாத நிலையில் அமைதி பிறக்கும். ராகத்துவேஷங்கள் அற்ற இடத்தில் அமைதியும் ஆனந்தமும் ஏற்படும்.

மனித வாழ்வின் குறிக்கோள் மோக்ஷம அடைவதேயாகும். பிறப்பிறப்பாகிய பந்தத்திலிருந்து விடுபடுவதுதான் நமது இலட்சியம். இந்த விதமாக பந்தத்திலிருந்து விடுபட வேண்டிய தீராத வேட்கை எவனிடம் இருக்கிறதோ அவன் முமுக்ஷு எனப்படுகிறான்.

இனி வரப்போகும் ஒவ்வொரு சுலோகத்திலும் காணப் படும் இரண்டு அடிகளில் முதல் அடி வேதாந்த உண்மையை விளக்குவதாகவும், அடுத்த அடி அவ்வுயரிய உண்மையை ஒரு அரிய எளிய உவமானம் மூலம் விளக்குவதாகவும் அமைவதைக் காணலாம். உண்மையைத் தெளிவாக உணர்ந்த பெருமக்கள் அப்பேருண்மைகளை அன்றாட உலக வழக்கில் காணப்படும் உபமானங்களால் விளக்க முற்படுவது வேதாந்தத்தைப் பயில விரும்பும் ஆரம்ப சாதகர்களுக்குக் கடினமான கருத்துக்களை எளிதாகப் புரிய வைப்பதற்காகவேயாகும். உவமானத்தை நினைவில் வைத்துக்கொண்டால், அதனால் குறிக்கப்படும் உண்மையையும் எளிதில் புரிந்து கொள்ளமுடியும். ஆதிசங்கரர் ஆத்ம போதத்தில் அரும்பெரும் வேதாந்தக் கருத்துக்களை எளிய உபமானங்கள் மூலம் விளக்க முற்படுவதை நாம் காணலாம்.

## 2

बोधोन्यसाधनेभ्यो हि साक्षान्मोक्षैकसाधनम् ।
पाकस्य वह्निवत्ज्ञानं विना मोक्षो न सिध्यति ॥

போதோ அன்ய ஸாதனேப்யோ ஹி
ஸாக்ஷான் மோக்ஷைகஸாதனம் ।
பாகஸ்ய வஹ்னிவத் ஞானம்
வினா மோக்ஷோ ந ஸித்யதி ॥

அறிவொன்றே நேர்முக்தி சாதன மாகும்
பிறசா தனங்களின் பேரு - மருவின்றி
யாகாது முக்தியுர லக்கினியின் றிப்பாக
மாகாத வாறென் றறி.

[ஸ்ரீ ரமணர்]

पाकस्य பாகஸ்ய-சமையலுக்கு; वन्हिवत् வஹ்னிவத்-நெருப்புப்போல; अन्य அந்ய-மற்ற; साधनेभ्यो சாதனேப்யோ-சாதனங்களுள்; बोधो हि போதோஹி-ஞானமே (ஆத்ம போதமே) साक्षात् ஸாக்ஷாத்-நேரடியான, मोक्ष एक साक्षनं மோக்ஷ ஏக ஸாதனம்-மோக்ஷத்துக்கு ஒரே சாதனம்; ज्ञानं विना ஞானம் வினா - ஞானம் இல்லாமல்; मोक्ष மோக்ஷ-மோக்ஷம் (விடுதலை); न सिध्यति ந ஸித்யதி-சித்திக்கிறதில்லை.

கருத்துரை:- சாதனங்களுள் எல்லாம் 'போதமே' மோட்சத்துக்கு ஒரே சாதனமாம். போதம் சமையலுக்கு நெருப்புப் போல. ஞானம் (போதம்) இல்லாமல் மோக்ஷம் கிடடாது.

மோக்ஷம் பெற ஞானம் இன்றியமையாதது என்ற கருத்தை விளக்குவதற்கு ஸ்ரீசங்கரர் ஈண்டு ஒரு அழகிய உதாரணம் தருகிருர். சமையல் செய்வதற்குப் பல பொருட்கள் தேவைப்படுகின்றன. அரிசி, காய்கறி, தண்ணீர் போன்றவை சமையல் செய்யத் தேவைப்படும் சில பொருட்களாகும். நம்மிடம் அரிசி போன்ற சமையலுக்கு வேண்டிய பொருட்கள் இருப்பதால் மட்டும் சமையல் செய்துவிட முடியாது. அவைகள் யாவும் சமையலுக்கு வேண்டிய பல்வேறு உபகரணங்கள். சமையல் செய்ய இவையாவற்றைக் காட்டிலும் இன்றியமையாது வேண்டப்படுவது நெருப்பாகும். நெருப்பு அல்லது அக்னிதான் சமையலுக்கான அடிப்படைத் தேவையாகும். அதுபோல் யக்ஞங்கள் செய்தல், தானம் அளித்தல், நல்ல பல ஆத்மீக நூல்களைச் சிரத்தையோடு படித்தல் போன்ற செயல்கள் யாவும் நம்மிடமிருக்கும் மாசுக்களை நீக்கி நம்மைத் தூய்மைப்படுத்தும். ஆனால் அவை மோக்ஷத்திற்கான நேரடி சாதனங்களாகா. சமையலுக்கு நெருப்பு எவ்வளவு அவசியமோ அதுபோல் மோக்ஷத்திற்கு ஆத்ம ஞானம் அதாவது ஆத்மனைப் பற்றிய அறிவு இன்றியமையாததும் நேரடி சாதனமுமாகும்.

ஆத்ம ஞானம் பெறுவதற்குத் துணை புரியும் சாதனங்களைப் பொதுவாக நான்கு வகையாகப் பிரிக்கலாம். பரம்பரா சாதனம், பஹிரங்க சாதனம், அந்தரங்க சாதனம், ஸாக்ஷாத் சாதனம் என்பவையே அவையாகும்.

யக்ஞம், தானம், தவம் போன்றவை பரம்பரா சாதனத்தில் அடங்கும். விவேகம், வைராக்கியம், ஷட்சம்பத்தி, முமுக்ஷுத்வம் ஆகியவை பஹிரங்க சாதனத்தின் அங்கங்களாக அமைகின்றன. சிரவணம், மனனம், நிதித்யாஸனம் போன்றவை அந்தரங்க சாதனத்தின் பகுதிகளாகும். நான்காவது சாதனம் ஸாக்ஷாத் சாதனம் அல்லது நேரடி சாதனம் ஆகும். அதுதான் ஞானம் ஆகும். நமது நிஜ சொரூபத்தைப் பற்றிய உண்மை நிலையை உணருதலே அதுவாகும். அத்தகைய ஆத்ம போதம் பெறுவதுதான் மோக்ஷத்திற்கான நேரடி சாதனமாகும். ஏனையவையெல்லாம் ஒரு வகையில் ஆன்மீக முன்னேற்றத்திற்குத் துணைபுரிவனவாக அமைகின்றன.

ஆத்ம ஞானத்தின் பெருமை இந்த சுலோகத்தில் எடுத்துக்காட்டப்படுகிறது.

## 3

अविरोधितया कर्म नाविध्यां विनिवर्तयेत् ।
विध्याविध्यां निहन्त्येव तेजस्तिमिरसंघवत् ॥

அவிரோதிதயா கர்ம நாவித்யாம் விநிவர்தயேத் ।
வித்யாவித்யாம் நிஹந்த்யேவ தேஜஸ்திமிர
சங்கவத் ॥

அறியாமைக் குப்பகை யன்றதனாற் கன்ம
மறியாமை தன்னை யகற்று-தறிவே
யழிக்குமறி யாமை யொளியந்த காரக்கும்
பொழிக்குமா றென்றே யுணர்.

[ஸ்ரீரமணர்]

अविरोधितया அவிரோதிதயா-எதிர்ப் போக்கற்ற, (தன்மையால்) कर्म கர்ம-கிரியைகள் (செய்கைகள்) अविद्यां அவித்யாம்-அவித்யை என்ற அறியாமை இருளை, न विनिवर्तयेत् ந விநிவர்த்தயேத் - நீக்காது (அழிக்காது) तेजः தேஜ: ஒளி, तिमिर संघवत् திமிர சங்கவத்-இருள் கூட்டத்தை (ஒழிப்பது) போல, विद्या एव வித்யாஏவ-வித்யை (ஞானம்) தான் अविद्यां அவித்யாம்-அறியாமை இருளை, निहन्ति நிஹந்தி-ஒழித்துக் கட்டுகிறது.

கருத்துரை:- எந்தச் செயல்களும் அவித்தைக்கு எதிரியல்ல. ஆகவே அவை அவித்தையைத் தீர்க்காது. ஒளி எவ்வாறு இருளை உடனே நீக்குகிறதோ அதுபோல வித்தை ஒன்றுதான் அவித்தையை நீக்கும்.

ஆத்மனைப் பற்றிய ஞானத்தை அடைவதுதான் நேரடியான மோக்ஷ சாதனம் என்று சென்ற சுலோகத்தில் தெரிவிக்கப்பட்டது. ஞானத்தால் கைகூடவல்ல மோக்ஷத்தை இதர நற்கருமங்கள் ஏன் தர இயலாது என்பது இந்த சுலோகத்தில் விளக்கப்படுகிறது.

ஆத்ம ஞானம் அடைதல் என்பது என்ன? நாம் உண்மையில் ஆத்ம சொரூபம், க்ஷணந்தோறும் மாறிக் கொண்டேயிருந்து இறுதியில் அழிந்து போகும் இந்த உடல் நாம் அல்ல என்ற உண்மையை உணர்ந்து ஆத்மனில் லயமாகி விடுவதேயாகும். ஆத்ம ஞானம் பெறுவதென்பது ஏதோ நம்மிடம் இல்லாத ஒன்றைப் புதிதாகப் பெறுவது என்பது அல்ல. ஆத்மன் யாண்டும் இருக்கும் சத், சித், ஆனந்த வஸ்துவாகும். ஒரு காலத்தில் ஒரு இடத்தில் இருந்து மற்றொரு காலத்தில் இல்லாது போகும் வஸ்து அல்ல அது. காலதேச வர்த்தமானங்களுக்கு அப்பாற்பட்டு அது இலங்குகிறது. நாம் உண்மையில் தூய சச்சிதானந்த ஆத்ம சொரூபமே என்பதை நம்மிடத்தில் நிலவும் அஞ்ஞானத்தின் காரணமாக உணராது நிற்கிறோம்.

நம்முடைய ஆத்ம ஸாக்ஷாத்காரத்திற்குத் தடையாக இருப்பது அஞ்ஞானம் அல்லது அறியாமை. அஞ்ஞானம் ஒரு கனத்த திரைக்கு நிகர்; உண்மைப்பொருளைப் பார்க்கவிடாது அந்தத் திரை நம்மைத் தடுக்கிறது. உதாரணமாக நாம் ஒரு அறையின் ஒரு பகுதியில் உட்கார்ந்து கொண்டிருப்பதாக வைத்துக்கொள்வோம். அந்த அறையின் மற்றொரு பகுதியில் விலையுயர்ந்த வைரக்கல் ஒன்று சிறு கண்ணாடிப் பெட்டிக்குள் வைக்கப்பட்டிருப்பதாகக் கொள்வோம். அந்தப் பெட்டிக்கும் நமக்கும் இடையே கனமான திரை ஒன்று தொங்குகிறது. நாம் அறைக்குள் நுழைந்தவுடன் திரைக்கு இப்புறம் அமர்ந்து கொள்கின்றோம். அந்த வைரம் அங்கே இருக்கிறது என்று நமக்குத்தெரியாது. அது தெரியாதவரை நாம் எத்தனை காலம் அங்கிருந்தாலும் நாம் அப்படியேதான் அமர்ந்திருப்போம். திரையை நீக்குவதாகிய செயலைச் செய்தாலன்றி அந்த வைரம் அங்கே இருப்பதைப் பற்றி நாம் தெரிந்துகொள்ள முடியாது. அதேபோல் அஞ்ஞானமாகிய திரையை ஞானமாகிய வாளினால் கிழித்தெறிந்தாலன்றி ஆத்ம ஞானத்தை அடைய முடியாது.

உறங்கிக்கொண்டிருக்கும் ஒருவன் கனவு காண்கிறான். அடர்ந்த காட்டில் வழி தவறி தான் திரிந்து கொண்டிருப்பதாகவும் அப்பொழுது அருகிலிருந்த புதரிலிருந்து புலி ஒன்று தன்னை நோக்கிப்பாய்வதாகவும் கண்டு, அந்தப் பதட்டத்தில் “ஐயோ! புலி! புலி!” என்று கத்திக் கொண்டு பதறியடித்து எழுந்திருக்கிறான். பதட்டத்துடன் எழுந்திருந்தவன் தான் படுத்திருந்த கட்டிலை விட்டுக் கீழே விழுந்து விடுகிறான். கீழே விழுந்தவுடன் தூக்கம் கலைந்து போய்விடுகிறது. தூக்கம் போனவுடன் கூடவே கனவும் அகன்று அவன் நனவு நிலைக்கு வருகிறான். கீழே விழுந்தவன் சுற்றும் முற்றும் கண்களைக் கசக்கிக்கொண்டு பார்க்கிறான். பிறகு, “அப்பாடா” என்று பெருமூச்சு விட்டுக்கொண்டு தான் கண்டது கன

வுதான் என்று உணர்ந்துகொள்கிறான். எனவே விழிப்பு நிலையைப் பற்றிய உணர்வு வராதவரை அவன் கனவு நிலையில் அவனது கனவுக் காட்சிகள் அனைத்தும் பொய்யாகிவிடுகின்றன. அதுபோல், அஞ்ஞானம் அல்லது அறியாமை இருக்கும் வரை ஆத்ம போதம் பெற இயலாது. அக்ஞானத்தை அகற்ற ஞானத்தால் மட்டுமே முடியும். வேறு எதனாலும் முடியாது.

அஞ்ஞானமாகிய ஆவரணம் அல்லது திரையை நீக்க ஞானத்தால் மட்டுமே இயலும் என்பதற்கு ஸ்ரீசங்கரர் இந்த சுலோகத்தில் ஓர் உவமானம் தருகிறார். ஒரு அறையில் காரிருள் மண்டிக்கிடக்கிறது எனக்கொள்வோம். அந்த இருளைப் போக்க வேண்டும். எந்த முறையக் கையாள்வது? துடைப்பத்தால் மணிக்கணக்காக அந்த அறையைப் பெருக்கினால் அந்த இருளை அகற்ற முடியுமா? முடியாது. அல்லது அந்த அறையைக் கவ்வியிருக்கும் இருளானது அகல வேண்டும் என்பதற்காக நாட்கணக்காக உபவாசம் இருந்தால் அந்த இருள் அகலுமா? அகலாது. அந்த இருள் அகல வேண்டும் என்பதற்காக ஏழைகளுக்குப் பொன்னும் பொருளும் தானம் செய்தால் இருள் அகன்று விடுமா? இருள் அப்படியேதான் இருக்கும். இதுபோல அந்த இருளை அகற்றுவதற்காக எந்த ஒரு காரியத்தைச் செய்ய வேண்டுமோ அதைச் செய்தாலன்றி இருள் அகலவே அகலாது. அந்தக் காரியம் தான் என்ன? காரிருள் கவ்வியிருக்கும் அந்த அறைக்குள் ஒரு சிறிய விள்க்கைக் கொண்டு செல்வதுதான். விளக்கு வெளிச்சத்தின் முன் பலகாலம் அந்த அறையைக் கவ்வியிருந்த இருள் நில்லாது நீங்கி விடுகின்றது. அதுபோல் ஞானமாகிய தீபத்தின் முன் அஞ்ஞானமாகிய இருள் அகன்று விடுகிறது. அஞ்ஞானத்தை அகற்ற கர்மங்களால் முடியாது என்று கூறப்பட்டதற்குக்காரணம், கர்மங்கள் அஞ்ஞானத்திற்கு எதிரிடையானவையல்ல என்பதால்தான். செயல் ஒன்று உண்டு எனின், அதற்கு ஒரு விளைவும் இருந்தாக

வேண்டும். அந்த விளைவை அனுபவிக்க மேலும செயல்கள் புரிந்தாக வேண்டும். செயலும் அதன் விளைவும் இவ்விதம் சுற்றிச் சுற்றி வரும். எனவே நாம் புரியும் கர்மங்கள் நம்மிடமிருக்கும் மாசுக்களைச் சிறிது சிறிதாக அகற்றி, நம்மைத் தூய்மைப் படுத்த உதவுமே ஒழிய மேலாம் ஞானத்தை அடைய உதவா. அஞ்ஞானத்தின் காரணமாக நம்மைப் பற்றி நாம் கொண்டிருக்கும் தவறான கருத்துக்கள் ஞானத்தினால் நீக்கப்படுகின்ற பொழுது ஆத்ம சைதன்யம் நம்மிடத்தில் ஒளிரும்.

# 4

परिच्छिन्न इवाज्ञनात्तन्नाशे सति केवलः ।
स्वयं प्रकाशते ह्यात्मा मेघापायेंशुमानिव ॥

பரிச்சின்ன இவாஞ்ஞாநாத் தந்நாசே ஸதி கேவல:।
ஸ்வயம் ப்ரகாசதே ஹ்யாத்மா மேகாபாயோம்
ம்சுமானிவ ॥

அறியாமை யான்மறை வானதுபோ லான்மா
வறவேஃ தேகம தாகி - நிறைவா
யிலகுமே தானா யிரியவே மேக
மிலகுமா தித்த னென வே.

[ஸ்ரீ ரமணர்]

आत्मा ஆத்மா-ஆத்மா, अज्ञानात् அக்ஞானாத்-அஞ்ஞானம் காரணமாக परिच्छन्न इव பரிச்சின்ன இவ - துண்டித்துத் தனிப்பட்டிருப்பது போலத் தோன்றுகிறது. तन्नाशे सति தந்நாசே ஸதி - அது (அஞ்ஞானம்) அழிந்தால் केवलः கேவல: - அதுமட்டுமே (கேவல நிலையே) இருக்கும். मेघापाये மேகாபாயே - மேகங்கள் ஒதுங்கினால், अंशुमानिव அம்சுமானிவ -

கிரணங்களின் பதியான சூரியன் போல, प्रकाशते ப்ரகாசதே - பிரகாசிக்கிறது.

கருத்துரை:- அஞ்ஞானத்தால் ஆத்மா பலப்பலவாகக் காட்சியளிக்கின்றது. அஞ்ஞானம் அழிந்தால் அதுஒன்று தான் என்று தெரிந்துவிடும். சூரியன் பிரகாசிக்காத நேரமில்லை. மேகம் மறைத்தது. அதனால் சூரியன் இல்லை என்றோம். மேகம் நீங்கினால் எப்பொழுதும் ஒளிரும் சூரியன் விளங்கிவிடுகிறான். அதேபோல் ஆத்மா எப்பொழுதும் பிரகாசித்துக் கொண்டுதான இருக்கிறது. அக்ஞானத்திரை காரணமாக அது மறைக்கப்படுகிறது. அக்ஞானம் அகன்றதும் அது எப்பொழுதும் போலப்பிர காசிக்கிறது.

சென்ற சுலோகத்தில் கூறப்பட்ட கருத்தே இந்த சுலோகத்திலும் வலியுறுத்தப்படுகின்றது. ஞானம் ஒன்றி னால்தான் அஞ்ஞானத்தைப் போக்க இயலும். மற்றபடி எத்தகைய கர்மங்களாலும் முடியாது என்று சென்ற சுலோகத்தில் கூறப்பட்டது. இந்த சுலோகத்தில் மற்றொரு உவமானத்தின் மூலம் இக்கருத்து மேலும் விளக்கப்படு கின்றது.

ஆகாயத்தில் சூரியன் பிரகாசித்துக் கொண்டிருக்கி றான். தனது கிரணங்களை எல்லாத் திசைகளிலும் அவன் இடையறாது பரப்பிக்கொண்டிருக்கின்றான். திடீ ரென்று எங்கெங்கோ சிதறிக் கிடந்த மேகங்கள் ஒன்று சேருகின்றன. படலம் படலமாகச் சேர்ந்துவிட்ட அம்மே கக்கூட்டம் இப்பொழுது ஒன்று திரண்ட காரணத்தால் சூரிய ஒளியை பூமிக்கு வராதபடி தடுத்துவிடுகிறது. எனவே அந்த இடம் ஒளியின்றி இருண்டு காணப்படு கிறது. திடீரெனத் தோன்றிய இருட்டின் காரணமா கச் சூரியன் இல்லாமற் போய்விட்டான் என்று நாம் நினைத்தால் அது தவறாகுமல்லவா? திடீரென்று பலமா கக்காற்றடிக்கிறது. அந்தக் காற்றினால் ஒன்று திரண்ட

மேகங்கள் சிதறடிக்கப்படுகின்றன. மறுபடியும் சூரியன் முன்போன்றே பிரகாசிக்கிறான். எனவே மறைத்து நின்ற மேகங்கள் அகல்கின்ற பொழுது தாற்காலிகமாக மறைக்கப்படிருந்த சூரியன் முன்போல் பிரகாசிக்கிறான். மேகங்கள் சூரியனை மறைத்த காரணத்தால் சூரியனிடத்து எவ்வித மாற்றமும் ஏற்படவில்லை. மேகங்களால் மறைக்கப்படுவதற்கு முன்னும், மறைக்கப்பட்ட பொழுதும், அதன் பின்னும் சூரியன் எந்தவித மாற்றத்திற்கும் உட்படாமல் தன் போக்கிலே பிரகாசித்துக் கொண்டிருக்கிறான்.

வானத்தில் பிரகாசித்துக்கொண்டிருக்கும் சூரியனைப் போன்று ஆத்மனும் யாண்டும் பிரகாசித்துக் கொண்டிருக்கிறது. ஆனால் சூரியப் பிரகாசத்திற்கும் ஆத்மப் பிரகாசத்திற்கும் இடையே வேறுபாடு உண்டு. சூரிய ஒளியை ஊனக்கண்களால் பார்க்க முடியும். ஆத்மப் பிரகாசத்தை ஞானக் கண்களால் உணரமட்டுமே முடியும். சூரிய ஒளியைப் பார்க்கவொட்டாது மேகக் கூட்டமானது தாற்காலிகமாகத் தடுத்துவிடுவதுபோல, ஆத்ம சைதன்யத்தை அஞ்ஞானமாகிய திரை உணரவொட்டாது தடுத்துவிடுகிறது. மேகம் அகல்கின்றபொழுது சூரிய ஒளியை மீண்டும் பார்க்க முடிகின்றது. அதுபோன்று அஞ்ஞானமாகிய மேகம் அல்லது திரை அகல்கிற பொழுது ஆத்மனாகிய சூரியன் பிரகாசிப்பதை உணரமுடியும். இங்குக் கவனிக்கவேண்டிய விஷயம், மாற்றத்திற்குட்படாது சூரியன் புறத்தே ஒளிர்ந்து கொண்டிருப்பதுபோல் ஆத்மன் எவ்வித மாற்றத்திற்கும் உள்ளாகாது அகத்தே பிரகாசித்துக் கொண்டிருக்கின்றது என்பதேயாகும்.

ஆத்மன் சச்சிதானந்தப் பரம்பொருள். அது எந்தவித மாற்றத்திற்கும் உட்படாதது. ஏனென்னில் எல்லாவித மாற்றங்களுக்கும் அது அப்பாற்பட்டது. பின் ஏன் அது பலவாகக் காட்சி தருகின்றது என்ற கேள்வி நம்முள் எழலாம் அல்லவா?. உண்மையில் ஆத்மன் பிரிக்க முடியாத

ஒன்றே. நம்முடைய அறியாமையின் விளைவாக அது நமக்குப் பலவாகக் காணப்படுகிறது. பொருளும் அது. பொருளை இருப்பதாக உணர வைக்கின்ற வஸ்துவும் அது. எல்லாம் ஆத்மன்தான். அது ஆனந்த சொரூபம. அது அறிவு சொரூபம். அது உண்மை சொரூபம். தன்னைத்தானே விளக்கவல்லது அது. பொருள்கள் இருப்பதை விளக்கிக் காட்ட நமக்கு ஒளியின் துணை வேண்டும்? ஒளியை விளக்க வேறு ஒன்றும் தேவையில்லை. ஏன்? அது தன்னைத் தானே விளக்கவல்லது. அது போல் ஆத்மன் அனைத்தாகவும், அனைத்தினது உள்ளும் புறமுமாகவும் இலங்குகிறது. அதை உணரவல்லவர் யார்? அஞ்ஞானம் அகன்றவர், உயர் ஞானம் கைவரப்பெற்றவர், உள்ளதை உணரும் உயர் அறிவு பொருந்தியவரே ஆத்மனை உணரவல்லவர் ஆவர். மற்றவரால முடியாது. மேகங்கள் அகன்றால் எவ்விதம் சூரியன் பிரகாசிக்கின்றனோ அவ்வாறு அஞ்ஞானம் அகலுகையில் ஆத்ம ஞானம் கிட்டுகிறது என்ற கருத்தை இந்த சுலோகம் விளக்குகின்றது.

## 5

अज्ञानकलुषं जीवं ज्ञानाभ्यासाद्वि निर्मलम् ।
कृत्वा ज्ञानं स्वयं नश्येज्जलं कतकरेणुवत् ॥

அக்ஞான கலுஷம் ஜீவம் ஞானாப்யாஸாத்
விநிர்மலம் ।
க்ருத்வா ஞானம் ஸ்வயம் நச்யேத் ஜலம்
கதகரேணுவத் ॥

அறியாமை யாங்கலக்க மாருமுயிர் தூய்தா
மறிவுப் பயிற்சியி னாலவ் - வறிவு
மகற்றியறி யாமை யழியுமே நீர் மா
சகற்றுந்தேற் றம்பொடியொப் பாய்.

[ஸ்ரீ ரமணர்]

ज्ञानं ஞானம்-ஞானம், (வித்தை) ஈசுவர தத்துவ அறிவு, जलं ஜலம்-நீரை, कतकरेणुवत् கதகரேணுவத்-தேத்தாங்கொட்டையின் (அரைத்த) ஈரப்பொடி (சுத்தம் செய்து தானும் கரைந்து மறைந்து விடுவது) போல, ज्ञानाभ्यासात् ஞானாப்யாஸாத்-ஞானத்தை அடிக்கடி பயிலுவதாலேயே, अज्ञानकलुषं அஞ்ஞான கலுஷம்-அக்ஞானத்தால் களங்கமுற்ற, जीवं ஜீவம்-ஜீவனை निर्मलं நிர்மலம்-நிர்மலமற்றதாக, कृत्वा க்ருத்வா-செய்து, स्वयं ஸ்வயம்-தானும், नश्येत् நச்யேத்-அழிந்து விடும்.

கருத்துரை:- தேத்தாங்கொட்டை நீரையும் சுத்தம் செய்யும், தானும் மறைந்து விடும். அதே போல அப்யாசத்தாலேயே ஞானம், அஞ்ஞானம் கவிந்த ஜீவனை நிர்மலமாக ஆக்கித் தானும் அழிந்துவிடும்.

ஆத்ம விசாரத்தில் ஈடுபட்டிருப்பவர்களுக்கு அடிக்கடி சந்தேகங்களும், கேள்விகளும் தோன்றுவது சகஜம். நமக்குத் தெரியாத ஒன்றைப் பற்றித் தெரிந்து கொள்ள முற்படுகையில் பற்பல சந்தேகங்கள் தோன்றுவது இயற்கையே. ஒன்றைப் பற்றி ஒன்றுமே தெரிந்து கொள்ள முற்படாதவர்களுக்குச் சந்தேகமே தோன்ருது. அதுபோல் தீர ஆராய்ந்து ஒரு முடிவுக்கு வந்தவர்களிடத்தும் சந்தேகங்கள் இருக்க மாட்டா. ஆனால் இவ்விரண்டு தரத்தாருக்கும் இடையில்தான் ஜிக்ஞாஸுக்கள் அதாவது ஆத்மனைப் பற்றி அறிந்து கொள்ள முற்படுவோர் அமைகின்றனர். அவர்கள் மனத்திலே அவ்வப்போது உதிக்கும் சந்தேகங்களைப் போக்குவதற்காகவே மகான்கள் அரும்பெரும் ஆத்மீக நூல்களுக்கு உரைகளை இயற்றியிருக்கின்றனர். அவற்றைப் படிப்பதால் ஐயங்கள் அகலும்.

ஜீவன் உண்மையில் ஆத்ம சொரூபமே என்பதுதான் முனிவர்கள் கருத்து. அப்படியிருக்கையில் ஏன் ஜீவன்களாகிய நாம் இவ்வளவு அல்லற்பட வேண்டும் என்ற கேள்வி சாதகர்கள் மனதில் தோன்றும். இந்த சுலோகத்தில் அந்தக் கேள்விக்கான விடை தரப்படுகிறது.

தாய் ஒருத்தி தனது குழந்தையுடன் விளையாடிக் கொண்டிருக்கிறாள். திடீரென்று விளையாட்டிற்கிடையில் தாய் உள்ளே சென்று புடவைத் தலைப்பால் தனது முகத்தை மூடிக்கொண்டு குழந்தையின் முன் தோன்றுகிறாள். தன் முன் வந்திருப்பது யாரோ புதிய நபர், அந்த நபர் முகத்தை மூடிக்கொண்டிருப்பதைப் பார்த்துப் பயந்து போய் குழந்தை 'வீல்' என்று கத்துகிறது. குழந்தை அழுவதைக் காணச் சகியாத தாய் சிறிது சிறிதாக முகத்தை மறைத்திருக்கும் தனது புடவைத் தலைப்பை நீக்குகிறாள். மிகவும் ஆர்வத்தோடு எதிரே நிற்கும் நபரது முகத்தையே உற்று நோக்கிக் கொண்டிருக்கும் குழந்தை சிறிது சிறிதாகத் தனது அழுகையையும் குறைக்கிறது. தன் முன் நிற்பது தனது தாய்தான் என்பதைத் தெரிந்து கொண்ட குழந்தை இப்பொழுது மிகவும் தைரியத்துடன் புடவைத் தலைப்பைத் தன் கையால் பற்றி இழுத்து மறைப்பை நீக்கி, மறுபடியும் முன் போல் தாயுடன் சிரித்து விளையாட ஆரம்பிக்கிறது. ஆரம்பத்தில் சிரித்து விளையாடிக்கொண்டிருந்த அந்தக் குழந்தை இடையிலே அழக்காரணம் என்ன? தாயினுடைய முகத்தை மறைத்த திரை. திரை நீங்கிய பொழுது அல்லது நீக்கப்பட்ட பொழுது அது இன்பமடைகின்றது. மேற்கூறப்பட்ட குழந்தையின் நிலையில்தான் நாம் இருக்கிறோம். நமது நிஜசொரூபம் இந்த உடலல்ல. உண்மையில் நாம் ஆத்ம சொரூபம் என்ற உணர்வு ஏற்படும் வரை நாம் தொல்லைகள், துன்பங்களுக்கு உட்படுகின்றோம். ஆத்ம ஞானம் கைவரப் பெறும் நிலையில் உண்மை இன்பத்தை அனுபவிக்கிறோம். ஏனெனில் அப்பொழுது மனதின் அலைவுகள் ஒடுங்குகின்றன. அந்த நிலைமையில் ஆத்ம ப்ரகாசத்தை மனது அப்படியே பிரதிபலிக்கிறது. மனது மாசற்றதாகிறது. மனது என்னும் கண்ணாடியில் மாசுகள் இருப்பின் ஆத்மனது பிரகாசம் உள்ளபடி அதில் பிரதிபலிக்கப்படுவதில்லை.

மனது அடங்க அடங்க அதனது சஞ்சலத்தன்மை குறைகிறது. மனது முற்றிலும் அடங்கிவிடின் நிஸ் சலத்தன்மை வந்தெய்துகிறது. மனம் என்பது என்ன? எண்ணங்களின் தொகுப்பே மனம். எனவே எண்ணங் கள் படிப்படியாக அகல்கின்ற பொழுது மனதினுடைய விருத்திகளும் அடங்கி ஒடுங்குகின்றன. இதைக் கருத்தில் கொண்டுதான் "யோக: சித்த விருத்தி நிரோத:" என்று யோக சூத்திரம் மனதை அடக்குதலே யோகம் என்று யோகத்திற்கு இலக்கணம் கூறுகிறது.

கண்ணாடியில் படிந்திருக்கும் தூசியானது பொருள் கள் அதில் நன்கு பிரதிபலிக்கப்படுவதற்கு இடையூறாக அமைவது போன்று அஞ்ஞானத்தின் வசப்பட்டிருக்கும் ஜீவன் தூய்மையற்றதாகக் காட்சி தருகிறது. தானல்லாத தைத் தானென எண்ணுவது அஞ்ஞானம். நிலையற்றதை நிலைத்திருப்பதாகக் கருதுவது அஞ்ஞானம். அழியும் உடலை அழியாத ஆன்மா என எண்ணுதல் அஞ்ஞா னம். இத்தகைய அஞ்ஞானத்தால் களங்கமடைந்திருக்கும் ஜீவனைப் பரிசுத்தப்படுத்துவதற்கான வழி ஞானப்பயிற்சி யொன்றுதான். அதாவது "நான் உண்மையில் இந்த அழி யும் உடல் அல்ல. இந்திரியங்கள் அல்ல. மனம் அல்ல. புத்தியல்ல. இவையனைத்தையும் கடந்து நிற்கும் அழி யாத ஆத்மாவே நான்" என்ற எண்ணத்தில் இடையறாது நிலைத்து நிற்பதேயாகும். இத்தகைய ஞானம் கைவரப் பெறுகையில் அஞ்ஞானம் தானே நசித்துப் போகிறது. இறுதியில் 'நான் ஆத்மா' என்ற எண்ணமும் இல்லாதா கித் தன்னில் தானாய்த் தன்மயமாய் நிற்கும் தனிப்பெரு நிலையை அடையும் பேறு கிடைக்கிறது.

சுடுகாட்டில் பிணத்தைச் சுடுவதற்குப் பிணம் எரிக் கும் பணியாள் ஒரு தடியைப் பயன்படுத்துவான். அந்தத் தடியைக் கொண்டு அவன் பிணத்தை இப்புறமும் அப்பு றமும் திருப்பிப் போடுவான். இறுதியில் அவன் அந்தத்

தடியையும் எரியும் தீயில் போட்டு விடுவான். அந்தப் பிணம் சுடுதடி போல், நான் ஆத்மா என்ற எண்ணமும் மறைந்து போய் ஞான சொரூபமே இறுதியில் எஞ்சி நிற்கிறது.

கலங்கியிருக்கும் தண்ணீரைத் தெளிய வைப்பதற்குத் தேத்தாங் கொட்டையைப் பொடி செய்து அதைப் பயன் படுத்துவது நம் முன்னோரது வழக்கம். தேத்தாங் கொட்டைப் பொடியைக் கலங்கிய நீரில் போட்டால் அது நீரில் உள்ள தூசியையெல்லாம் கீழே படியச்செய்து தானும் அடியில் வந்து படிந்து கொள்ளும். பிறகு தெளிந்த நீரை வடிகட்டிப் பிரித்து விடலாம். இந்தக் காலத்தில் நீரைச் சுத்தம் செய்ய ஆலம் என்ற ஒரு இரசாயனப் பொருள் பயன்படுத்தப்படுகின்றது. கலங்கிய தண்ணீரைத் தெளிய வைத்து இறுதியில் தேத்தாங் கொட்டைப் பொடியும் மறைந்து போவது போல், ஞானம் கைவரப்பெறுகையில் அஞ்ஞானம் இல்லாதாகி இறுதியில் ஆத்மஸாக்ஷாத்காரம் கிட்டுகிறது என்பதை இந்த சுலோகம் நமக்கு விளக்குகிறது.

## 6

संसारः स्वप्नतुल्यो हि रागद्वेषादि संकुलः ।
स्वकाले सत्यवद्भाति प्रबोधे सत्यसद्भवेत् ॥

ஸம்ஸார: ஸ்வப்னதுல்யோ ஹி ராகத்வேஷாதி
ஸங்குல: ।
ஸ்வகாலே ஸத்யவத் பாதி ப்ரபோதே
ஸத்யஸத்பவேத் ॥

விருப்புவெறுப் பாதி விகாரசம் சாரத்
திருப்புங் கனாவுக் கிணையஃ-துருப்படும்

போதுமெய் போலப் பொலியுமே போதமுறி
போததுவும் பொய்யாகிப் போம.'

|ஸ்ரீ ரமண்ணர்|

रागद्वेषादिसंकुलः ராகத்வேஷாதி ஸங்குல: - ராகம் துவேஷம் (விருப்பு வெறுப்புச்) செறிந்த, संसारः ஸம்ஸார: உலகம். - स्वप्नतुल्यो हि ஸ்வப்னதுல்யோ ஹி - கனவு போன்றதே. அது, स्वकाले ஸ்வகாலே - தன்காலத்தில், सत्यवत ஸத்யவத் - உண்மை போல. भाति பாதி - ஒளிர்கின்றது. प्रबोधे सति பிரபோதேஸதி - விழிப்பு எற்பட்ட காலத்தில் (ஞானம் எற்பட்ட நிலையில் ) असत् भवेत् அஸத் பவேத் - பொய்யாகிவிடும்.

கருத்துரை:- கனவு நிகழும் போது உண்மை போலிருக்கிறது. விழித்தால் அது பொய்யாகிவிடும். அதே போல் விருப்பு வெறுப்பு முதலியவை செறிந்த (இந்த விழிப்பு) உலகமும் அனுபவிக்கும் போது உண்மை போலிருக்கிறது. ஆத்ம ஞானமெனும் உண்மையான விழிப்பு ஏற்பட்டால் இது பொய்யாகிவிடும்.

ஞானிகள் உலகைக் கனவிற்கு ஒப்பிடுவது வழக்கம். கனவின்பொழுது மனது எப்படியெல்லாமோ நிலைகளைத் தோற்றுவித்துக் கொள்கின்றது. பிச்சைக்காரன் ஒருவன் கனவில் தன்னை அரசனாகக் காண்கிறான். கனவு நிலையில் தான் சிம்மாசனத்தில் அமர்ந்திருப்பது போலவும், தன்னைச் சுற்றி வீரர்கள் பலர் அணிவகுத்து நிற்பது போலவும் கனவு காண்கிறான். அப்படி அவன் கனவு கண்டு கொண்டிருக்கையில் திடீரென்று காலில் ஏதோ ஒரு பூச்சி கடிக்கவே காலைப் படாரென்று உதறுகிறான். அப்பொழுது அவன் படுத்திருக்கும் நடைபாதையில் கிடக்கின்ற ஒரு கல்லோடு அவனது கால் மோதுகிறது. அப்பொழுது எற்பட்ட வலி பொறுக்க முடியாமல்

காலைப் பிடித்துக் கொண்டு "ஐயோ" என்று தூக்கம் கலைந்து எழுந்து உட்காருகின்றான். இது வரை கனவில் தன்னை அவன் அரசனாகக் கண்டான். இப்பொழுது கனவு நிலை மாறி நினைவு நிலைக்குத் திரும்பியதும் தன்னைப் பழைய பிச்சைக்காரனாகவே உணருகிறான். இப்பொழுது ஒரு சிறு கேள்வி. கனவில் அவன் அரசனாக இருந்தது உண்மையா அல்லது நனவில் பிச்சைக் காரனாக இருப்பது உண்மையா? இப்படி ஒரு கேள்வி கேட்கப்படின் நாம் என்ன பதில் கூறுவோம்? இரண்டும் உண்மைதான். கனவு நிலையில் அவன் அரசனாக இருந்தது உண்மை. நனவு நிலையில் அவன் பிச்சைக் காரனாக இருப்பது உண்மை. மற்றொரு கோணத்தில் பார்த்தால் இரண்டும் பொய். எப்படி? அவன் கனவு கண்டு கொண்டிருந்த நிலையில் அவனது பிச்சைக்கார நிலைமை பொய். ஏனெனில் கனவு நிலையில் அவன் அரசன். அது போல் நினைவு நிலையில் அவன் கனவில் அரசனாக இருந்தது பொய். தூக்கம் கலைந்து எழுந்தி ருக்கையில் கனவில் கண்டதெல்லாம் பொய்யாகத் தோற் றமளிக்கிறது. கனவில் அண்டத்தையெல்லாம் ஆண்ட அரசனாக நான் இருந்தேன் என்று அவன் கூறினால் அதை யார் பொருட்படுத்துவர்? பிறர் நம்பினாலும் நம் பாவிட்டாலும் அவனளவில் அவன் கண்டது பொய்யல்ல. உண்மையே. ஆனால் நினைவு நிலையில் அவன் கண்ட கனவு அவனுக்கே பொய்யாகத் தோற்றமளிக்கிறது.

சினிமாப் படத்தை ஒருவன் பார்த்துக் கொண்டிருக்கி றான். அதில் காடு ஒன்று தீப்பற்றி எரிந்து கொண்டிருப் பதாகக் காட்சி வருகிறது என்று வைத்துக் கொள்வோம். மேலும் மேலும் பலமாகக் காற்றடிக்கிறது. நெருப்போடு காற்றும் சேர்ந்து விட்டால் கேட்பானேன். மடமட வென்று காட்டுத் தீ பரவுகிறது. இதைப் பார்த்துக் கொண்டிருந்த ஒருவன் தான் உட்கார்ந்திருப்பது சினிமாக் கொட்டகை, தான் பார்ப்பது வெறும் திரையில் காட்

டப்படும் படம் என்பதையும் மறந்து "ஐயோ! ஐயோ! யாராவது தண்ணீர் கொண்டு வாருங்கள்! தீ மென்மேலும் பரவுகிறது. இன்னும் சிறிது நேரத்தில் அனைத்தும் அழிந்துபோய்விடும் போலிருக்கிறது, சீக்கிரம் தண்ணீர் கொண்டு வாருங்கள்," என்று தன்னை மறந்து கத்தி விடுகிறான். கத்திய பிறகு சுற்றும் முற்றும் பார்க்கிறான். வெட்கமடைந்து உட்கார்ந்து விடுகிறான். ஏன்! தான் காண்பது வெறும் திரைப்படம் என்பதை மறந்து அந்தக் காட்சியுடன் தன்னைத் தாற்காலிகமாக ஒன்று படுத்திக் கொண்டு விடுகிறான். சுய உணர்வு அல்லது உண்மை அறிவு வரப்பெற்றவுடன் தான் பார்ப்பது வெறும் தோற்றமே, உண்மை அல்ல என்ற உணர்வு வரப்பெறுகிறான். அது போல் நாம் காணும் இந்த உலகமும் கனவிற்கு நிகர். இல்லாத ஒன்று இருப்பது போல் தோற்றமளிக்கிறது. ஸ்தூலமாகப்பார்க்கப்படும் இந்தப் பொருள்களை எப்படி இல்லையென்று கூறுவது என நம்மில் பலர் ஐயம் கொள்கின்றோம். இதைக் கீழ்க்காணும் சிறு கதை நன்கு விளக்கும்.

ஒருவனுக்கு மணமாகிப் பல்லாண்டுகள் குழந்தைப் பேறு வாய்க்காமலிருந்தது. வெகு நாட்களுக்குப் பிறகு அவனுக்கு ஒரு ஆண் மகவு பிறந்தது. அக்குழந்தையை அவன் கண்ணின் மணியெனக் கருத்தோடு வளர்த்தான். இப்படியிருக்கையில் திடீரென்று அக்குழந்தை நோய்வாய்ப் பட்டது. நாளாக நாளாக நோய் முற்றியதே தவிர நீங்கும் அறிகுறி தென்படவில்லை. எவ்வளவோ வைத்தியம் செய்து பார்த்தும் பலனளிக்கவில்லை. அவன் சிறிது வேதாந்த அறிவு படைத்தவன். நடப்பதெல்லாம் நன்மைக்கே என்ற எண்ணத்தில் ஊறியவன். ஒரு நாள் அவன் ஆழ்ந்து உறங்குகையில் கனவு ஒன்று கண்டான். கனவில் அவன் வெகு தூரத்திற்கப்பாலிருக்கும் ஒரு ராஜ்யத்திற்குச் செல்கின்றான். இவனது அழகைக் கண்டு அந்த தேசத்து அரசன் தனது ஒரே குமாரியை

இவனுக்கு மணம் முடித்து வைக்கிறான். இவனிடம் அந்த ராஜ்யத்தின் அரசாட்சியையும் ஒப்படைக்கிறான். நாளடைவில் ஒன்று, இரண்டு, மூன்று என்று அவன் ஏழு குழந்தைகளைப் பெற்றெடுக்கிறான். ஏழு ராஜ குமாரர்களும் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்கின்றனர். அவர்களிடம் அவன் மிகவும் பற்றுதல் கொண்டு விளங்கினான். ஒரு நாள் இரவு திடீரென்று அந்தப் பகுதியில் பூகம்பம் ஏற்பட்டது. மடமடவென்று கட்டிடங்களெல்லாம் சரிந்தன. பயந்து போன இந்த அரசன் மனைவியுடன் வெளியே எழுந்து ஓடினான். அரசகுமாரர்கள் படுத்திருந்த பகுதியை நோக்கி வேகமாக ஓடினான். ஐயோ! பாவம்! அரச குமாரர்கள் தூங்கிக் கொண்டிருந்த பகுதி தரைமட்டமாக இடிந்து கிடந்தது. அவனது ஏழு குமாரர்களும் இறந்து போயினர். அரசன் அடைந்த துக்கத்திற்கு அளவேயில்லை.

அந்த நிலைமையில் அவனது மனைவி அலறிக் கொண்டே, "எழுந்திருங்கள்! எழுந்திருங்கள்! நம்முடைய ஒரே குழந்தை நோயின் மிகுதியால் மரணமடைந்து விட்டது" என்று வாயிலும் வயிற்றிலும் அடித்துக்கொண்டே அவனை எழுப்பினாள். அதைக்கேட்ட அவன் சற்றும் பரபரப்பின்றி படுக்கையில் எழுந்து உட்கார்ந்தான். உட்கார்ந்தவன் அவளையே வெறிக்கப்பார்த்தான். அவனது நிலைமையைக் கண்ட அவனது மனைவி, "என்ன! நான் சொல்வது காதிலே விழவில்லையா?" என்று அவனை உலுப்பினாள். அவனும் அமைதியான குரலில், "நீ சொல்வது காதிலே விழுகிறது. கனவிலே இழந்த ஏழு அரச குமாரர்களுக்காக நான் அழுவதா, அல்லது நனவு நிலையில் இழந்த ஒரு குழந்தைக்காக அழுவதா என்று தெரியாமல் தவிக்கிறேன்", என்று பதில் சொன்னான்.

டப்படும் படம் என்பதையும் மறந்து "ஐயோ! ஐயோ! யாராவது தண்ணீர் கொண்டு வாருங்கள்! தீ மென்மேலும் பரவுகிறது. இன்னும் சிறிது நேரத்தில் அனைத்தும் அழிந்துபோய்விடும் போலிருக்கிறது, சீக்கிரம் தண்ணீர் கொண்டு வாருங்கள்," என்று தன்னை மறந்து கத்தி விடுகிறான். கத்திய பிறகு சுற்றும் முற்றும் பார்க்கிறான். வெட்கமடைந்து உட்கார்ந்து விடுகிறான். ஏன்! தான் காண்பது வெறும் திரைப்படம் என்பதை மறந்து அந்தக் காட்சியுடன் தன்னைத் தாற்காலிகமாக ஒன்று படுத்திக் கொண்டு விடுகிறான். சுய உணர்வு அல்லது உண்மை அறிவு வரப்பெற்றவுடன் தான் பார்ப்பது வெறும் தோற்றமே, உண்மை அல்ல என்ற உணர்வு வரப்பெறுகிறான். அது போல் நாம் காணும் இந்த உலகமும் கனவிற்கு நிகர். இல்லாத ஒன்று இருப்பது போல் தோற்றமளிக்கிறது. ஸ்தூலமாகப்பார்க்கப்படும் இந்தப் பொருள்களை எப்படி இல்லையென்று கூறுவது என நம்மில் பலர் ஐயம் கொள்கின்றோம். இதைக் கீழ்க்காணும் சிறு கதை நன்கு விளக்கும்.

ஒருவனுக்கு மணமாகிப் பல்லாண்டுகள் குழந்தைப் பேறு வாய்க்காமலிருந்தது. வெகு நாட்களுக்குப் பிறகு அவனுக்கு ஒரு ஆண் மகவு பிறந்தது. அக்குழந்தையை அவன் கண்ணின் மணியெனக் கருத்தோடு வளர்த்தான். இப்படியிருக்கையில் திடீரென்று அக்குழந்தை நோய்வாய்ப் பட்டது. நாளாக நாளாக நோய் முற்றியதே தவிர நீங்கும் அறிகுறி தென்படவில்லை. எவ்வளவோ வைத்தியம் செய்து பார்த்தும் பலனளிக்கவில்லை. அவன் சிறிது வேதாந்த அறிவு படைத்தவன். நடப்பதெல்லாம் நன்மைக்கே என்ற எண்ணத்தில் ஊறியவன். ஒரு நாள் அவன் ஆழ்ந்து உறங்குகையில் கனவு ஒன்று கண்டான். கனவில் அவன் வெகு தூரத்திற்கப்பாலிருக்கும் ஒரு ராஜ்யத்திற்குச் செல்கின்றான். இவனது அழகைக் கண்டு அந்த தேசத்து அரசன் தனது ஒரே குமாரியை

இவனுக்கு மணம் முடித்து வைக்கிறான். இவனிடம் அந்த ராஜ்யத்தின் அரசாட்சியையும் ஒப்படைக்கிறான். நாளடைவில் ஒன்று, இரண்டு, மூன்று என்று அவன் ஏழு குழந்தைகளைப் பெற்றெடுக்கிறான். ஏழு ராஜ குமாரர்களும் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்கின்றனர். அவர்களிடம் அவன் மிகவும் பற்றுதல் கொண்டு விளங்கினான். ஒரு நாள் இரவு திடீரென்று அந்தப் பகுதியில் பூகம்பம் ஏற்பட்டது. மடமடவென்று கட்டிடங்களெல்லாம் சரிந்தன. பயந்து போன இந்த அரசன் மனைவியுடன் வெளியே எழுந்து ஓடினான். அரசகுமாரர்கள் படுத்திருந்த பகுதியை நோக்கி வேகமாக ஓடினான். ஐயோ! பாவம்! அரச குமாரர்கள் தூங்கிக் கொண்டிருந்த பகுதி தரைமட்டமாக இடிந்து கிடந்தது. அவனது ஏழு குமாரர்களும் இறந்து போயினர். அரசன் அடைந்த துக்கத்திற்கு அளவேயில்லை.

அந்த நிலைமையில் அவனது மனைவி அலறிக் கொண்டே, "எழுந்திருங்கள்! எழுந்திருங்கள்! நம்முடைய ஒரே குழந்தை நோயின் மிகுதியால் மரணமடைந்து விட்டது" என்று வாயிலும் வயிற்றிலும் அடித்துக்கொண்டே அவனை எழுப்பினாள். அதைக்கேட்ட அவன் சற்றும் பரபரப்பின்றி படுக்கையில் எழுந்து உட்கார்ந்தான். உட்கார்ந்தவன் அவளையே வெறிக்கப்பார்த்தான். அவனது நிலைமையைக் கண்ட அவனது மனைவி, "என்ன! நான் சொல்வது காதிலே விழவில்லையா?" என்று அவனை உலுப்பினாள். அவனும் அமைதியான குரலில், "நீ சொல்வது காதிலே விழுகிறது. கனவிலே இழந்த ஏழு அரச குமாரர்களுக்காக நான் அழுவதா, அல்லது நனவு நிலையில் இழந்த ஒரு குழந்தைக்காக அழுவதா என்று தெரியாமல் தவிக்கிறேன்", என்று பதில் சொன்னான்.

ஜாக்ரத், ஸ்வப்ன, ஸுஷுப்தி என்ற பல நிலைகளில், ஒரு நிலையில் காண்பது அல்லது அனுபவிப்பது மற்றொரு நிலையில் பொய்யாகி விடுகின்றது. கனவற்ற ஸுஷுப்தி நிலையில் நனவு நிலை, கனவு நிலை ஆகிய இரு நிலைகளிலும் கண்டவையனைத்தும் பொய்யாகி விடுகின்றது. துரீயத்தில் இந்த மூன்று நிலைகளில் இருந்தவை அனைத்தும் இல்லையென்றாகிவிடுகின்றன.

கண்ணால் பார்க்கின்ற அனைத்தும் உண்மையல்ல, பொய்த்தோற்றங்களே என அறிந்து ஒவ்வொன்றாக "இது அல்ல, இது அல்ல" என்று நீக்கி இறுதியில் அவற்றின் பின் உறையும் சச்சிதானந்தப் பரம் பொருளே நாம் என அறிவு வரப்பெற்ற பிறகு அந்த ஒன்றுதான் மெய்ப்பொருள் என்ற உணர்வு வாய்க்கப்பெறும்.

அஞ்ஞானத்தின் காரணமாக இல்லாததை இருப்பதாக உணர்கின்றோம். உலகப்பொருள்களில் நாம் கொண்டு விளங்கும் விருப்பு - வெறுப்பு அல்லது ராகத்வேஷம் தான் பொய்யான உலகை மெய்யாக நமக்குத் தோன்றச் செய்கின்றன. ராகம் அல்லது பற்றுதல் இருக்கும் வரை ஒரு பொருள் நமக்குப் பிரியமானதாகக் காட்சி தருகிறது. திடீரென நடந்த ஏதோ ஒரு சிறு நிகழ்ச்சியின் விளைவாக அப்பொருளினிடத்து நமக்கு வெறுப்பு ஏற்பட்டு விடுகிறது. வெறுப்பு உண்டானவுடன் இதுவரை வேண்டியதாகக் காணப்பட்ட அந்தப் பொருள் இப்பொழுது வேண்டாத ஒன்றாகக் காணப்படுகிறது. நம்முடைய ஒவ்வொருவருடைய அன்றாட வாழ்க்கையில் நடக்கும் நிகழ்ச்சிகளே இதற்கு நல்ல சான்றாகும். பல ஆண்டுகளாக ஒருவன் நமக்கு நண்பனாக இருக்கின்றான். அவனின்றி நாம் இல்லை, ஈருடல் ஓருயிர் என்றெல்லாம் அவனைப் பற்றிப் பேசுகின்றோம். திடீரென்று ஒரு நாள் அவனுக்கும் நமக்கும் ஒரு சிறு சச்சரவு மூண்டு விடுகிறது. சச்சரவு முற்றுகிறது. நட்பு முறிகிறது. பகைமை வளர்கிறது.

இனி அவனது முகத்தில் விழிப்பதே தவறு என்ற முடிவிற்கு வந்து அவனை ஜன்ம விரோதியாகக் கருதத் துவங்குகின்றோம். ஆக, ஒரே நபர் ராகம் அல்லது பற்றுதல் இருக்கும் வரை நண்பனாகக் காட்சி தருகின்றான். அதே நபர் த்வேஷம் அல்லது பகைமை வருகின்ற பொழுது விரோதியாகக் காட்சி தருகின்றான். நமது ஒவ்வொரு செயலையும் ஆராய்ந்தால் ராகம்- த்வேஷம் ஆகிய இரண்டு சங்கிலிகள் நம்மை இறுகப் பிணைப்பதை நாம் உணரலாம். உண்மைநிலை ராகம் த்வேஷம் ஆகிய இரண்டு நிலைகளுக்கும் அப்பாற்பட்டது.

விருப்பு வெறுப்புக்கள் நிறைந்த இந்த சம்சாரமானது வெறும் கனவிற்கு நிகர். அஞ்ஞானத்தில் உழல்கின்றவரை அது உண்மை போலத் தென்படுகின்றது. ஞானம் பெற்று விழித்தெழுந்தவனுக்கு இந்த உலகம் பொய்யாகக் காட்சி தருகின்றது. உலகத்தைப் பற்றிய இந்த உண்மை நிலைமையை, வாழ்வினைப் பற்றிய அடிப்படைத் தத்துவத்தை இந்தச் சுலோகம் அழகுற விளக்குகின்றது.

## 7

तावत्सत्यं जगद्भाति शुक्तिकारजतं यथा।
यावन्न ज्ञायते ब्रह्म सर्वाधिष्ठानमद्वयम् ॥

தாவத் ஸத்யம் ஜகத்பாதி சுக்திகா ரஜதம் யதா।
யாவன் ந க்ஞாயதே ப்ரம்ம ஸர்வாதிஷ்டான
மத்வயம் ॥

எவ்வளவு கால மெவைக்குமதிட் டானமா
மவ்விய மாம்பிரம மாய்ந்தறித-லொவ்விடா
தத்துணைக் கால மகிலமுமெய் யாய்த்
தோன்றுஞ்
சுத்திவெள்ளி போலத் துணி.

[ஸ்ரீரமணர்]

यथा யதா-எப்படி, शुक्तिका சுக்திகா-சிப்பியில், रजतं ரஜதம்-வெள்ளியோ (உண்மையாகக் காணப்படுகிறதோ) அப்படியே, यावत् யாவத்-எது வரையில், सर्वाधिष्ठानं சர்வாதிஷ்டானம்-எல்லாப் பொருள்களுக்கும் அடிப்படையில் உள்ள, अद्वयम् அத்வயம்-அந்த (இரண்டாவது இல்லாத) தனி ஒரு பொருளான, ब्रह्म ப்ரம்ம-ப்ரம்மம், न ज्ञायते ந ஞாயதே-அறியப்படுகிறதில்லையோ तावत् தாவத்-அதுவரை, जगत् ஜகத்-உலகம், सत्यं ஸத்யம்-உண்மையாகப், भाति பாதி-பிரகாசிக்கின்றது (தெரியவருகிறது.)

கருத்துரை:- அடிப்படையான பிரம்மம் அறியப்படாதவரை சிப்பியில் வெள்ளிக்காசு போல உலகம் மெய் போலத் தோன்றுகிறது. பிரம்மத்தை அறிந்தால் உடனே உலகம் பொய் ஆகிவிடுகிறது.

உலகம் கனவிற்கு நிகர். அறியாமையில் ஒருவன் உழலும் வரை அது அவனுக்கு உண்மை போலத் தோற்றம் தருகிறது. உண்மை அறிவு வரப்பெற்றவுடன் உலகத்தின் உண்மை நிலையை அவன் உணர்கிறான் என்பது சென்ற சுலோகத்தின் சுருக்கமாக அமைகிறது. இந்த சுலோகத்தில் அந்தக் கருத்து மற்றுமொரு அரிய உதாரணத்தால் நன்கு விளக்கப்படுகிறது.

பொதுவாக உலகம் அல்லது 'ஜகத்' என்னும் பொழுது நாம் சாதாரணமாக் கண்ணுக்குப் புலனாகும் பகுதியை மட்டுமே உலகம் எனக்கொள்கிறோம். உண்மையில் இது நாம் ஜகத் என்னும் சொல்லால் எதைக் குறிப்பிடுகின்றோமோ அதில் ஒரு பகுதியேயாகும். நமது தினசரி வாழ்வில் நாம் மூன்று வித நிலைமைகளுக்குள்ளாகிறோம். ஜாக்ரத், ஸ்வப்ன, ஸுஷுப்தி என்பவையே அந்த மூன்று நிலைகளாகும். அவை முறையே விழிப்பு, கனவு, ஆழ்ந்த உறக்க நிலை என்று பொருள்படுகின்றன. இந்த மூன்று நிலைகளிலும் மனிதன் வெவ்வேறு விதமான அனுபவங்களுக்குள்ளாகிறான். இந்த அனுபவங்களின் தொகுப்பாக நாம் எவ்வெவற்றையெல்லாம் உணர்கின்றோமோ அவையனைத்தும் சேர்ந்து ஜகத் என்று பொருள்படுகிறது.

விழிப்பு நிலையில் சரீரம் செயல்படுகிறது. சரீரம் செயல்படுகின்ற பொழுது ஐம்புலன்கள் வாயிலாக நாம் அனுபவங்களைப் பெறுகிறோம். கனவு நிலையில் சரீரம் செயலற்றுச் சும்மா கிடக்கிறது. அப்பொழுது கண் பார்ப்பதில்லை; காது கேட்பதில்லை; கண், காது போன்ற புலன்கள் செயலற்றிருக்கும். அந்தக் கனவு நிலையில் நாம் பல்வேறு கனவுகளைக் காண்கிறோம். நல்ல கனவுகள், தீய கனவுகள் போன்ற பலவிதமான கனவுகளை நாம் காண்பதற்கு அடிப்படையாக அமைவது எது? மனம். எனவே கனவு நிலையில் மனம் தொழில் புரிகிறது. ஆழ்ந்த உறக்கநிலையில் சரீரம், மனம் இரண்டும் செயல்புரிவதில்லை.

இந்த ஜாக்ர, ஸ்வப்ன, ஸுஷுப்தி நிலைகளைப் பற்றிச் சற்று விளக்கமாகக் கீழே ஆராய்வோம். விழிப்பு உணர்வுடன் இருக்கும் நிலை அதாவது புலன்களின் வழியாக வஸ்துக்கள் அறியப்படுகின்ற நிலை ஜாக்ர நிலை எனப்படுகிறது. ஐம்புலன்கள் மூலம் விழிப்பு நிலையில் அறியப்படுகின்ற யாவும் மனத்திலே பதிவுகளை ஏற்படுத்துகின்றன. கண்ணால் பார்க்கப்பட்டவை, காதால் கேட்கப்பட்டவை போன்ற புலன் வழி அனுபவங்கள் யாவும் டேப்ரிக்கார்டரில் பொருத்தப்பட்டிருக்கும் டேப் அல்லது நாடாவில் ஒலிப் பதிவது போல மனதில் பதிந்து விடுகின்றன. உறங்கிக்கொண்டிருக்கும் பொழுது கனவு காண்கிறோமல்லவா? அந்தக் கனவு நிலையில் மனமானது விழிப்பு நிலையில் உண்டாக்கப்பட்ட பதிவுகளின் மூலம் வஸ்துக்களைப் பார்க்கும் திறனைப் பெறுகின்றது. ஆகவே விழிப்பு நிலையில் ஓடியாடித் திருந்த சரீரம் கனவு நிலையில் செயலற்றுக் காணப்படுகிறது. ஆனால் மனம் விழிப்பு நிலையில் தான் பெற்ற அனுபவங்களின் அடிப்படையில் கனவில் தொழில் புரிகிறது. ஜாக்ர நிலையில் எது பார்க்கப்படுகிறதோ, எது கேட்கப்படுகின்றதோ அவற்றின் மறைவான பதிவுகளின் மூலம் உணர்பவன்

यथा யதா-எப்படி, शुक्तिका சுக்திகா-சிப்பியில், रजतं ரஜதம்-வெள்ளியோ (உண்மையாகக் காணப்படுகிறதோ) அப்படியே, यावत् யாவத்-எது வரையில், सर्वाधिष्ठानं சர்வாதிஷ்டானம்-எல்லாப் பொருள்களுக்கும் அடிப்படையில் உள்ள, अद्वयम् அத்வயம்-அந்த (இரண்டாவது இல்லாத) தனி ஒரு பொருளான, ब्रह्म ப்ரம்ம-ப்ரம்மம், न ज्ञायते ந ஞாயதே-அறியப்படுகிறதில்லையோ तावत् தாவத்-அதுவரை, जगत् ஜகத்-உலகம், सत्यं ஸத்யம்-உண்மையாகப், भाति பாதி-பிரகாசிக்கின்றது (தெரியவருகிறது.)

கருத்துரை:- அடிப்படையான பிரம்மம் அறியப்படாதவரை சிப்பியில் வெள்ளிக்காசு போல உலகம் மெய் போலத் தோன்றுகிறது. பிரம்மத்தை அறிந்தால் உடனே உலகம் பொய் ஆகிவிடுகிறது.

உலகம் கனவிற்கு நிகர். அறியாமையில் ஒருவன் உழலும் வரை அது அவனுக்கு உண்மை போலத் தோற்றம் தருகிறது. உண்மை அறிவு வரப்பெற்றவுடன் உலகத்தின் உண்மை நிலையை அவன் உணர்கிறான் என்பது சென்ற சுலோகத்தின் சுருக்கமாக அமைகிறது. இந்த சுலோகத்தில் அந்தக் கருத்து மற்றுமொரு அரிய உதாரணத்தால் நன்கு விளக்கப்படுகிறது.

பொதுவாக உலகம் அல்லது 'ஜகத்' என்னும் பொழுது நாம் சாதாரணமாக் கண்ணுக்குப் புலனாகும் பகுதியை மட்டுமே உலகம் எனக்கொள்கிறோம். உண்மையில் இது நாம் ஜகத் என்னும் சொல்லால் எதைக் குறிப்பிடுகின்றுமோ அதில் ஒரு பகுதியேயாகும். நமது தினசரி வாழ்வில் நாம் மூன்று வித நிலைமைகளுக்குள்ளாகிறோம். ஜாக்ரத், ஸ்வப்ன, ஸுஷுப்தி என்பவையே அந்த மூன்று நிலைகளாகும். அவை முறையே விழிப்பு, கனவு, ஆழ்ந்த உறக்க நிலை என்று பொருள்படுகின்றன. இந்த மூன்று நிலைகளிலும் மனிதன் வெவ்வேறு விதமான அனுபவங்களுக்குள்ளாகிறான். இந்த அனுபவங்களின் தொகுப்பாக நாம் எவ்வெவற்றையெல்லாம் உணர்கின்றோமோ அவையனைத்தும் சேர்ந்து ஜகத் என்று பொருள்படுகிறது.

விழிப்பு நிலையில் சரீரம் செயல்படுகிறது. சரீரம் செயல்படுகின்ற பொழுது ஐம்புலன்கள் வாயிலாக நாம் அனுபவங்களைப் பெறுகிறோம். கனவு நிலையில் சரீரம் செயலற்றுச் சும்மா கிடக்கிறது. அப்பொழுது கண் பார்ப்பதில்லை; காது கேட்பதில்லை; கண், காது போன்ற புலன்கள் செயலற்றிருக்கும். அந்தக் கனவு நிலையில் நாம் பல்வேறு கனவுகளைக் காண்கிறோம். நல்ல கனவுகள், தீய கனவுகள் போன்ற பலவிதமான கனவுகளை நாம் காண்பதற்கு அடிப்படையாக அமைவது எது? மனம். எனவே கனவு நிலையில் மனம் தொழில் புரிகிறது. ஆழ்ந்த உறக்கநிலையில் சரீரம், மனம் இரண்டும் செயல்புரிவதில்லை.

இந்த ஜாக்ர, ஸ்வப்ன, ஸுஷுப்தி நிலைகளைப் பற்றிச் சற்று விளக்கமாகக் கீழே ஆராய்வோம். விழிப்பு உணர்வுடன் இருக்கும் நிலை அதாவது புலன்களின் வழியாக வஸ்துக்கள் அறியப்படுகின்ற நிலை ஜாக்ர நிலை எனப்படுகிறது. ஐம்புலன்கள் மூலம் விழிப்பு நிலையில் அறியப்படுகின்ற யாவும் மனத்திலே பதிவுகளை ஏற்படுத்துகின்றன. கண்ணால் பார்க்கப்பட்டவை, காதால் கேட்கப்பட்டவை போன்ற புலன் வழி அனுபவங்கள் யாவும் டேப்ரிக்கார்டரில் பொருத்தப்பட்டிருக்கும் டேப் அல்லது நாடாவில் ஒலிப் பதிவது போல மனதில் பதிந்து விடுகின்றன. உறங்கிக்கொண்டிருக்கும் பொழுது கனவு காண்கிறோமல்லவா? அந்தக் கனவு நிலையில் மனமானது விழிப்பு நிலையில் உண்டாக்கப்பட்ட பதிவுகளின் மூலம் வஸ்துக்களைப் பார்க்கும் திறனைப் பெறுகின்றது. ஆகவே விழிப்பு நிலையில் ஓடியாடித் திருந்த சரீரம் கனவு நிலையில் செயலற்றுக் காணப்படுகிறது. ஆனால் மனம் விழிப்பு நிலையில் தான் பெற்ற அனுபவங்களின் அடிப்படையில் கனவில் தொழில் புரிகிறது. ஜாக்ர நிலையில் எது பார்க்கப்படுகிறதோ, எது கேட்கப்படுகின்றதோ அவற்றின் மறைவான பதிவுகளின் மூலம் உணர்பவன்

வடிவாகவும் உணர்கின்ற பொருள் வடிவாகவும், புலன்கள் அடங்கியிருக்கும் பொழுது எழுகின்ற சூக்ஷ்மமானதும், அந்தரங்கமானதும், மானஸீகமானதுமான பிரபஞ்சத்தின் உணர்வானது ஸ்வப்னம் எனப்படுகிறது.

அடுத்து மூன்றுவது நிலை ஸுஷுப்தி அல்லது ஆழ்ந்த உறக்கநிலை. இந்த நிலையில் சரீரம், மனம் இரண்டும் செயல்படுவதில்லை. "நான் நல்ல தூக்கத்தை அனுபவித்தேன், எனக்கு ஒன்றுமே தெரியாது" என்கின்ற அனுபவத்தை ஜாக்கிராவஸ்தையில் நினைவுபடுத்திக் கொள்கிறோம். ஆகவே, ஜாக்ர, ஸ்வப்ன, ஸுஷுப்தி என்ற மூன்று நிலைகளிலும் மொத்தமாக நாம் பெறும் அனுபவங்களின் தொகுப்பே 'ஜகத்' ஆகிறது.

நாம் கனவு கண்டு கொண்டிருக்கும் சமயத்தில் நாம் கனவில் காணும் பொருள்கள் நமக்கு நிஜமானவையாகத் தோன்றுகின்றன. கனவு அளவிலே அவை உண்மை. ஆனால் கனவு கலைந்தவுடன் அந்தப் பொருள்களும் கூடவே மறைந்து விடுகின்றன. கனவிலே ஒருவன் அரசனாக இருந்து சுகபோகங்களை எல்லாம் அநுபவித்தது உண்மையாயிருக்கலாம். அதனால் அவனது நடைமுறை வாழ்வில் ஏதாவது பயன் இருக்குமோ? இருக்காது. கனவில் ஒருவன் தான் அரசனாக இருந்தது பற்றி மகிழ்ச்சியுறுவதிலோ அல்லது பிச்சைக்காரனாக இருந்தது குறித்து வருத்தமடைவதிலோ சிறிதும் அர்த்தமில்லை! அதுமட்டுமல்லாது, கனவு கலைந்து விழித்தவுடனே கனவில் பெற்ற அனுபவங்கள் யாவும் விழிப்பு நிலையில் செயல் புரியும் மனத்துடன் ஒன்றித்து விடுகின்றன. அதைப்போலவே, பரம்பொருளைப் பற்றிய உண்மை ஞானத்தை அடையும் வரை உலகம் பல வகைப்பட்டதாகக் காட்சி தருகிறது. "ஸர்வம் பிரம்மமயம், பலவாகத் தோன்றுவதெல்லாம் உண்மையிலே ஒன்றே" என்று உணர்வு வரப்பெற்றவுடன் வேற்றுமைகள் எல்லாம் அகன்று நமது

பல்வகையான அனுபவங்களெல்லாம் அந்த ஒரே பரம் பொருளில் ஒன்றித்து விடுகின்றன.

திரைப்படத்தை நாம் எதுவரை பார்த்துக் கொண்டிருக்கிறோமோ அதுவரை அந்தத் திரையில் காணும் காட்சிகளும் நமக்கு உண்மை போலத் தெரிகின்றன. சினிமாக் காட்சியில் மழை பெய்கிறது போலவும், தீப் பற்றியெரிவது போலவும் நாம் பார்க்கிறோம். அது வெறும் காட்சி அல்லது தோற்றம் மாத்திரமே. அதனால் அந்தத் திரைக்கோ அல்லது பார்த்துக் கொண்டிருக்கும் நமக்கோ எவ்வித ஊறும் விளையாது. சினிமா பார்த்துக் கொண்டிப்பதற்கிடையில் நாம் பார்ப்பது வெறும் திரைப்படமே என்ற உண்மை நம் மனத்தினடியில் இருப்பது போன்று, பலவகை அனுபவங்களை உலகில் பெறுவதற்கிடையில் இவையனைத்தும் நிலையல்ல, இவற்றின் பின்னுறையும் பரம்பொருளே சத் பொருள் என்ற உணர்வு நம்மிடம் இருக்கவேண்டும்.

ஆனால் அனைத்திற்கும் அடிப்படையாக இருப்பது, சர்வாதிஷ்டானமாக அமைவது, அனைத்திலும் ஊடுருவி நிற்பது, அந்த ஒரே உண்மைப் பொருளே என்ற அறிவு வரப்பெற்று தெய்வீக நிலையில் எதுவரை நிலைபெறவில்லையோ அதுவரை 'ஜகத்' உண்மையானதாகவும், மெய்ப்பொருளாகவும் தோற்றம் தந்து கொண்டிருக்கும். பரம்பொருளைப்பற்றிய ஞானம் கைவரப்பெற்றால் அந்தப் பரம்பொருள் தான் மெய், மற்றதெல்லாம் பொய் என்ற உண்மை நிலையை அடையலாம். இதை ஒரு திருஷ்டாந்தம் மூலம் ஸ்ரீசங்கரர் விளக்குகிறார்.

மாலை வேளை ஒருவன் கடற்கரையில் நடந்து சென்றுகொண்டிருக்கிறான். மாலை இளம் வெயில் பொருள்களுக்கு ஒரு தனி அழகைத் தந்து கொண்டிருக்கிறது. அப்பொழுது தூரத்தே ஒரு பொருள் மிகவும் பிரகாசத்தோடு மின்னுவதை அவன் பார்க்கிறான். அப்படி

மின்னுவது ஒரு வெள்ளி நாணயம் போலும், சூரிய ஒளியில் அப்படிப் பிரகாசிக்கிறது என எண்ணியவனாக ஓடோடியும் சென்று அது இருந்த இடத்தை அடைகிறான். அதை எடுப்பதற்காகக் கையை நீட்டுகிறான். பாவம்! பெருத்த ஏமாற்றத்திற்குள்ளாகிறான். ஏன்! அது வெள்ளியல்ல. வெள்ளி போன்று காட்சி தந்த கிளிஞ்சில் அல்லது சிப்பி! இப்பொழுது அவனுக்கு உண்மை நிலை விளங்கிவிட்டது. தன்னை ஏமாற்றிய கிளிஞ்சலைத் தூர எறிந்துவிட்டுத் தன் போக்கிலே போகிறான்.

கிளிஞ்சலில் வெள்ளி போன்று, அஞ்ஞானம் இருக்கும் வரை உலகம் மெய்யாகத் தோன்றுகிறது. அனைத்திற்கும் அடிப்படையாகவும், அனைத்துமாகவும் இயங்கும் பிரம்மத்தைப் பற்றிய உண்மை ஞானம் வரப்பெற்றவுடன் உலகம் மறைகிறது. அனைத்தும் பிரம்ம மயமாகக் காட்சி தருகிறது.

## 8

उपादाने अखिलाधारे जगन्ति परमेश्वरे ॥
सर्गस्थितिलयान् यान्ति बुद्बुदानीव वारिणि ॥

உபாதானே அகிலாதாரே ஜகந்தி பரமேஶ்வரே ।
ஸர்கஸ்திதிலயாந் யாந்தி புத்புதாநீவ வாரிணி ॥

முதற்கா ரணமாய் முழுதினா தார
மதுவாம் பரேச னகத்தே - யுததி
யுதிகுமிழி கள்போ லுலகங்க ளெல்லா
முதித்திருந் தோயு முணர்

[ஸ்ரீ ரமணர்]

वारिणि வாரிணி - நீரில், बुद्बुदानीव புத்புதாநீவ-குமிழிகள்

போல் जगन्ति ஜகந்தி-உலகங்கள், उपादाने உபாதானே-மூலப் பொருளாகவும் (உபாதான காரணமாகவும்) अखिलाधारे அகிலாதாரே-எல்லாவற்றிற்கும் ஆதாரமாகவும் உள்ள, परमेश्वरे பரமேசுவரே-பரம ஈசுவரனிடத்தில், सर्ग ஸர்க - உதயம், स्थिति ஸ்திதி-இருப்பு, लयान् லயான்-மறைவு மூன்றையும், यान्ति யாந்தி. - அடைகின்றன.

கருத்துரை: உலகங்கள் நீரிற் குமிழி போல் மூலப் பொருளிலேயே எழுந்து நின்று மறைகின்றன. அந்த மூலப்பொருளே பரப்பிரம்மமாம்.

நமது முன்னோர்கள் பன்னெடுங்காலம் ஆராய்ச்சி செய்து சிருஷ்டியைப் பற்றிப் பல அரிய கருத்துக் களை நமக்குத் தொகுத்துத்தந்திருக்கின்றனர். பிறநாட் டைச் சார்ந்த அறிஞர்கள் பலரது கருத்துக்களுக்கெல்லாம் மேம்பட்ட பல அரிய பெரிய விளக்கங்கள் நமது புராதன நூல்களிலே காணக்கிடைக்கின்றன. அன்று நம் நாட்டுத் தத்துவ அறிஞர்கள் தங்களது தத்துவ ஆராய்ச்சியின் விளைவாக சிருஷ்டியைப் பற்றிக் கண்டறிந்த பல உண் மைகள் விஞ்ஞான விளக்கங்கள் பலவற்றைக்காட்டிலும் சிறந்து விளங்குகின்றன எனில் அது மிகையாகாது.

இந்த சுலோகத்தில் சிருஷ்டியைப் பற்றிய அழகிய விளக்கம் தரப்படுகின்றது. இங்குத் தரப்படுகின்ற விளக்கம் இன்றைய விஞ்ஞானக்கருத்துக்களோடு மிகவும் அழகிய முறையில் இணைந்து போவதைக் காணலாம்.

எந்தப் பொருளையும் உற்பத்தி செய்யவோ அல்லது ஒரேயடியாக இல்லாததாக்கவோ மனிதனால் முடியாது என்பது நவீன விஞ்ஞான சாஸ்திரத்தின் அடிப்படை. அணுக்களை மனிதனால் உற்பத்தி செய்யவோ அல்லது அழிக்கவோ முடியாது என்று அது கூறுகிறது. அணு

விஞ்ஞானத்தின் அடிப்படையாக அமைவது டால்டனின் அணுக்கொள்கை. நாம் செய்யக்கூடியதெல்லாம் பல்வேறு பொருள்களிடத்து மாற்றங்கள் பலவற்றை ஏற்படுத்துவதுதான். சில மாற்றங்கள் தற்காலிகமானவை. மற்றும் சில நிரந்தரமானவை. சில பௌதிக மாற்றங்கள் ஆகவும் மற்றும் சில ரசாயன மாற்றங்கள் ஆகவும் அமைகின்றன. திடப்பொருள் திரவமாகிறது. திரவம் வாயுவாகிறது. வாயு திரவமாகிறது. இதுபோன்ற மாற்றங்கள் இயற்கையில் ஓயாது நிகழ்ந்து கொண்டேயிருக்கின்றன. நம்மைப் பொருத்தமட்டில் பொருளிடத்தில் ஏற்படும் உருவ, பெயர் மாற்றங்களே சிருஷ்டி எனப்படுகிறது. ஒன்று மற்றொன்றாக மாற்றப்படுதலே சிருஷ்டியாகிறது. இந்த விதமாக ஒரு பொருளை உண்டாக்க அடிப்படையான காரணம் மூன்று பகுதிகளாகப் பிரிக்கப்படுகிறது. இம் மூன்று பகுதிகளும் சேர்ந்து அந்தப் பொருள் தோன்றக் காரணமாயமைகின்றன.

மூன்று விதமான காரணங்கள் சேர்ந்தால்தான் ஒரு பொருள் தோன்ற முடியும். அவை முறையே உபாதான காரணம் (material cause), நிமித்த காரணம் (efficient cause), சமவாய காரணம், (instrumental cause) என்பனவாகும். உதாரணமாகக் குயவன் ஒருவன் ஒரு பானையை உருவாக்குவதாகக் கொள்வோம். பானை தயாரிக்க என்னென்ன பொருள்கள் தேவை? களிமண் வேண்டும். சக்கரம் வேண்டும். களிமண்ணும், சக்கரமும் மட்டும் இருந்தால் போதாது. அனைத்திலும் முக்கியம் மண்ணுக்குப் பானை உருவம் கொடுக்கும் குயவன். களிமண், சக்கரம், குயவன ஆகிய மூன்றும் பானை செய்வதற்கு இன்றியமையாதவை. இம்மூன்றில் குயவன் நிமித்த காரணம், சக்கரம் சமவாய காரணம், மண் உபாதான காரணம். எந்த இடத்தில் எப்படிப் பானை செய்யப்பட்டாலும் பானை செய்யப்பயன்படுத்தப்படும் மண்ணிலிருந்து அதைச் செய்யும் குயவன் வேறுபட்டவன் ஆவான். இது சாதாரணமாகப் பானையைப் பற்றிய உண்மையாகும்.

சிருஷ்டியைப் பொறுத்தமட்டில் ஒரே மூலப்பொருளிலிருந்தே அனைத்தும் தோன்றியிருக்கின்றன. அந்த மூலப்பொருள் பூரணமானது, நித்தியமானது, அகண்டமானது. அந்த மூலப்பொருளிலிருந்து தோன்றியிருக்கும்

அனைத்தும் அதிலிருந்து அபின்னமானது. அதாவது சிருஷ்டியில் உபாதான காரணமும் நிமித்த காரணமும் உண்மையில் ஒன்றே அன்றி வேறல்ல. மூலப்பொருள் மாற்றங்களுக்கு அப்பாற்பட்டது. பின் இயற்கையில் இவ்வளவு முரண்பாடுகள் காணப்படுவானேன்? இயற்கையில் நாம் பார்க்கின்ற மாற்றங்கள், வேறுபாடுகள் மற்றும் முரண்பாடுகள் எல்லாம் வெறும் தோற்றங்களேயன்றி உண்மையில் இருப்பவையல்ல என்பது ஆராய்ந்தால் புலனாகும்.

ஒரு தடாகம் மிகவும் அமைதியாகக் காட்சி தருகின்றது. திடீரென்று அந்த இடத்தில் புயற்காற்று ஒன்று உருவாகிறது. அதுவரை அமைதியாக இருந்த அந்தத் தடாகத்தின் நீர்ப்பரப்பு அப்பொழுது கொந்தளிப்புக்குள்ளாகின்றது. பெரிய பெரிய அலைகள் அதில் உருவாகிக் கரையில் இருக்கும் பாறைகளில் வந்து மடார் மடார் என்று மோதுகின்றன. அலைகள் உண்டாவதால் தண்ணீர் நொங்கும் நுரையுமாகக் காட்சி தருகின்றது. தண்ணீரில் பெரிய பெரிய நீர்க்குமிழிகள் தோன்றி மறைகின்றன. தண்ணீரில் தோன்றும் நீர்க்குமிழி, அலை இவையெல்லாம் யாவை? தண்ணீரின் மாறுபட்ட தோற்றங்களே தவிர மற்றொன்றில்லை. அந்த நீர்க்குமிழி நீரிலேயே தோன்றுகின்றது. நீரிலேயே இருக்கிறது. மறுபடியும் நீரிலேயே மறைகிறது. இத்தனை மாற்றங்களுக்கிடையில், அலை, நீர்க்குமிழி என்று பல பெயர்களுக்கிடையில், அவற்றிற்கடிப்படையான பொருள் நீர் என்பதில் எந்த வித மாற்றமும் உண்டாவதில்லை.

மேற்காணும் உதாரணத்தில் நாம் காண்பது போல் அனைத்தினுடையவும் அடிப்படையாக அமைவது அந்த சத் சித்-ஆனந்தப் பரம் பொருளேயாகும். அது நிஸ்சலம், நிராமயம், நிர்குணம், நிர்விகல்பம். சிருஷ்டியில் நாம் பார்க்கும் வேறுபாடுகள் நம்முடைய அறியாமையின் காரணமாகத் தோன்றுவனவேயன்றி வேறல்ல. உண்மையில் ஒன்றும் உண்டாக்கப்படுவதுமில்லை; மறைவதுமில்லை. அறியாமையினால் ஒன்று பலவாகக் காட்சி தருகிறது. அறியாமை நீங்கினால் அனைத்தும் ஒரே ஸத்பொருள் என உணரப்படுகிறது.

## 9

सच्चिदात्मन्यनुस्यूते नित्ये विष्णौ प्रकल्पिताः ।
व्यक्तयो विविधास्सर्वा हाटके कटकादिवत् ॥

ஸச்சிதாத்மன்யனுஸ்யூதே நித்யே விஷ்ணௌ
ப்ரகல்பிதா: ।
வ்யக்தயோ விவிதாஸ்ஸர்வா ஹாடகே
கடகாதிவத் ॥

சச்சிதா னந்தன் சகலத்து முள்ளுள்ளா
னிச்சனாம் விஷ்ணு நிலைதன்னிற் சொச்சமாம்
பொன்னிற் கடகாதி போலும்பல் தோற்றமெலா
மன்னிய மன்றென் றறி.

[ஸ்ரீ ரமணர்]

हाटके ஹாடகே-தங்கத்தில், कटकादिवत् கடகாதிவத்-கடகம் முதலியவை போல, व्यक्तयः வ்யக்தய-தோற்றம் கொண்ட, विविधाः விவிதா-பலப்பலவிதமான, सर्वाः ஸர்வா: எல்லா உயிர்களும், सच्चिदात्मनि ஸச்சிதாத்மனி-சச்சிதாத்ம ரூபியும், अनुस्यूते அநுஸ்யூதே-தொடர்ந்து இருப்பதும், नित्ये நித்யே-என்றும் உள்ளதுமான, विष्णौ விஷ்ணௌ-விஷ்ணுவிடத்தில், प्रकल्पिताः ப்ரகல்பிதா- கற்பிக்கப்பட்டவைகளே.

கருத்துரை : தங்கம் ஒன்றே. ஆனால் நகைகள் பல. அவை வெறும் தோற்றமே. அவ்விதமே உயிர்கள் யாவும் பரம் பொருளின் மேல் ஏற்றிய கற்பனைகளே. சாதாரண மனிதனால் அரும் பெரும் வேதாந்தக் கருத்துக்களைப் புரிந்துகொள்வது மிகவும் கடினமான செயலாகும். எளிய விஞ்ஞானக் கருத்துக்களைப் புரிந்து கொள்வதுவே நமக்கு கடினமான செயலாகத் தோன்றுகிறது. இந்த விஞ்ஞானக் கருத்துக்களைப் புரிந்து கொள்வதற்கு எவ்வளவு நேரத்தைச் செலவழிக்க வேண்டியிருக்கிறது என்பதை நாம் அறிவோம். ஆத்மாவைப் பற்றிய அறிவானது அதாவது ஆத்ம ஞானமானது, விஞ்ஞானத்தைக் காட்டிலும் பன்மடங்கு நுட்பமானது; புரிந்து கொள்ளக் கடினமானது. பக்குவப்படுத்தப்பட்ட மனத்தினால்தான் சூக்ஷ்மமான ஆத்மார்த்த தத்துவங்களைப் புரிந்துகொள்ள இயலும்.

மிகவும் உயரிய, புரிந்து கொள்ளக்கடினமான ஆத்ம தத்துவத்தை எளிய உதாரணங்களின் மூலம் சாதாரண மனிதனும் புரிந்து கொள்ளும் வகையில் புகட்டிய பெருமை நமது ஆசாரிய புருஷர்களைச் சாரும். அந்த விதத்தில் ஆதிசங்கரருக்குத் தனிப் பெருமை உண்டு. எளிய பல உவமானங்களின் மூலம் அரிய பல ஆத்மீகக் கருத்துக்களை அவர் இந்த ஆத்ம போதத்தில் விளக்கிக் காட்டுகின்றார். சில வேளைகளில் ஒரே கருத்தை வலியுறுத்துவதற்காகப் பல சுலோகங்களில் பல உவமானங்கள் மூலம் விளக்கிக் காட்ட வேண்டிய தேவையும் ஏற்படுகிறது.

பள்ளிகளில் ஆரம்ப வகுப்புக்களில் சிறுவர்களுக்குக் கருத்துக்களைப் புரிய வைப்பதற்காக ஆசிரியர் ஸ்தூலப் பொருள்களைப் பயன்படுத்துவது நாம் அறிந்த ஒன்றாகும். ஏன்? கருத்துக்களைச் சிறுவர்கள் மறந்துவிட்டாலும் உவமானமாகக் காட்டப்பட்ட பொருள்கள் அவர்களது மனதில் நன்கு பதிந்திருக்கும். அவற்றின் துணையுடன் கருத்துக்களை மீண்டும் ஞாபகத்திற்குக் கொண்டு வருவது சுலபம் என்பதால்தான். இந்த ஒரு அடிப்படையில்தான் வேதாந்த நூல்களில் அநேக உவமானங்கள் தரப்படுகின்றன.

பொருள் ஒன்று உண்டாக்கப்படவேண்டும் எனில் அதற்கு மூன்று அடிப்படையான காரணங்கள் அமை

கின்றன என்று சென்ற சுலோகத்தில் பார்த்தோம். அவை முறையே உபாதான காரணம், நிமித்த காரணம், சமவாய காரணம் என்பனவாகும். எந்த ஒரு அடிப்படையான பொருள்களிலிருந்து ஒரு வஸ்து செய்யப்படுகின்றதோ அந்தப் பொருள் உபாதான காரணமாகின்றது. எந்த ஒரு கருவியின் துணை கொண்டு வஸ்துவானது உண்டாக்கப்படுகின்றதோ அந்தக் கருவி சமவாய காரணமாக அமைகின்றது. உபாதான காரணமாகிய கருவியின் உதவியினால் எந்த ஒரு புத்தி அல்லது அறிவானது வஸ்துவை உண்டாக்குகின்றதோ அது நிமித்த காரணம் எனப்படுகின்றது.

பொதுவாக இம்மூன்றும் தனித்தனியாகவே இருக்கின்றன. உபாதான காரணம் அல்லது பொருள் புதிய பொருளாக மாறுகின்றது. ஆனால் இந்த உலகமாகிய சிருஷ்டியில் சிருஷ்டிக்கப்பட்டிருக்கின்ற பொருள்கள் சிருஷ்டி கர்த்தாவிலிருந்து வேறுபட்டவையல்ல. அதாவது இயற்கையில் உபாதான காரணமாகிய பரமாத்மனே பலவாகக் காட்சி தருகிறுர். அந்த மூலவஸ்து எல்லையற்றது. பூரணப்பொருள். பூரணத்திலிருந்து பூரணத்தை எடுத்தாலும் இறுதியில் எஞ்சுவது பூரணம் தான். அதுபோல் அந்த மூலவஸ்து எல்லையற்றது. பூரணப்பொருள். அந்த அத்விதீயமான பரம்பொருள் பலவாகத் தோன்றினாலும் உண்மையில் அது யாண்டும் ஒன்ருகவே இருக்கிறது.

கடலில் அலைகள் பூதாகாரமாக எழுகின்றன. பார்ப்போரது மனதில் அவை அச்சத்தை உண்டாக்குகின்றன. அந்த அலைகள் கடலில் தோன்றுகின்றன. கடலிலேயே காட்சி தருகின்றன. மறுபடியும் அதிலேயே மறைந்து விடுகின்றன. கடலுக்கு அன்னியமாக அலைகளுக்கு இருப்பு இல்லை. அது போல் அண்ட சராசரத்தில் காணப்படும் அனைத்தினுடைய தோற்றம், இருப்பு, மறைவு ஆகிய எல்லாம் அந்த ஒரே பரம்பொருள் தான். அந்தப் பரம்பொருள் எப்படி இருக்கிறது? அது ஒன்ருய், பலவாய், உளதாய், இலதாய், உருவாய், அருவாய் இருக்கிறது. கற்பனைக் கெட்டாததாகவும், வாசாமகோசரமாகவும் அது இருக்கிறது.

இந்த சுலோகத்தில் வந்திருக்கும் "விஷ்ணு" என்ற பதம் புராணங்கள் குறிப்பிடும் சங்கு சக்ர தாரியான திருமாலைக் குறிக்கிறது என எடுத்துக் கொள்ளக் கூடாது.

எங்கும் நிறைந்த ஒன்று என்ற பொருளைக் கொண்டு விளங்குகிறது விஷ்ணு என்ற பதம். முன்பு கூறியது போன்று ஆத்மன் எதிலும் எங்கும் இருக்கிறது என்பதை விஷ்ணு என்ற சொல் குறிக்கிறது. அகண்டமாய், சர்வ வியாபியாய் அந்த ஒரே பூரணப் பொருளே இலங்குகின்றது என்பது உண்மையாயின் ஏன் பல்வேறு பொருள்களை நாம் காண்கிறோம் என்று நம்மிடத்தே எழுகின்ற சந்தேகத்தை ஸ்ரீசங்கரர் மற்றொரு அழகிய உவமானம் மூலம் விளக்கிக் கூறுகிறார்.

மூக்குத்தி, மோதிரம், ஒட்டியாணம், வளையல், சங்கிலி எனப் பல்வேறு ஆபரணங்கள் இருக்கின்றன. அவை காண்போரது கண்ணையும் கருத்தையும் ஒருங்கே கவர்கின்றன. அவைகளது பெயர்களுக்கும் உருவங்களுக்கும் ஏற்றாற்போல் அவற்றைப் பயன்படுத்தும் முறையும் மாறுபடுகின்றன. அவற்றின் பெயர்களையும், உருவங்களையும் நீக்கிவிட்டு அவற்றைப்பார்த்தால் அவை அனைத்தும் அடிப்படைப் பொருளான தங்கமாகக் காட்சி தருகின்றன. தட்டானிடம் நாம் கொடுத்த தங்கக் கட்டியானது பல ரூபங்களில் தோற்றம் தரும். அவற்றை உருக்கினால் திரும்பியும் தங்கமாகவே ஆகிவிடுகின்றன. எனவே அந்த அணிகலன்கள் யாவும் தங்கத்திலிருந்து உண்டாக்கப்படுகின்றன. அதைப்போல் இயற்கையில் இருக்கும் பொருள்கள் யாவும் பல ரூபங்களையும், பெயர்களையும் கொண்டு விளங்கினாலும், உண்மையில் சர்வ வியாபியாயிருக்கும் பிரம்மனில் நிலை பெற்று விளங்குகின்றன.

தின்பண்டக் கடையில் சீனியினால் செய்யப்பட்ட பல்வேறு பொருள்கள் விலைக்காக வைக்கப்பட்டிருக்கின்றன. அனைத்தினுடைய விலையும் ஒன்றுதான். ஒரு குழந்தை அதற்கு யானை தான் வேண்டும் என்று அழுகிறது. மற்றொரு குழந்தை குதிரை தான் வேண்டும் என்று அழுகிறது. குழந்தைகள் எவற்றை விரும்புகின்றனவோ அவற்றைக் கடைக்காரன் தருகிறான். ஏனெனில் அவனளவில் அவற்றின் மதிப்பு ஒன்றுதான். அது போல் தோன்றிய அனைத்தும் உண்மையில் ஒரே பிரம்மன் தான் என உணர்ந்த சான்றோர்கள் தன்னில் இன்புற்று இருப்பர்.

# 10

यथाकाशो हृषीकेशो नानोपाधिगतो विभुः ।
तद्भेदादिभन्नवद् भाति तन्नाशे केवलो भवेत् ॥

யதாகாசோ ஹ்ருஷீகேசோ நாநோபாதி-
கதோவிபு: ।
தத்பேதாத் பின்னவத் பாதி தந்நாசே
கேவலோ பவேத் ॥

விண்ணிலே போலே விளங்கீச தனிற்றென்று
மெண்ணி லுபாதி யிசைந்த விபுவண்ண லுமப்
பேத வுபாதிகளாற் பின்னன்போல் வானவை
போதலும் பூன்றப் பொருள்.

|ஸ்ரீ ரமணர்|

आकाशो ஆகாசோ-ஆகாசம், यथा யதா-எப்படியோ அப்படியே, हृषीकेशः ஹ்ருஷீகேச-புலன்களுக்கு ஈசனான, विभुः விபு-ஈசுவரத்தத்துவம், नानोपाधिगतः நாநோபாதிகத: நானாவிதமான உபாதிகளை அடைந்ததாக ஆகி, तद्भेदात् தத்பேதாத் - அந்த உபாதி பேதத்தினால், भिन्नवत् பின்னவத்-மாறுபட்டது போல், भाति பாதி-பிரகாசிக்கிறது, तन्नाशे தந்நாசே-அதன் அழிவு ஏற்பட்டால், केवलो கேவலோ- (கேவலம்)ஒரே பொருளாகவே, भवेत् பவேத் - இருக்கும்.

கருத்துரை : ஆகாயம் அல்லது 'வெளி' பிரிக்கப்படமுடியாதது. அது போல் பரம்பொருளுக்கு மாறுபாடு 'உடல்'கள் தோற்றுவிக்கும் பொய்யே!

ஆகாயம் எங்கும் பரந்து விரிந்து காட்சி தருகிறது. அது இல்லாத இடமில்லை. திறந்தவெளியில் நாம் ஒரு கட்டிடம் கட்டுவதாக வைத்துக் கொள்வோம். அந்தக் கட்டிடத்தில் பல்வேறு அறைகள் சிறியதும் பெரியதுமாகக் கட்டப்படுகின்றன. ஒரு அறையை வரவேற்பு அறை என்கிறோம். மற்றொன்றைச் சமையல் அறை என்று அழைக்கிறோம். இன்னொன்று படுக்கை அறை

எனவும், பிறிதொன்று ஸ்நான அறை எனவும் இதுபோல் இதர அறைகள் பல்வேறு பெயர்களாலும் அழைக்கப்படு கின்றன. அந்த இடத்தில் அந்தக் கட்டிடம் கட்டுவதற்கு முன்பு வெட்டவெளிதான் இருந்தது. அந்த வெட்டவெளி அல்லது ஆகாயம் அபின்னமாக அல்லது பிரிவுபடாத ஒன்றாக இருந்தது. இப்பொழுது அந்த இடத்தில் கட் டப்பட்டிருக்கும் பல அறைகளினுள் அந்த ஆகாயம் பிரிவு பட்டது போல் தோற்றமளிக்கிறது. உண்மையில் அது பிரிவுபட்டிருக்கிறதா? இல்லை. அறைக்கு உள்ளே இருக்கும் ஆகாயமும் அறைக்கு வெளியில் இருக்கும் ஆகாயமும் ஒன்றுதான். அவற்றிற்கிடையில் எந்தவித வேறுபாடும் கிடையாது. தாற்காலிகமாக அது பிரிக்கப்பட்டது போலத் தோற்றமும் தருகிறது. திறந்த வெளி ஆகாயத் தையும் அறைக்குள் இருக்கும் ஆகாயத்தையும் பிரிக்கிறது சுவர் என்கிற உபாதி. நம்மால் எழுப்பப்பட்டிருக்கின்ற அந்தச் சுவர் என்கிற 'உபாதி'யை நீக்கிவிடுகிற போது முன்பிருந்தது போன்றே ஆகாயம் ஏகமாகக் காட்சி தரு கிறது.

தெருவிலே ஒருவன் "உப்பு வாங்கலியோ, உப்பு" என்று வண்டியைத் தள்ளிக்கொண்டு செல்கிறான். ஒரு வீட்டிலிருந்து ஒரு சிறுமி வெளியே ஓடிவந்து, "ஏ! உப்பு! இங்கே வா!" என்று அந்த உப்பு வியாபாரியை அழைக் கிறாள். அவள் தன்னை 'உப்பு' என்று கூப்பிட்டதைக் கேட்டு அவனும் அந்த வீட்டிற்கு வந்து உப்பு வியாபா ரம் செய்து விட்டுப் போகிறான். உண்மையில் அவன் உப்பா? இல்லை. அவன் வியாபாரம் செய்யும் பொருள் உப்பு. அதைக் கொண்டு அந்த நேரத்திற்குத் தன்னை அவன் உப்பாக அங்கீகரிக்கின்றான்.

அதே மனிதன் மற்றொரு சமயம் பூசணிக்காய் வியா பாரம் செய்வதாகக் கொள்வோம். அவன் இப்பொழுது "பூசணிக்காய் வாங்கலியோ, பூசணிக்காய்!" என்று கத்திக் கொண்டே தெருவில் செல்கிறான். இப்பொழுது அந்தச் சிறுமி, "ஏ! பூசணிக்காய் இங்கே வா" என்றழைக்க அவனும் பூசணிக்காய் வியாபாரம் செய்வதற்கு ஆயத்தமாகிறான். முன்பு 'உப்பு' ஆக இருந்தவன் இப்பொழுது 'பூசணிக்கா யாக' மாறிவிட்டான். உண்மையில் அவன் உப்புமல்ல, பூசணிக்காயுமல்ல. இன்னொரு சமயம் அதே நபர்

எந்தவித வியாபாரமும் செய்யாத நிலையில் தெருவில் நடந்து செல்கிறான். அப்பொழுது முன்பு அவனிடம் பூசணிக்காய் வாங்கிய சிறுமி இப்பொழுது அவனைப் பார்த்து "ஏ! பூசணிக்காய்" என்று கூப்பிடுவதாக வைத்துக் கொள்வோம். இப்பொழுது அந்த நபருக்கு மிகுந்த கோபம் வந்து விடுகிறது. தான் பூசணிக்காய் போன்று பருமனாய் இருப்பதை ஒட்டிய சிறுமி தன்னைக்கேலி செய்கிறாள் என்று அவளை அடிக்கக் கையை ஓங்குகிறான். இதிலிருந்து என்ன தெரிகிறது? உபாதிகளின் காரணமாக அவன்தான் அல்லாததைத் தான் எனக் கருதுகிறான். இதே அடிப்படையில் ஆராய்கின்ற பொழுது உண்மையில் அவன் உடலுமல்ல; மனமுமல்ல, புலன்களுமல்ல. புத்தி, புலன்கள் யாவும் உபாதிகள். அவன் உண்மையில் ஆத்ம சொரூபம். உபாதிகளை நீக்கிப் பார்த்தால் தான், அவற்றிற்கெல்லாம் அப்பாற்பட்ட பரம்பொருள் என அவன் உணருகிறான்.

ஹ்ருஷீகேசன் என்ற வார்த்தைக்குப் புலன்களுக்கு ஈசன் என்பது பொருள். எது வரை ஆத்ம சைதன்யம் நமது உடலில் இருக்கிறதோ அது வரையில்தான் கண் பார்க்கும். காது கேட்கும். மற்றும் எல்லாப் புலன்களும் அதன் தன் வேலையைச் செய்யும்.

'விபு' என்ற பதம் எங்கும் பரந்த ஒன்று எனப்பொருள் படுகிறது. ஆத்மன் சர்வ வியாபியாயிருக்கின்றது. அது இல்லாத இடமேயில்லை. அது கால தேச வர்த்தமானங்களுக்குள் கட்டுப்படாது இலங்குகின்றது. மாறுபட்டுக் காணப்படுகின்ற இந்தப் பல்வேறு தோற்றங்களுக்கு அதிஷ்டானமாக அது அமைகிறது. அந்த அடிப்படைப் பொருளை நாம் உதாரணங்களில் கூறியிருப்பது போன்று உபாதிகளின் விளைவாக அது பலவாகத் தோன்றுகின்றது.

ஓரிடத்தில் பல தேசங்களைச் சேர்ந்த மக்கள் கூடியிருக்கிறார்கள் என வைத்துக் கொள்வோம். ஒருவன் கருப்பன். மற்றொருவன் வெளுப்பன். இன்னொருவன் மஞ்சள் நிறத்தவன். ஒருவன் நோஞ்சலாக இருக்கிறான். மற்றொருவன் பருமனாக இருக்கிறான். ஒருவன் தன்னை ஆங்கிலேயன் எனவும், மற்றொருவன் தன்னை ஆப்பிரிக்கன் எனவும, வேறொருவன் தன்னைச் சீனன் எனவும்

அழைத்துக்கொள்கின்றனர். ஈண்டு கருப்பன், வெளுப்பன், சீனன், ஆங்கிலேயன், அமெரிக்கன் ஆகிய அனைத்தும் உபாதிகள். உபாதிகளை நீக்கிப் பார்த்தால் அவர்களி டையே நிலவும் ஒற்றுமையை உணரலாம். முதற்கண் அவர்கள் அனைவரும் மனிதர்கள் என்பது உணரப்படும். இன்னும் சற்று ஆழ்ந்து ஆராய்ந்தால் அவர்கள் யாவ ரும் அடிப்படையில் ஆத்ம சொரூபமேயன்றி வேறல்ல என்ற பேருண்மை புலப்படும்., எனவே உபாதிகளின் காரணமாக வேறுபட்டவர்கள் போலக் காணப்படுகின்ற னர். அவை அகன்ற நிலையில் அவர்கள் அபேதமாக ஆத்ம சொரூபமாகக் காட்சி தருகின்றனர். அதே போல் பலவாகக் காட்சி தரும் ஆத்மன் உபாதிகள் அகன்ற நிலையில் ஏகமாய் உணரப்படுகின்றது.

## 11

नानोपाधिवशादेव जातिवर्णाश्रमादयः ।
आत्मन्यारोपितास्तोये रसवर्णादिभेदवत् ॥

நானோபாதிவசாதேவ ஜாதி வர்ணாச்ரமாதய: ।
ஆத்மன்யாரோபிதாஸ்தோயே ரஸவர்ணாதி
பேதவத் ॥

பலவா முபாதிகள் பற்றியே நாமங்
குலமா சிரமமுதற் கொள்கை-சலத்திற்
சுவைநிற மாதிபோற் சுத்தவான் மாவி
லவைகற் பிதமா மறி.

[ஸ்ரீ ரமணர்]

तोये தோயே-நீரில், रसवर्णादिभेदवत् ரஸவர்ணாதி பேத வத்-சுவைநிறமாறுபாடு போல, नानोपाधिवशादेव நானோபாதி வசாதேவ-பல்வேறு உபாதிகளின் பால்படுவதன் காரண மாக, आत्मनि ஆத்மனி-ஆத்மன் மேல், जाति ஜாதி-ஜாதி, वर्ण வர்ண-சமூக ஏற்றத்தாழ்வுகளும், आश्रम आदयः ஆச்ரம ஆதய:- வாழ்க்கையின் நிலைமாறுபாடுகளும், आरोपिताः ஆரோபிதா:- ஏற்றப்பட்டிருக்கின்றன.

கருத்துரை : நீருக்குச் சுவை, நிறம் எல்லாம் அது ஏந்தப்படும்பொருள், அதில் சேர்ந்த பொருள் இவற்றின் மூலம் வந்தவை. அவை நீருக்குச் சொந்தமேயல்ல. அதே போல ஆத்மாவுக்கு ஜாதி, வர்ணம், ஆசிரமம் ஒன்றும் கிடையாது. அது அதை ஏந்தும் உடல்களுக்கே உண்டு. அவற்றுள் அடங்கியதன் காரணமாக அதற்கும் இந்தச் சுவையும் நிறமும் ஏற்பட்டுவிட்டது போல் தோன்றுகிறது.

வக்கீல் ஒருவர் அவருக்கென்றமைந்த பிரத்தியேகமான உடையுடன் தெருவில் நடந்து சென்று கொண்டிருக்கிறார். கையில் ஸ்டெதாஸ்கோப்புடன் அவரோடு அவரது நண்பரும் செல்கிறார். அவரைப் பார்த்த மாத்திரத்திலேயே அவர் ஒரு டாக்டர் என்பது புலனாகிறது. சற்று தூரத்திலே ஒரு ரிக்ஷாக்காரன் வாடகை சவாரிக்கு யாராவது வரமாட்டார்களா என்று கவலை தோய்ந்த முகத்தோடு சவாரியை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறான். மூடை மூடையாக சாமான்களை ஏற்றிக்கொண்டு மிகவும் கஷ்டப்பட்டு வண்டியொன்றை இழுத்துச் செல்கின்றான் கைவண்டிக்காரன் ஒருவன். இந்தவிதமாக ஜனசந்தடி மிகுந்த தெருவொன்று பலவிதமான நபர்களுடன் காட்சி தருகின்றது. வக்கீல், டாக்டர், ரிக்ஷாவாலா, கைவண்டி இழுப்பவன் ஆகியோர் அணிந்திருக்கும் உடைகளில் வேறுபாடு காணப்படுகின்றது. அவர்கள் செய்கின்ற பணிகளிலே வித்தியாசம் இருக்கிறது. இவையெல்லாம் அவர்களுக்கிடையிலே காணப்படும் வெளிப்படையான வேற்றுமைகள். இந்த வேறுபாடுகளை நீக்கிவிட்டு அவர்களுக்கிடையே நிலவுகின்ற ஒற்றுமை அம்சங்கள் யாவை என ஆராய்ந்தால் அநேக ஒற்றுமைகள் நமக்குத் தெரிய வருகின்றன.

முதலாவதாக அவர்கள் அனைவரும் ஒரே இனத்தைச் சார்ந்தவர்கள். அது மனித இனம் எனத் தெரிய வருகிறது. அடுத்ததாகத் தத்தமக்கேற்ற பாங்கிலே அவர்கள் மனித குலத்திற்குப் பணி புரிபவர்களாகின்றனர். சமுதாயமாகின்ற தேரில் அவர்கள் பல்வேறு உறுப்புக்களாக அமைகின்றனர். அவர்களது அடிப்படையான உடல் அமைப்பு ஒரே மாதிரியாகக் காணப்படுகின்றது. அவர்கள் தங்களைப் பல்வேறு ஜாதியைச் சேர்ந்தவர்கள், பல்வேறு இனத்தைச் சார்ந்தவர்கள் என்றெல்லாம் அழைத்துக்

கொண்டாலும் அவர்கள் அனைவரும் அடிப்படையில் தாங்கள் மனிதர்கள் என்று கருதிக் கொள்வதில் எவ்வித வேறுபாடும் காட்டமுடியாது. அவர்கள் யாவரும் உண்மையில் ஆத்ம சொரூபம் என்பதும் சொல்லாமலேயே புலனாகிறது.

சென்ற சுலோகங்களில் பார்த்தது போன்று ஆத்மனைப் பொறுத்தமட்டில் அது ஜாதி, வர்ணம், இனம், குலம், பெயர், உருவம், நிறம் போன்ற எல்லாவித உபாதிகளுக்கும் அப்பாற்பட்டது. எல்லா உயிர் வகைகளிலும் இலங்கும் ஆத்மன் ஒன்றுதான். ஆத்மனிலே இது ஹிந்து ஆத்மன், இது கிறிஸ்துவ ஆத்மன், இது முகமதிய ஆத்மன், இது பௌத்த ஆத்மன், இது ஏழை ஆத்மன், இது பணக்கார ஆத்மன் என்ற வேறுபாடெல்லாம் கிடையாது. வேற்றுமையற்று விளங்கும் அந்த ஆத்மன் அனைத்துயிரினுள்ளும் ஊடுருவி நிற்கிறது. புறத்தே தோன்றும் பலவிதமான உபாதிகளால் சற்றேனும் அது அசுத்தமடையாது. சுத்த பரவஸ்துவாக அது இலங்குகின்றது.

இன்றைய புரட்சித் தத்துவங்கள் பல தோன்றுவதற்குப் பல்லாண்டு பல்லாண்டு காலம் முன்னமேயே "ஒன்றே குலம், ஒருவனே தேவன்" என்ற மாபெரும் உண்மையை உலகிற்கு எடுத்து வழங்கிய பெருமை இந்து மத ஆசாரியர்களைச் சாரும். அறிவிற் சிறந்து விளங்கிய நம் முன்னோர்கள் தங்களது தத்துவ ஆராய்ச்சிகளின் விளைவைப் பல நூல்கள் வடிவத்தில் நமக்குத் தந்து சென்றிருக்கின்றனர். நேரிய முறையில் அவற்றை நாம் ஆராய்ந்தால் அவற்றில் மறைந்து காணப்படும் உண்மைகள் பல உள்ளங்கை நெல்லிக் கனி போல் புலனாகும். விஞ்ஞான அறிவு பெற்று விளங்குவதன் காரணமாக, இந்த நூல்களெல்லாம் வெறும் வறட்டு வேதாந்த நூல்கள் என அவற்றை நாம் புறக்கணித்த பெருங்குற்றமொன்றைச் செய்தவர்களாவோம். எந்த நாட்டினர் ஆயினும், எந்த இனத்தவர் ஆயினும், எந்த மொழியினர் ஆயினும் அவர்கள் அனைவரும் அடிப்படையில் ஒரே ஆத்ம சொரூபமே என்ற உயர் கொள்கையினால் மனித குலம் அனைத்தையும் ஒற்றுமைப்படுத்திய பெருமை நமது ரிஷி, முனிவர்களையன்றி வேறு யாரைச் சாரும்? அவர்களது வழித்

தோன்றல்களாகிய நாம் அவர்களது அந்த உயர்ந்த உபதேசத்தைக் கடைப்பிடித்தொழுக வேண்டும் என்பது நமது இன்றியமையாத கடமையாகிறது.

தண்ணீர் நிறமற்ற பொருள். ஆனால் அது பச்சைநிறக் கண்ணாடி டம்ளரில் இருக்கையில் பச்சையாகத் தென்படுகின்றது. சிவப்புநிற டம்ளரில் இருக்கையில் சிவப்பாகத் தோன்றுகிறது. மஞ்சள் நிறக்கண்ணாடி டம்ளரில் ஊற்றப்பட்டால் மஞ்சள் நிறமாகத் தோன்றுகின்றது. இந்த விதமாகத் தண்ணீர் பச்சை, சிவப்பு, மஞ்சள் ஆகிய பல நிறங்களில் காட்சி தருகிறது என்பதால் தண்ணீருக்குப் பல நிறங்கள் உண்டு என்று ஒருவன் முடிவு செய்தால் அந்த முடிவு சரியல்ல, தவறு என்பதை ஆரம்ப வகுப்பில் படிக்கும் பையன் கூட சுட்டிக் காட்டத் தவறமாட்டான். ஏனெனில் பச்சை, சிவப்பு, மஞ்சள் என்பனவெல்லாம் அந்த நிறமற்ற தண்ணீர் எந்த டம்ளரில் ஊற்றப்படுகின்றதோ அந்த டம்ளரினுடைய (உபாதிகள்) வெவ்வேறு நிறங்கள். எனவே, வெவ்வேறு நிறம் கொண்ட அந்த டம்ளர்களில் தண்ணீர் இருக்கும் பரியந்தம் அந்த டம்ளர்களினுடைய நிறம் தண்ணீரில் ஆரோபிக்கப்படுகிறது. அந்த டம்ளர்களிலிருந்து தண்ணீரைப் பிரித்து விட்டால் நிறம் டம்ளரோடு நின்றுவிடுகிறதே தவிர தண்ணீரை மலினப்படுத்துவதில்லை. அதைப்போலவே அவனவனிடத்து அமைந்திருக்கும் "வாசனைகள்" அல்லது ஸம்ஸ்காரங்களுக்கேற்றவாறு வேறுபாடுகள் காணப்படுகின்றன. அவையெல்லாம் பல்வேறு உபாதிகள். அவைகளின் பின். உறையும் ஏகமாய் விளங்கும் ஆத்மனை உணர்கையில், இதுவரை காட்சிதந்த வேறுபாடுகள் யாவும் ஆத்மனின்பால் ஆரோபிக்கப்பட்டவையேன்றி வேறல்ல என்ற உண்மை உணரப்படுகிறது. அத்தகைய பேருண்மையை உணர்ந்த நிலையில் ஆத்மபோதம் கிட்டுகிறது.

# 12

पञ्चीकृतमहाभूतसंभवं कर्मसंचितम् ।
शरीरं सुखदुःखानां भोगायतनमुच्यते ॥

பஞ்சீக்ருதமஹாபூத ஸம்பவம் கர்ம ஸஞ்சிதம் ।
சரீரம் ஸுகது:கானாம் போகாயதந முச்யதே ॥

கலந்தபெரு மைம்பூத காரிய மாகுங்
கலந்த வினைசார்ந்த கலமாங்-கலக்கு
மிடரின்ப போக மெவையும் புசித்தற்
கிடமிவ் வுடலென் றிரு. --[ஸ்ரீ ரமணர்]

कर्मसंचितं கர்ம ஸஞ்சிதம் - நம்முடைய பூர்வ ஜன்மங்களில் சேர்க்கப்பட்ட கர்மங்களின் பயனாய்ப் பெற்றதும், पञ्चीकृत பஞ்சீக்ருத-பஞ்சீகரணம் செய்யப்பட்ட, महाभूतसंभवं மஹாபூத சம்பவம் - பூதங்களினால் ஏற்பட்டதுமான शरीरं சரீரம்-இந்த உடல், सुखदुःखानां ஸுக துக்கானாம்-இன்ப துன்பங்களை, भोगातनं போகாயதனம்-அனுபவிக்கும் வீடு (இடம்) என்று उच्यते உச்யதே-சொல்லப்படுகிறது.

கருத்துரை : பழைய கர்மவினையினால் அடையப்பட்ட சரீரம் ஐந்து மூலகங்களின் பஞ்சீகரண சேர்க்கையினால் உண்டாகின்றது. இன்ப, துன்பங்களுக்கு உறைவிடமாகச் சொல்லப்படுகின்றது. இந்த சுலோகத்தில் மனித சரீரம் எப்படித் தோற்றத்திற்கு வருகிறது என்பது பற்றிய விஞ்ஞான அடிப்படையில் அமைந்த மிக அழகிய விளக்கம் தரப்படுகின்றது.

நமது சரீரத்தை மறைப்பதற்காக நாம் ஆடை அணிகின்றோம். முதலாவது பனியனை அணிகின்றோம். பிறகு அதன்மேல் சட்டை போடப்படுகிறது. பிறகு அதற்கும்மேல் ஓவர்கோட் எனப்படும் மேல்சட்டை அணியப்படுகிறது. ஓவர்கோட், சட்டை, பனியன் ஆகிய இவையெல்லாம்

உடலின் மீது போடப்படும் உறைகளாகும். இந்த மேலுறைகளுக்கு அதிஷ்டானமாக அமைவது உடல். இந்த மேலுறைகளை ஒவ்வொன்றாகக் கழற்றிப் போடுகையில் அவற்றின் பின் உடல் தெரிகிறது.

உடலுக்கு எப்படிச் சட்டை, பனியன் போன்றவை உறைகளாக அமைகின்றனவோ அதைப் போலவே ஜீவாத்மனுக்கு ஆண்டவனால் கொடுக்கப்பட்ட சட்டைகள் மூன்று உண்டு. அவை முறையே ஸ்தூல சரீரம் சூக்ஷ்ம சரீரம், காரண சரீரம் எனப்படுகின்றன. ஜீவன் ஸ்தூல சரீரத்தில் இருந்து கொண்டு சுகதுக்கங்களை அனுபவிக்கின்றது. இந்த ஸ்தூல சரீரம் எப்படித் தோற்றத்திற்கு வருகிறது என்பதைக் கீழே ஆராய்வோம்.

ஸ்தூல சரீரம் ஐம்பூதங்களால் ஆனது. நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம் என்பவை அந்த ஐம்பூதங்களாகும். 'பூதம்' என்ற சம்ஸ்கிருத பதம் அடிப்படைப்பொருள் அல்லது elements என்று பொருள்படுகிறது. இந்த ஐந்து பூதங்களின் சேர்க்கையினால் ஸ்தூல சரீரம் தோன்றுகிறது.

ஒரு பொருளைப் பற்றித்தெரிந்து கொள்வதற்கு முக்கியமாக இரண்டு முறைகளைப் பயன் படுத்தலாம். அவற்றை ஆங்கிலத்தில் method of synthesis (சேர்த்துப் பார்க்கும் முறை), method of analysis (பிரித்துப் பார்க்கும் முறை) எனலாம். உதாரணமாக, இன்றைய விஞ்ஞானக் கண்டுபிடித்தங்களின்படி இரண்டு ஹைட்ரஜன் அணுக்களும், ஒரு ஆக்ஸிஜன் அணுவும் சேரும் பொழுது ஒரு நீர் மூலக்கூறு (a water molecule) உண்டாகிறது. பரிசோதனைச் சாலையில் செய்து பார்த்த சோதனைகள் இந்தக் கருத்தை நிரூபிக்கின்றன. இது சேர்த்துப் பார்க்கும் முறை (method of synthesis) ஆகும். அதைப் போலவே நீரின் மூலம் மின்சாரத்தைப் பாய்ச்சினால்

அது இரண்டு பங்கு ஹைட்ரஜனாகவும் ஒரு பங்கு ஆக்ஸிஜனாகவும் பிரிவடைகிறது. இது பிரித்துப் பார்க்கும் முறை (method of analysis) ஆகும். இத்தகைய இரண்டு வித சோதனைகளின் முடிவு நீரைப் பற்றிய மேற்கூறிய அடிப்படை உண்மையாக அமைகிறது.

மேற்கூறியது போலவே ஸ்தூல சரீரத்தையும் இரண்டு விதங்களிலும் நமது முன்னோர்கள் ஆராய்ந்தனர். அவர்களது அன்றைய ஆராய்ச்சிகளின் முடிவுகள் நமது இன்றைய விஞ்ஞான முடிவுகளுடன் ஒத்திருக்கின்றன. இதிலிருந்து அவர்களது அன்றைய வேதாந்தக் கருத்துக்கள் நம்மவரது இன்றைய விஞ்ஞானக் கருத்துக்ளிலிருந்து வேறுபட்டவையோ முரண்பட்டவையோ அல்ல என்று தெரியவரும். வேதாந்தமும் விஞ்ஞானமும் ஒரே குறிக்கோளை நோக்கிய வெவ்வேறு பாதைகள். அடிப்படையைப் புரிந்து கொண்டு ஆராய்ந்தால் இந்த ஒற்றுமையை நாம் நன்கு உணரலாம்.

ஸ்தூல சரீரமொன்று மரணத்திற்குப் பிறகு என்னென்ன மாற்றங்களை அடைகின்றது என்பதை முதற்கண் ஆராய்வோம். உயிர் பிரிந்த உடல் முதலாவதாகக் குளிர்ந்து விடுகிறது. பிணத்தைத் தொட்டால் ஜில்லென்றிருக்கிறது அல்லவா? அதிலிருந்து உடலில் முன்பிருந்த உஷ்ணம் அல்லது நெருப்பாகிய அம்சம் பிரிந்து விட்டதென அறிகின்றோம். அடுத்ததாகக் காற்றாகிய அம்சம் அதிலிருந்து வெளியேறுகிறது. சிறிது நேரத்திற்கெல்லாம் இதில் ஏற்கெனவே இருக்கும் தண்ணீர் அம்சத்தில்

அது அழுக ஆரம்பிக்கிறது. இறுதியாகத் தூல சரீரம் மண்ணோடு மண்ணுகிறது. அந்த ஸ்தூல சரீரம் எந்த ஒரு இடத்தை அடைத்துக் கொண்டிருக்கிறதோ அந்த 'இடம்' அல்லது வெளி ஆகாயத்தோடு கலந்து விடுகின்றது. இந்த விதமாக எந்த ஐம்பூதங்களின் சேர்க்கையினால் இந்த ஸ்தூல சரீரம் தோன்றியதோ அந்த ஐம்பூதங்களாக மறுபடியும் அது பிரிந்துவிடுகின்றது.

படைப்புக்களிலெல்லாம் அடிப்படையான அம்சம் ஒன்று பொதுவானதாகக் காணப்படுகிறது. காரணம், காரியம் என்ற இரண்டில் காரணம் முந்தியது; காரியம் பிந்தியது. அதாவது காரணம் இன்றிக் காரியம் அமையாது. ஐந்து பூதங்கள் எந்த விதமாகப் பிரிந்து பிறகு எப்படி ஒன்றிணைந்து, ஸ்தூலப் பொருள்களை உண்டாக்குகின்றன என்பதை பஞ்சீகரணம் என்ற வார்த்தை நன்கு விளக்குகின்றது.

நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம் ஆகியவை ஐம்பெரும் பூதங்கள் என்று ஏற்கெனவே கூறப்பட்டன. ஸ்தூலமாக மாறுவதற்கு முன்பு அந்த ஐந்தும் பிரிந்து இருந்தன. இவைகளுடைய சுயமான தூய நிலைகளில் அவைகள் தன்மாத்திரைகள் என்றழைக்கப்படுகின்றன. தன் மாத்திரை என்ற பதத்தை தத்-மாத்திரம் என்று பிரிக்கலாம். தத்மாத்திரம் என்ருல் அது மட்டுந்தான் என்று பொருள். ஒன்று சேர்வதற்கு முன் அவை தனித்திருந்தன என்பதை அந்தப் பதம் குறிக்கிறது.

இந்த ஐந்து பூதங்களும் விஞ்ஞான ரீதியாக ஐந்து படித்தரங்களில் ஒன்று சேர்ந்து ஸ்தூல உருவடைகின்றன. அந்த ஐந்து படித்தரங்களைக் கீழே காண்போம்.

முதலாவது நிலையில் அவை ஐந்து தன்மாத்திரைகளாக இருக்கின்றன.

இரண்டாவது நிலையில் ஒவ்வொரு தன் மாத்திரையும் இரண்டு சம பகுதிகளாகப் பிரியும் நிலையில் உள்ளது.

மூன்றுவது நிலையில் ஒவ்வொரு தன்மாத்திரையும் இரண்டு சமபகுதிகளாகப் பிரிந்து விடுகின்றது.

நான்காவது நிலையில் அந்த இரண்டு சம பகுதிகளில் ஒரு சம பகுதி அதாவது பாதி அப்படியே இருக்க மற்ற பாதிப்பாகம் ஒவ்வொன்றும் நான்கு பாகங்களாகப் பிரிகின்றது. அதாவது பிரிவுபட்ட மற்ற நான்கு அரைக்கால் தன்மாத்திரைகளுடன் சேர்கின்றன.

இறுதியான ஐந்தாவது நிலையில் ஒவ்வொரு தன் மாத்திரையினுடைய பிரிவுபடாத பாதிப் பாகமானது. பிரிவுபட்ட மற்ற நான்கு அரைக்கால் தன் மாத்திரைகளுடன் சேர்கின்றன.

மேற்கூறிய விதத்தில் ஐம்பூதங்கள் ஒன்று சேர்ந்து ஸ்தூல சரீரம் தோன்றக் காரணமாய் அமைகின்றன. இந்த ஸ்தூல சரீரத்தின் துணை கொண்டு மனிதன் இன்ப துன்பங்களை அனுபவிக்கிறுன். எனவே ஸ்தூல

சரீரம் போகாயதனம் என்று அழைக்கப்படுகின்றது.

இந்த ஸ்தூல சரீரத்தைக் கொண்டு நாம் அனுபவிக்கும் இன்ப துன்பங்கள் நமது பூர்வ கர்மங்களால் நிர்ணயிக்கப்படுகின்றன. நாம் எண்ணிய எண்ணங்கள், நாம் செய்த வெவ்வேறு செயல்கள் அனைத்தினுடைய மொத்தப் பலன்தான் இப்பொழுது நாம்பெற்று விளங்கும் ஸ்தூல சூக்ஷ்ம சரீரங்களின் அடிப்படை. அதாவது இன்னும் சற்று விளக்கமாகக் கூறப்போனால் இந்த ஜன்மத்தில் நாம் எண்ணும் எண்ணங்கள், செய்யும் செயல்கள் ஒவ்வொன்றும் இனி எதிர்காலத்தில் நாம் பெற இருக்கும் வாழ்க்கையை உருவாக்குகின்றன. இந்தப் பிறவியில் நம்மிடம் இருக்கும் தீய வாசனைகளை ஒதுக்கி நற்கருமங்களில் ஈடுபட்டால் எதிர்கால வாழ்வு பிரகாசமானதாக அமையும். மாருக இந்தப் பிறவியை நாம் பாபச் செயல்களில் பாழடித்தால் எதிர்காலமும் இருண்டதாக அமையும். நம்மை நிர்ணயிப்பது நாம்தான். இந்தக் கருத்தில்தான் பகவான் கண்ணன் கீதையில் "உத்தரேத் ஆத்மனாத்மானம்" என்று தெரிவிக்கிருர். எனவே நம்மை உருவாக்குவதோ அல்லது உருக்குலைப்பதோ நமது கையில்தான் இருக்கிறது. படிப்படியாக முன்னேற்றமடைந்து இறுதியில் இறையுடன் இரண்டறக் கலப்பதுதான் மனித வாழ்வின் குறிக்கோள். "ஸ்வ கர்மணு தம் அப்யர்ச்ய ஸித்திம் விந்ததி மானவ:" என்ற வாக்கியமும் இதே கருத்தைத்தான் தெரிவிக்கிறது.

# 13

पञ्चप्राणमनोबुध्दिदशेन्द्रियसमन्वितम् ।
अपञ्चीकृतभूतोत्थं सूक्ष्मांगं भोगसाधनम् ॥

பஞ்சப்ராணமனோபுத்தி தசேந்திரிய. ஸமன்விதம்।
அபஞ்சீக்ருத பூதோத்தம் ஸூக்ஷ்மாங்கம் போக
ஸாதனம் ॥

வாயுக்க ளைந்து மனம்புத்தி யீரைந்தா
யேயுங் கருவிக ளேய்ந்துண-காயங்
கலவாத நுண்பூத காரியமாம் போகத்
துலவாத சாதனமா மோர். --[ஸ்ரீ ரமணர்]

पञ्चप्राण பஞ்சப்ராண-ஐந்து வகைப் பிராணன்கள், मनो மனோ-மனம், बुद्धि புத்தி-புத்தி, दशेन्द्रिय தசேந்திரிய-பத்து இந்திரியங்கள் (இவைகளால்) समन्वितं ஸமன்விதம்- இணைந்து ஆனதும், अपञ्जीकृत भूतोत्थं அபஞ்சீக்ருத பூதோத்தம்-பஞ்சீகரணம் செய்யப்படாத பூதங்களிலிருந்து எழுந்ததுமான, सूक्ष्मांगं ஸூக்ஷ்மாங்கம்-ஸூக்ஷ்ம (மான) சரீரம், भोगसाधनम् போக சாதனம்-துய்ப்பதற்குரிய கருவியாம்.

கருத்துரை : "ஐந்து பிராணன்கள், மனம், புத்தி, பத்துப் புலன்கள் ஆகியவை பஞ்சீகரண முறைக்கு முன்பு தோன்றியவைகளாக அமைந்து உண்டாக்கும் சூக்ஷ்ம சரீரம் போகத்தை அனுபவிக்கும் கருவி என்று சொல்லப்படுகிறது." முதலில் சொல்லப்பட்ட போகாயதனம் ஸ்தூல சரீரம். இந்த சுலோகத்தில் சொல்லப்படும் போக சாதனம் என்பது ஐந்து பிராணன்கள், மனம், புத்தி, பத்து இந்திரியங்கள் இவற்றாலானது சூட்சும சரீரம் ஆகும். இது

பஞ்சீகரணம் ஆகாத பூதங்களினாலானது. அதுவே இன்பம் துய்ப்பதற்கு உள்ள கருவியாம்.

ஆகாயம், காற்று, நெருப்பு, நீர், நிலம் ஆகிய பஞ்ச பூதங்களால் ஸ்தூல சரீரம் எவ்வாறு ஆக்கப்பட்டிருக்கிறது என்பதைச் சென்ற சுலோகத்தில் ஆராய்ந்தோம். இந்த ஐம்பூதங்களை சமஸ்கிருதத்தில் ப்ருத்வீ, அப்பு, தேயு, வாயு, ஆகாசம் என்பர். இவ்வைந்தும் ஐந்து தன் மாத்திரைகள் என்றழைக்கப்படுகின்றன. இந்த ஐந்து பூதங்களும் பிரிந்து பின்பு ஒன்று சேர்வதை பஞ்சீகரணம் என்றழைப்பர். இதைப் பற்றிய விளக்கமான விவரம் ஏற்கனவே கடந்த சுலோகத்தில் தரப்பட்டிருக்கிறது. பஞ்சீகரணத்தின் விளைவாக சுகம் துக்கம் ஆகியவற்றை அனுபவிக்கும் போக நிலையாக விளங்கும் ஸ்தூல சரீரம் தோற்றத்திற்கு வருகிறது.

ஒவ்வொரு ஜீவனிடத்தும் மூன்று சரீரங்கள் இருக்கின்றன. அவை முறையே ஸ்தூல சரீரம், சூக்ஷ்ம சரீரம், காரண சரீரம் என்பனவாகும். இதை விளக்குவதற்குப் புளியம்பழம் ஒன்றை உதாரணமாக எடுத்துக் கொள்வோம். புளியம்பழத்தில் மூன்று முக்கிய பாகங்கள் உள்ளன. மேல்தோடு, சத்துள்ள பாகம், உள்ளே உள்ள கொட்டை என்பவையே அந்த மூன்று பாகங்களாகும். ஜீவனிடத்துக் காணப்படும் மூன்று சரீரங்களுடன் இவற்றை ஒப்பிட்டால், புளியம்பழத்தின் மேல் ஓட்டை ஸ்தூல சரீரத்துடனும், சத்து பாகத்தை சூக்ஷ்ம சரீரத்துடனும், கொட்டையைக் காரண சரீரத்தோடும் ஒப்பிடலாம். இந்த சுலோகத்தில் சூக்ஷ்ம சரீரம் பற்றிய விளக்கம் தரப்படுகின்றது.

சூக்ஷ்ம சரீரம் லிங்க சரீரம் எனவும் அழைக்கப்படுகின்றது. இது பதினேழு தத்துவங்களால் ஆனது. ஐந்து பிராணன்கள், பத்து இந்திரியங்கள், மனம், புத்தி ஆகியவையே அந்தப் பதினேழு ஆகும்.

இந்திரியங்கள் மொத்தம் பத்து. கர்மேந்திரியங்கள் ஐந்து. ஞானேந்திரியங்கள் ஐந்து. ஸ்ரோத்ரம் (காது), த்வக் (தோல்), சக்ஷு (கண்), ஜிஹ்வா (நாக்கு), க்ராணம் (மூக்கு) ஆகியவை ஐந்து ஞானேந்திரியங்களாகும். வாக்கு, பாணி (கை) பாதம், உபஸ்தம், பாயு ஆகியவை ஐந்து கர்மேந்திரியங்களாகும்.

இந்த சுலோகத்தில் பஞ்சப் பிராணன் என்ற வார்த்தை வருகிறது. பஞ்சப்ராணன் என்றால் ஐந்து பிராணன்கள் என்று பொருள். பொதுவாகப் பிராணன் என்றால் நாம் உள்ளே இழுத்து வெளிவிடும் மூச்சு என்று அர்த்தம் செய்கிறோம். உண்மையில் பிராணன் என்ற வார்த்தை இதைவிட இன்னும் அதிக அர்த்தத்தைக் கொண்டு விளங்குகின்றது. நமது சரீரத்தின் மூலம் எந்த ஒரு உயிர்ப்புத் தன்மையானது வெளிப்படுகின்றதோ அதைப் பிராணன் எனலாம். அந்த பிராணன் ஐந்து விதமாகத் தொழில் புரிகிறது. வாழ்க்கையாகிய நிகழ்ச்சியின் ஐவகைக் கிரியைகள் பஞ்சப்ராணன்களாகின்றன. ப்ராணன், அபானன், வியானன், உதானன், சமானன் ஆகியவையே பஞ்ச பிராணன்களாம். ப்ராணன் ஐந்து வகையாகச் செயல்படும் விதத்தைக் கீழே விரிவாகக் காண்போம்.

உச்சுவாச, நிஸ்ச்வாசம் பிராணனுடைய வேலை. நமது புலன்களின் பல்வேறு செயல்களை ஒழுங்குபடுத்தி இயக்கும் தொழில் பிராணனுடையதாகும். பிராணன் இருக்கும் வரைதான் உடலில் உயிர் இருக்கிறது என்பது புலனாகும். பிராணன் உடலை விட்டுப் பிரிந்து விடுமேயாகில் உடல் உபயோகமற்றதாகி விடுகின்றது.

நமது உடலில் கழிவுப் பொருள்களை நீக்கும் தொழில் அபானனுடையதாகும். உணவிலுள்ள சத்துப் பொருள் நீங்கலாக ஏனைய தேவையற்ற பாகத்தை அபானன் வெளியேற்றுகின்றது. மல, ஜல விஸர்ஜனம் செய்விப்பது அபானனது வேலை.

வியானன் ஜீரண மண்டலத்தோடிணைந்ததாகும். உட்கொண்ட உணவை உடலினுள் உட்கிரகிக்க அது உதவுகிறது. இரத்த ஓட்டத்தைக் கவனித்துக் கொள்வது வியானனது வேலை.

சமானன் ஜீரணிக்கப்பட்ட உணவை உடலின் பல்வேறு பாகங்களுக்கும் சமமாகப் பங்கிட்டு வழங்கும் வேலையைச் செய்கின்றது. உடலின் பல்வேறு பகுதிகளுக்கு எவ்வளவு உணவு தேவை என்பதை அது நிர்ணயிக்கிறது. உதாரணமாக கைகள் அதிகமாக வேலை செய்கையில் அவற்றிற்கு அதிக சக்தி தேவைப்படுகிறது. மூளை உழைப்பின் பொழுது மூளைக்கு அதிக சக்தி அளிக்கப்படல் வேண்டும். இந்த விதமாகப் பங்கிட்டுக் கொடுப்பதுதான் சமானனது வேலை.

உதானன் ஆகாரத்தை விழுங்குவதற்கு உதவி புரிகின்றது. மற்றும் சுஷுப்தி நிலையில் உதானன் ஜீவனை பிரம்மத்தில் நிலைத்திருக்கும்படிச் செய்கிறது. மரணத்தறுவாயில் அது சூக்ஷ்ம சரீரத்தை ஸ்தூல சரீரத்திலிருந்து பிரிக்கிறது.

மனித உடலில் மிகவும் இன்றியமையாத முக்கியமான பகுதி இதயமாகும். உடலின் கேந்திரஸ்தானமாக அது விளங்குகின்றது. ஒரு அரசாங்கத்தின் தலைநகருடன் இதயத்தை ஒப்பிடலாம். பாரத அரசாங்கத்தின் தலைநகரம் புதுடில்லி. மத்திய அரசு புதுடில்லியைத் தலைநகராகக் கொண்டு நாடு முழுவதையும் ஆட்சி செய்கிறது அல்லவா? அதுபோல், இதயத்தை மையமாகக் கொண்டு மேலே குறிப்பிட்ட பிராணன்கள் இந்த உடலாகிய அமைப்பை இயக்குகின்றன. ஒரே உயிர்ப்புச் சக்தியானது ஐந்து விதங்களாகத் தொழிலாற்றுகின்றது. ஒரு அரசாங்கத்தில் பல்வேறு மந்திரிகள் அலுவல்களைக் கவனிப்பது போல பல்வேறு பிராணன்கள் உடலில் பல்வேறு அலுவல்களைச் செய்கின்றன.

மேற்சொன்ன பிராணன், அபானன், வியானன், சமானன், உதானன் ஆகிய ஐந்தும் முக்கிய பிராணன்கள் என்ற பகுதியில் அடங்குகின்றன. இவற்றைத் தவிர நாகன், கூர்மன், கிரிகரன், தேவதத்தன், தனஞ்சயன் என்ற ஐந்து உபபிராணன்கள் இருக்கின்றன. விக்கல், வாந்தியெடுக்கச் செய்தல், கண்களை மூடித் திறத்தல், பசியை உண்டாக்குதல், கொட்டாவி விடுதல், உடலை வளர்த்தல் போன்ற காரியங்களைச் செய்வதற்கு அவை துணைபுரிகின்றன.

இந்திரியங்களின்பால் அமைந்துள்ள செயல் முறைகளை பிராணன் தனது கட்டுப்பாட்டின் கீழ் வைத்திருக்கிறது. உதாரணமாகக் கண்கள் பார்க்கின்றன. காதுகள் கேட்கின்றன. பார்த்தல், கேட்டல் ஆகிய செய்கைகளைச் செய்ய உதவியாக இருக்கும் வெறும் கருவிகள்தான் கண்களும், காதுகளும். உண்மையில் பார்த்தல், கேள்வி கேட்டல் ஆகிய செயல் முறையானது. மனம்-புத்தியில் அடங்கியது. கண்கள் மூலம் பார்க்கப்படுகிறது, காதுகள் மூலம் கேட்கப்படுகிறது. எனவே கேட்க வைப்பது, பார்க்க வைப்பது மனமும் புத்தியுமேயாகும். மனம், புத்தி வேலை செய்யாத இடத்தில் கண்களால் பார்க்க முடியாது. காதுகளால் கேட்க முடியாது. எனவேதான் சில சமயங்களில் நமது மனமும் புத்தியும் எதைப் பற்றியோ எண்ணிக் கொண்டிருக்கையில் கண் முன்னர் நடந்து சென்ற நபரைக் கூடக் கவனியாது அருகில் உரக்கப் பேசிய நபரது சப்தத்தையும் கேட்காது நாம் அமர்ந்திருக்கின்றோம். பிறகு அந்த நபர் வந்து நம்மிடம் தகவல் தெரிவிக்கையில் "அப்படியா? என் முன்னால் நீ சென்றாயா? அப்பொழுது என் மனம் எங்கோ இருந்தது" என்று பதில் கூறுகிறோம்.

எனவே சுருக்கமாகக் கூறின் ஐந்து பிராணன்கள் பத்து இந்திரியங்கள் மனம், புத்தி ஆகியவை அடங்

கியது சூக்ஷ்ம சரீரம். பஞ்சீகரணம் ஆவதற்கு முன் தன் மாத்திரைகளாகிய பஞ்சபூதங்களால் ஆனது அது. இதன் மூலம் நாம் சுக துக்கங்களை அனுபவிக்கின்றோம். ஸ்தூல சரீரம் "போகாயதனமாக" விளங்குகின்றது. சூக்ஷ்ம சரீரம் "போக சாதன"மாக விளங்குகின்றது.

# 14

अनाध्यविधयाऽनिर्वाच्या कारणोपाधिरुच्यते ।
उपाधित्रितयादन्यमात्मानमवधारयेत् ॥

அநாத்யவித்யாநிர்வாச்யா காரணோ-
பாதிருச்யதே
உபாதித்ரிதயாதன்யம் ஆத்மான வதாரயேத் ॥

ஆதியற் றிற்றென் றறையொணு வஞ்ஞான
மோதுவ ராதி யுபாதியா-யோது
முபாதிக ளாமூன் றுடல்களின் வேரு
யுபாதியி லான்மாவை யோர்.

--(ஸ்ரீ ரமணர்)

अनादि அனாதி-ஆதி அல்லது தொடக்கம் என்ற ஒன்றேயில்லாததும், अनिर्वाच्या அநிர்வாச்யா- எடுத்துப் பேசமுடியாததுமான, अविध्या அவித்யா-அவித்தை, कारणोपाधिः காரணோபாதி-காரண :உபாதி (காரணக் கருவி) उच्यते உச்யதே-சொல்லப்படுகிறது, उपाधित्रितयात् உபாதித்ரிதயாத் - இந்த மூன்று உபாதிகளுக்கும், अन्यं அன்யம்-வேறே உள்ளதாக (மாறுபட்டதாக) आत्मानं ஆத்மானம் - ஆத்மாவை, अवधारयेत् அவதாரயேத்-உறுதி செய்து கொள்வோமாக.

கருத்துரை : காரண உடல் ஆதியற்றது; பேச வொண்ணுதது. இந்த உடலையும் சேர்த்து ஏற்கனவே சொல்லப்பட்டவற்றுடன் மூன்று சரீரங்களாயின. இம்மூன் றையும் மீறியதே ஆத்மநிலை என்று அறியப்படட்டும்.

கரு கருவென்று இருட்டும் நேரம். பயந்த சுபாவ முள்ள ஒருவன் ஜன சஞ்சாரமற்ற பகுதியில் தனியனாகச் சென்று கொண்டிருக்கிறுன். அப்படி அவன் மனதிலே ஐயத்துடன் சென்று கொண்டிருக்கும் போது சற்று தூரத் திலே ஏதோ ஒன்று நின்று கொண்டிருப்பதைக் கண்டான். கண்டவன் நின்று விட்டான். "ஐயோ! அது பிசா சாக இருக்கலாமோ! ஒருவேளை அப்படியே பிசாசாக இருந்து விட்டால் என் கதி என்னாவது?" என்ற பயம் அவனைக் கவ்விக் கொள்கிறது. அவனது உடலெல்லாம் வியர்க்கிறது. அப்படியே நின்று கொண்டிருந்தவன் அந் தப் பொருள் ஆடாது அசையாது நிற்பதைக் கவனித்தான். "பிசாசு என்றுல் இவ்வளவு நேரம் சும்மா இருக்காதே! ஒருவேளை வெறும் தூணுக இருக்கலாமோ!" என்ற பயத் துடன் பயத்தோடேயே அடி அடியாக முன்னேறுகிறுன். அதன் பக்கத்திலேயும் சென்று விட்டான். அப்பொழு தும் அது அசையவில்லை. மிகுந்த தைரியத்தை வரவ ழைத்துக் கொண்டு அதை அவன் தொட்டும் விடுகிறுன். அது கல்தூண் என்ற உண்மையை அவன் இப்பொழுது தெரிந்து கொள்கிறுன்.

இப்பொழுது அவனிடத்தில் சற்று முன்பிருந்த பயம் இல்லை. தூணைப் பிசாசு என்று அவனைக் கருத வைத் தது எது? உண்மையில் அது தூண்தான் என்ற அறிவு அவனிடம் இல்லாதிருந்ததேயாகும். ஒரு பொருளைப்பற் றிய உண்மை நிலையைத் தெரிந்து கொள்ளாதவரை அதைக் குறித்து அனேக தப்பெண்ணங்கள் நிலவுவது சகஜம். உண்மையை நம்மிடமிருந்த அஞ்ஞானம் என்னும் ஆவரணம் அல்லது திரையானது மறைக்கிறது. உண்

மையை அறியாத வரை தவறான வழியில் செல்லும் நமது சிந்தனையானது ஏதேதோ இல்லாதவற்றையெல்லாம் கற்பனை செய்யும். அப்பொழுது தோன்றும் கற்பனைத் தோற்றங்கள் அனைத்தும் பொய். அறிவை அறியாமை மூடிக்கொள்கையில் மனம் குதித்தாடுகிறது. இல்லாததை இருப்பதாக நம்மை அது கருதச் செய்கிறது.

படலம் படலமாக அஞ்ஞானமாகிய திரையானது ஆத்மாவை மூடியிருக்கையில் ஆத்மனது உண்மை நிலையை உணர்ந்து கொள்வது எங்ஙனம்? ஆத்மனது உண்மை நிலையை உணரமுடியாத நிலையில் ஆத்மனைப் பற்றிய பல தவறான கருத்துக்கள் தோன்றுகின்றன.

கட்டுப்பாடுகளுக்கெல்லாம் அப்பாற்பட்டது ஆத்மன். அனைத்தையும் கடந்த அது அனைத்தினுள்ளும் ஊடுருவி நிற்கிறது. அவித்தையின் காரணமாக அது கட்டுப்பட்டது போல் தென்படுகிறது. ஆத்மன் ஸ்தூல, சூக்ஷ்ம, காரண சரீரங்களுக்கு அப்பாற்பட்டது.

அவித்தையே காரண சரீரம். ஏனெனில் ஆத்மனைப் பற்றிய உண்மை அறிவு நம்மிடம் இல்லாததால்தான் அலைமோதும் ஆசைகள் நம்மிடம் தோன்றுகின்றன. எண்ணங்களும், செயல்களும் ஆசைகளின் காரணமாகப் பின் தோன்றுகின்ற எண்ணம், செயல் ஆகியவை முறையே புத்தி, மனம், சரீரம் ஆகியவற்றின் மூலம் வெளிப்படுகின்றன. எனவே ஸ்தூல, சூக்ஷ்ம, சரீரங்கள் அவித்தையின் விளைவுகளாதலால் அது காரண சரீரம் என்று அழைக்கப்படுகிறது.

இந்த அவித்தை எப்படிப்பட்டது? அது அனாதி. அதாவது ஆரம்பமற்றது. அவித்தைக்கு ஆரம்பம் கிடையாது என்ற கருத்தை வேதாந்தத்தைப் பயிலும் ஆரம்ப சாதகர்களால் புரிந்து கொள்வது மிகவும் கடினமாகும். இதைத் தற்கால விஞ்ஞானக் கருத்துக்கள் மிகவும் எளி

யமுறையில் புரிய வைக்கின்றன. தற்கால விஞ்ஞானி ஒருவரிடம் சென்று நேரம் அல்லது காலம் என்பதற்கு விளக்கம் தருமாறு கேட்டால் அவர் உடனே "இரண்டு நிகழ்ச்சிகளுக்கிடையேயுள்ள இடைவெளியே காலமாகும்" என்று கூறுவார். நமது வேதாந்த நூல்களில் நமது ஞானிகள் அதே காலத்தை அனுபவங்களுக்கிடையேயுள்ள இடைவெளி எனப்பகர்கின்றனர். அனுபவம் ஒன்றைப்பெறுவதற்கு அடிப்படைத் தேவைகள் மூன்று. அவையாவன: அனுபவிக்கும் நபர், அனுபவிக்கப்படுபொருள், அனுபவிப்பவருக்கும் அனுபவிக்கப்படு பொருளுக்கும் இடையேயுள்ள தொடர்பு, அதாவது அனுபவம் ஆகியவையே அந்த மூன்றும். எனவே மனம், புத்தி ஆகியவற்றால் அமைந்த அனுபவிக்கும் நபர் அவர் அனுபவிப்பதற்குத் தேவையான புற உலகப்பொருள்களின் துணை கொண்டு முதன் முதலில் அவற்றை அனுபவித்திருக்க வேண்டும்.

"அ" என்பது ஒரு புள்ளி. அந்த ஒரு புள்ளியில் அளப்பதற்கு ஒரு தூரமும் கிடையாது. "ஆ" என்பது மற்றொரு புள்ளி. இப்பொழுது 'அ' 'ஆ' என்ற இரண்டு புள்ளிகளுக்கிடையில் இடைவெளி தூரத்தைக் கணக்கிட நம்மால் இயலும். எனவே தூரத்தை அளக்க இரண்டு புள்ளிகள் தேவை. அதுபோல் முதல் அனுபவத்தின் முடிவு இரண்டாவது அனுபவத்தினுடைய ஆரம்பமாக அமைகிறது. அவ்விரண்டு அனுபவங்களுக்கு இடையேயுள்ள இடைவெளி நேரம்தான் காலம் எனக் கணக்கிடப்படுகிறது.

ஈண்டு சிக்கல் ஒன்று எழுகிறது. முதல் அனுபவம் என்று பேசுகின்ற பொழுது அங்கே காலம் என்ற பிரச்சினை எழ இடமில்லை. அந்த முதல் அனுபத்திற்குத் தேவையானவை யாவை? அனுபவிக்கும் நபர், அறியப்படும் உலகப் பொருள்கள் போன்றவை. எனவே காலம் என்பதைக் கணக்கிடுவதற்கு முன்னமேயே அதைக் கணக்கிடத் தேவையான உலகப்பொருள்கள் தோன்றியி

ருக்க வேண்டும் அல்லவா? அத்துடன் அப்பொருளான தேவையான மனம், புத்தி, ஆகியவையும் தோற்றுவிக்கப் பட்டிருக்க வேண்டும். மனம், புத்தி ஆகியவை காரண சரீரத்தின் பாற்பட்டவை. காரண சரீரம்தான் அவித்தை. எனவே அவித்யையைக் காலத்தைக் கொண்டு கணக்கிட முடியாது என்பது முனிவர்கள் கண்ட முடிவு.

சிறு குழந்தை ஒன்று தனது தாத்தாவிடம் கேள்வி கேட்டதாம். "தாத்தா! எனது பாட்டியினுடைய திருமண வைபத்திற்கு என்னை நீ ஏன் கூட்டிச் செல்லவில்லை?" என்பதே அந்தக் கேள்வி. பேரன் பாட்டியின் கல்யாணத்தில் கலந்து கொள்வது என்பது எப்படி முடியும்? அதுபோல் காலத்தைக் கடந்த அவித்தையைக் காலத்தின் துணை கொண்டு அறிவது எங்ஙனம்? முடியாத ஒன்றுதான்.

அவித்தை காலத்திற்கு முந்தியது அல்லது காலத்தைக் கடந்தது என்பதைத் தான் அநாதி என்ற சொல் குறிக்கிறது.

அடுத்ததாக அவித்தையை விளக்கும் வகையில் 'அநிர்வாச்யா' என்ற பதம் இந்த சுலோகத்தில் வருகிறது. "அநிர்வாச்யா' என்றால் விளக்க ஒண்ணாதது. விளக்க முடியாதது. விளக்கத்திற்கு அப்பாற்பட்டது எனப்பொருள்படும். கண்ணால பார்க்கக்கூடிய ஒன்றை அல்லது மெய்யால் உணரக்கூடிய ஒன்றை அல்லது சிந்தனையால் சிந்திக்க முடிகின்ற ஒன்றைத்தான் நம்மால் விளக்கிக் கூறமுடியும். ஆனால் அவித்தை எப்படிப்பட்டது? ஸ்தூல, சூக்ஷ்ம சரீரங்களுக்கு அடிப்படையாக அமைந்தது. அதை நம்முடைய அனுபவமாகிய எல்லைக்குள் கொண்டு வருவதென்பது முடியாத காரியம். அந்த நிலையில் அதை எப்படி விளக்கிச் சொல்வது? அது மட்டுமல்ல. இருக்கும் ஒன்றை வார்த்தைகளால் அது இப்படி இருக்கிறது, அதனது தன்மைகள் இன்னின்னவைகள் என்று விளக்கிக் கூறலாம். இன்ன காரணத்தினால் இது இருக்க

முடியாது என்று விளக்கம் கூறிவிடமுடியும். அவித்தை எப்படிப்பட்டது? அது 'இருக்கிறது' என்ற ரகத்தையோ அல்லது 'இல்லாதது' என்ற ரகத்தையோ, அல்லது இவ் விரண்டையும் கலந்த ஒன்றையோ சார்ந்ததல்ல. அப்ப டிப்பட்ட அவித்தையை வார்த்தைகளால் விளக்கிக் கூற முடியுமோ? முடியாது என்பதைத் தான் 'அநிர்வாச்யா' என்ற பதம் சுட்டிக்காட்டுகிறது.

ஒரு நபர் பசியால் வாடுகிறான் என வைத்துக் கொள் வோம். அவனுக்குத் தேவையானது எது? உணவு. மிகுந்த பிரயாசைக்குப் பிறகு அவனுக்குக் கொஞ்சம் உணவு கிட்டுகிறது. அப்படிக் கிட்டிய உணவை வைத் துக்கொண்டு அவன் என்ன செய்யவேண்டும்? உடனே அந்த உணவை உண்டு தனது பசிப்பிணியைப் போக்கிக் கொள்ள வேண்டும். அப்படிச் செய்யாது, அந்த உணவு யாரால், எங்கே, எப்படிச் சமைக்கப்பட்டது, அந்த உண வுக்கு வேண்டிய பொருள்களைப் பயிர் செய்தவர் யார், அவை எங்கே பயிரிடப்பட்டன என்பனவற்றைப் பற்றிச் சிந்திப்பதிலே காலத்தைச் செலவழிக்க முற்படுவானேயா கில் அவனை எப்படிப்பட்டவனென்று கூறுவது?

மேற்கூறப்பட்ட உதாரணத்தின் துணை கொண்டு பார்க்கையில், குருவை சிஷ்யன் நாடிச் செல்வது அறி வைப் பெறுவதற்காகவே அன்றி, 'அறியாமையைப்' பற்றி ஆராய்வதற்காக அல்ல. இருளிலே சிக்கித் தவிப்பனுக் குத் தேவையானது ஒளி. அஃதன்றி இருளைப் பற்றிய ஆராய்ச்சியல்ல. அதுபோல் அறியாமையில் உழலும் ஒரு வனுக்குத் தேவையானது அறிவேயன்றி அறியாமையைப் பற்றிய ஆராய்ச்சியன்று. ஆகையினால்தான் முனிவர்கள் அறிவை ஆராய்ந்தார்களே அன்றி அறியாமையைப் பற்றி ஆராயவில்லை. அதுமட்டுமின்றி அறியாமையை ஆரா யத்தான் முடியுமா? கையில் ஒருவன் விளக்கை வைத் துக் கொண்டு எவ்வளவு தூரம் ஓடினாலும் இருளைக்

கண்டு பிடிக்க முடியுமோ? இவனது கையில் விளக்கு இருந்தால் இவன் செல்லும் இடமெல்லாம் வெளிச்சமும் இருக்கத்தான் செய்யும். இருள் இருக்காது. அத்தகைய ஒருவனது முயற்சியை வீண் முயற்சி என்று சொல்லாது வேறு என்ன கூறுவது? அதுபோல் அறியாமையைப் பற்றி அறிய நாம் மேன்மேலும் முயலுகையில் அது நம் மிடமிருந்து விலகிச்செல்கிறது. அந்த முயற்சி எதுவரை நீடிக்கும்? உண்மை அறிவு உதயமாகும் வரை. அப்பொழுது இவன் அறிவு சொரூபியாகிவிடுகிறான்.

# 15

पञ्चकोशादियोगोन तत्तन्मय इव स्थितः ।
शुद्धत्मा नीलवस्त्रादियोगेन स्फटिको यथा ॥

பஞ்ச கோசாதி யோகேந தத்தன்மய இவஸ்தித: ।
சுத்தாத்மா நீலவஸ்த்ராதி யோகேந ஸ்படிகோயதா॥

கோசங்க ளைந்துமுதற் கூட்டுறவா லான்மாவு
மாசிலதே யாயினுமவ் வம்மயநே-ரேசருவு
நீலபடா திக்கலப்பா னிர்மல மாம்படிகம்
போலவே யொட்டாப் பொருள்.

--[ஸ்ரீ ரமணர்]

नीलवस्त्रादियोगेन நீல வஸ்த்ராதி யோகேந-நீலத்துணி முதலியவற்றின் சேர்க்கையால், स्फटिको ஸ்படிகோ-கண்ணாடி, यथा யதா-எப்படியோ (அப்படியே), शुध्दात्मा சுத்தாத்மா-சுத்த ஆத்மன், पञ्चकोशादि பஞ்ச கோசாதி-பஞ்ச கோசங்களினுடைய, योगेन யோகேந-சேர்க்கையினால், तत्तन्मय इव தத்தன்மய இவ-அததன் மயமானது (உருவமானது) போலவே, स्थितः ஸ்தித:-தோன்றி நிற்கிறது

கருத்துரை : எந்த நிறத்துணியின் மீது கண்ணாடி வைக்கப்பட்டிருக்கிறதோ அந்தத் துணிக்கேற்றவாறு நிறத்தைக் கண்ணாடி ஏற்றுக்கொள்ளும். அதே போல் சுத்த ஆத்மன் எந்த உறையின் மூலம் இயக்கம் காட்டுகிறதோ அந்த உறையின் தன்மையை ஏற்றது போல் பார்க்கப் படுகிறது.

ஆத்மா தூய்மையின் உறைவிடம். அது பரிபூரணத்தன்மை உடையது. எல்லாவித பந்தங்களுக்கும் அப்பாற்பட்டது. அத்தகைய பரிபூரண, சுத்த, சைதன்ய ஆன்மா அசுத்தமானதாகவும், கட்டுப்பட்டது போன்றும் ஏன் காட்சி தரவேண்டும் என்ற கேள்விக்கு இந்த சுலோகத்தில் ஸ்ரீசங்கரர் அழகிய முறையில் விடை தருகிருர்.

அழகியதொரு மேஜையின் மீது நீலநிறத்திலுள்ள ஒரு மேஜை விரிப்பு விரிக்கப்பட்டிருக்கிறது. அதன் மீது ஒரு தூய கண்ணாடித்துண்டு இருக்கிறது. கண்ணாடித் துண்டிற்கு எந்தவித நிறமும் கிடையாது. நிறமற்ற அந்த கண்ணாடித்துண்டு நீல நிறத் துணியின் மீது இருக்கையில் நீலநிறமாகத் தோன்றுகிறது. நிறமற்றிருந்த அது இப்பொழுது நீலநிறமாகக் காணப்படுவானேன்? நீலத் துணியுடன் அது தொடர்பு கொண்டு விளங்குவதால் ஏற்பட்ட இந்த மாற்றம் தாற்காலிகமானது. ஏனெனில் அதை அங்கிருந்து எடுத்து விட்டால் அது மீண்டும் சுயநிலையிலேயே காட்சி தருகிறது. அது மட்டுமல்ல. நீலநிறத்துணியுடன் தொடர்பு கொண்டிருந்த வேளையிலும்கூட அதனுடைய நீலநிறம் வெறும் தோற்றமே தவிர கண்ணாடியில் எந்தவித மாற்றமும் ஏற்படவில்லை. துணியின் நீலநிறம் கண்ணாடியில் ஏற்றிக்கூறப்பட்டது. அதாவது ஆரோபிக்கப்பட்டது. உண்மையில் துணியின் நீலநிறத்தால் அந்தக் கண்ணாடி எந்த விதத்திலும் பாதிக்கப்படவில்லை.

நீலநிறத்துணியின் மீது வைக்கப்பட்டிருக்கும் அந்த நிறமற்ற கண்ணாடியை அந்த நிலையில் ஒருவன் பார்த்துவிட்டு அந்தக் கண்ணாடி நீலநிறமுடையது என்று கூறுவானேயாகில், உண்மையில் அந்தக் கண்ணாடி நிறமற்றது, ஆனால் துணியின் சேர்க்கையால் அப்படித் தோற்றமளிக்கிறது என்று அறிந்த ஒருவன் முன்னவனைப் பற்றி என்ன நினைப்பான்? ஐயோ! பாவம்! தாற்காலிகத் தோற்றத்தை, பொய்யான தோற்றத்தை இவன் நிஜம் எனக்கருதுகிருனே என அவன் அவனது அறியாமையைக் குறித்துக் கேலி செய்வான்.

மேற்கூறிய உதாரணத்தில் காண்பது போல் ஆத்மா தன்னளவில் தூயது, பூரணமானது. ஆனால் எந்த ஒரு சூழ்நிலையில் காணப்படுகிறதோ அந்தச் சூழ்நிலையின் குணதிசயங்கள் ஆத்மனில் ஆரோபிக்கப்படுகின்றன. அப்பொழுது தூய, சுயம்பிரகாச, பரிபூரண ஆன்மா கட்டுப்பட்டது போன்றும் அசுத்தமடைந்தது போலவும் அபூரணமானதாகவும் தோற்றம் தருகிறது. ஆத்மாவைப் பஞ்ச கோசங்கள் மூடியிருக்கின்றன. பஞ்ச கோசங்களால் அது மூடப்பட்டிருக்கையில் அந்தக் கோசங்களின் தன்மைகளால் ஆத்மா மலினமடைந்தது போலத் தென்படுகிறது.

கிணறு ஒன்றில் சுத்தமான தண்ணீர் இருக்கிறது. ஆனால் பார்வைக்குத் தண்ணீர் தென்படவில்லை. ஏனெனில் அந்தத் தண்ணீரைப் பாசிப்படலம் மறைத்திருக்கிறது. அந்தப் பாசியை நீக்கினால் அதன் கீழ் உள்ள சுத்தமான தண்ணீர் கண்ணுக்குப் புலனாகிறது. அதுபோல் ஆன்மாவைச் சூழ்ந்திருக்கும் பஞ்ச கோசங்களின் காரணமாக அது களங்கமுடையதாகத் தோன்றுகிறது. அது வெறும் தோற்றமே அன்றி உண்மையல்ல.

இனி ஆத்மாவை மூடியிருக்கும் அல்லது சூழ்ந்திருக்கும் அந்தப் பஞ்சகோசங்கள் யாவை எனக் கீழே காண்போம். அன்னமய கோசம், பிராணமய கோசம், மனோமய

கோசம், விஞ்ஞானமயகோசம், ஆனந்தமய கோசம் என்பவையே அந்த பஞ்ச கோசங்களாகும்.

அன்னமய கோசம் என்பது நமது ஸ்தூல உடல் ஆகும். அது அன்னம் உண்பதால் விருத்தியடைந்து, அன்னம் இன்றேல் அழிவுறும் தன்மையுடையது. இதை நாம் ஆன்மாவை மறைத்திருக்கும் வெளி உறையாகக் கொள்ளலாம். தோல், இரத்தம், மாம்சம், மூத்திரம், மலம் ஆகியவற்றால் ஆன இது முன்னும் இன்றிப் பின்னும் இன்றி இடையிலே தோற்றத்திற்கு வந்தது என்பதுடன் அடிக்கடி மாற்றங்களுக்கு உட்படும் தன்மையது. இத் தகைய அன்னமய கோசம் ஆத்மனிலிருந்து முற்றிலும் வேறுபட்ட குணங்களையுடையதாதலால் அது ஒருக்கா லும் ஆத்மாவாக முடியாது. அறியாமையில் உழல்பவன் மாம்சம், மலம், மூத்திரம், நிறைந்த இவ்வுடலையே ஆத்மா என நினைப்பான். அது தவறாகும்.

அடுத்ததாக கர்மேந்திரியங்கள் ஐந்துடன் பிராணன் சேர்ந்து பிராணமய கோசம் ஆகிறது. அன்னமய கோசம் பிராணனுடன் சேர்ந்து செயல் புரியவல்லதாகிறது. இந் தப் பிராணமயகோசமும் ஆத்மாவாகாது.

இனி ஞானேந்திரியங்கள் ஐந்துடன் கூடின மனமே மனோமய கோசம் அறியாமைக்குக் காரணம் மனமேயா கும். மனம் செயல்படில் உலகம் தோற்றத்திற்கு வருகிறது. மனம் நசித்தால் அனைத்தும் இல்லாததாகிறது. ஆகா யத்தில் சிதறிக்கிடந்த மேகங்களைக் காற்றானது ஒன்று சேர்க்கிறது. பிறகு அதே காற்று திரும்பவும் அவற்றைப் பிரித்து விடுகிறது. அதைப் போலவே இல்லாத ஒன்றை இருப்பதாக நம்மைக் கருதச் செய்வதும், இருப்பதை இல் லாததாக எண்ணச்செய்வதும் இந்த மனமே. எனவேதான் சஞ்சலத்தன்மை வாய்ந்த மனதை அடக்குவதே யோகத் தின் அடிப்படையாகக் கருதப்படுகிறது. பிறப்பிறப்பாகிய பந்தத்திற்கு மனம்தான் மூல காரணம். இந்த மனோமய

கோசத்திற்கு ஆதியும் அந்தமும் உண்டு. இது மாறுதலுக் குட்படும் தன்மையது. எனவே இம்மனோமய கோசமும் ஆத்மாவாக முடியாது.

அடுத்து நான்காவதாக வருவது விஞ்ஞானமய கோச மாகும். ஐந்து ஞானேந்திரியங்களுடன் கூடிய புத்திதான் விஞ்ஞானமய கோசம் எனப்படுகிறது. ஆத்மனை மூடியி ருக்கும் இந்த உறையைப் புத்தி உறை எனலாம். இதில் புத்தியும் அஹங்காரமும் அடங்கியுள்ளன. அவை ஐந்து ஞானேந்திரியங்களின் துணை கொண்டு இயங்குகின்றன. "நான் இந்தச் செயலைச் செய்கிறேன். நானே இதனை அனுபவிக்கிறேன்" என்று நம்மை எண்ணச் செய்வதெல் லாம் இதனது வேலையாகும். இதுவும் ஆத்மாவாக முடியாது.

இறுதியாக, ஆத்மனைச் சூழ்ந்திருக்கும் இறுதி உறை ஆனந்தமய கோசம் ஆகும். அதனது இயல்பு ஆனந் தத்தை அனுபவிப்பதாகும். இது ஆனந்த உறையாகும். ஜீவாத்மன் இதன் மூலந்தான் சுஷுப்தி அவஸ்தையின் போதும் சாத்வீகமான செயலின் பலனை அனுபவிக்கும் போதும் இன்பத்தை அனுபவிக்கின்றது. இது பிரகிரு தியின் ஒரு மாறுபாடாகும். அதில் ப்ரியம், மோதம், ப்ரமோதம் எனப்படும் விருத்திகள் அடங்கியுள்ளன. இது வும் ஆத்மாவிலிருந்து வேறுபட்டதாகும்.

ஏற்கனவே சரீரத்தை ஸ்தூல சரீரம், சூக்ஷ்ம சரீரம், காரண சரீரம் என மூன்றுகப் பார்த்தோம். அவற்றில் ஸ்தூல சரீரத்தில் அன்னமய கோசமும், லிங்க சரீரம் அல்லது சூக்ஷ்ம சரீரத்தில் பிராணமய, மனோமய, விஞ் ஞானமய கோசங்களும், காரண சரீரத்தில் ஆனந்தமய கோசமும் உள்ளன.

ஜாக்கிர அல்லது விழிப்பு நிலையில் பஞ்சகோசங்க ளும் வேலை செய்கின்றன. ஸ்வப்ன அல்லது கனவு

நிலையில் அன்னமய கோசத்தைத் தவிர இதர நான்கும் வேலை செய்கின்றன. சுஷுப்தி அல்லது ஆழ்ந்த உறக்க நிலையில் ஆனந்தமய கோசம் மட்டும் வேலை செய்கின்றது.

மேற்கூறிய பஞ்ச கோசங்களிலிருந்தும் வேறுபட்டது ஆத்மா. அறியாமையால் பஞ்ச கோசங்களின் குறை நிசயங்கள் ஆத்மனிலும் ஆத்மாவினுடைய சச்சிதானந்த நிலை அந்தக் கோசங்களிலும் ஆரோபிக்கப்படுகின்றன. விவேகி உண்மையை உள்ளபடி அறிய வல்லவனாகிறான்.

## 16

वपुस्तुषादिभिः कोशैर्युक्तं युक्त्यावघाततः ।
आत्मानमन्तरं शुद्धं विविच्यात्तण्डुलं यथा ॥

வபுஸ்துஷாதிபி: கோசைர்
யுக்தம் யுக்த்யாவகாதத: ।
ஆத்மாநமாந்தரம் சுத்தம்
விவிச்யாத் தண்டுலம் யதா ॥

உடற்பஞ்ச கோச வுமியாதி யோடுட்
சுடர்பரி சுத்தவான் மாவைத் - திடமான
வுத்தியினாற் குத்தி யொழித்தவற் றையரிசி
யொத்தறிய வேண்டு முணர்.

[ஸ்ரீ ரமணர்]

तुषादिभिः துஷாதிபி: - உமி தவிடு முதலிய, कोशैर्युक्तं கோசைர் யுக்தம் - உறைகளோடு கூடிய, तण्डुलं தண்டுலம் - அரிசியை, यथा अवघाततः யதா அவகாதத: - குத்தி இடித்து எப்படிப் (பிரிக்கிறோமோ) அப்படி, वपुः வபு - ஸ்தூல

உடல், சூட்சும உடல் முதலிய, कोशैः கோசை: - உறைக ளுடன் युक्तं யுக்தம் - கூடிய, शुद्धं சுத்தம் - சுத்தமான தும अन्तरं அந்தரம் - மிக உள்ளேயுள்ளதுமான, आत्मानं ஆத்மானம் - ஆத்மாவை, युक्त्या யுகத்யா - யுக்தியினால் (விவேகத்தினால்), विविच्यात् விவிச்யாத் - பிரித்து எடுக்கவும்.

கருத்துரை : மேலே மூடியிருக்கும் உறைகள் குத்தி நீக்கப் பட்டாலே சுத்தமான அரிசி கிடைக்கிறது. அதே போல் விவேகம் என்ற உலக்கையைக் கொண்டு 'இது இல்லை, இது இல்லை' என்று குத்தி உடல் மனம் புத்தி முதலிய உரைகளை நீக்கிப் பிறகு அதன் மேல் படிந் திருக்கிற அழுக்கையும் விலக்கவேண்டும். பிறகு ஆத்மன் சுத்த உணர்வுத் தத்துவமாகப் பெறப்பட்டு விடும். ஞானப் பிழம்பான பரமானந்த நிலையை அப்போது சாதகன் அடைந்துவிடுவான்.

நண்பர் ஒருவரைச் சந்திப்பதற்காக நாம் அவருடைய வீட்டிற்குச் செல்வதாக வைத்துக் கொள்வோம். நாம் போன சமயத்தில் அந்த நண்பர் வீட்டில் இல்லை. எங்கோ அவசர வேலையின் நிமித்தம் அவர் வெளியே சென் றிருக்கிறார். நாம அவரைச் சந்தித்துப்பேசும் பொருட்டு அவருடைய வீட்டு வாசலிலேயே வெகு நேரம் காத்துக் கொண்டிருக்கிறோம். அப்பொழுது சற்று தூரத்தில் ஒரு வர் வருகிறார். நமது கண்களுக்கு அந்த நபர் நமது நண்பரைப் போலத் தோற்றமளிக்கிறார். வருபவர் நமது நண்பராகத்தான் இருக்க வேண்டும் என்று உறுதி செய் கிறோம். ஆனால் அந்த நபர் நமக்கருகே வர வர நமது அந்த . உறுதி தளர்ந்து விடுகிறது. ஏனெனில், அருகிலே வந்தவுடன் அவர் நமது நண்பரல்ல, வேறு யாரோ ஒரு வர் என்ற உண்மை புலப்படுகிறது. தூரத்திலே வந்து கொண்டிருக்கிற மற்றொருவரை நமது நண்பர் எனக் கரு தியது தவறு. அதற்கு வேதாந்தத்தில் அத்யாரோபம் என்று பெயர். அத்யாரோபம் என்றால் ஒன்றை மற்றொன்

ருகப் பாவித்தல் என்பது பொருள். வேதாந்தத்திலுள்ள அடிப்படைத் தத்துவங்களில் அத்யாரோபமும் ஒன்றுகும்.

அத்யாரோபம் அல்லது ஒன்றைப் பிறிதொன்ருகக் கருதக் காரணம் யாது? உண்மை வஸ்துவைப் பற்றிய அறியாமையேயாகும். அந்த அத்யாரோபம் எதுவரை நில வும்? வஸ்து அல்லது பொருளின் உண்மைத் தன்மையை உணரும் வரை. உண்மை உணரப்படுகையில் அறியாமை தானே அகலுகிறது. ஒளியின் முன் இருள் நில்லாது நீங்குவது இயற்கைதானே!

ஞானம் உதயமாகும் வரை நம்மிடத்தில் அஞ்ஞானம் அதாவது அறியாமை நிலவுகின்றது. அதாவது நாம் அஞ்ஞானிகளாக இருக்கிறேம். அறியாமை என்பது ஒரு வித மயக்கமாகும. அந்த மயக்கத்தில் இருக்கும் வரை உண்மை பொய்யாகவும், பொய் உண்மையாகவும் மாறு பாட்டுத் தோற்றமளிக்கிறது. அந்த மயக்க நிலையில் அஞ் ஞானி பல்வேறு சுக துக்கங்களை அனுபவிக்கின்ருன்.

ஆத்மாவை மூடியிருக்கும் பஞ்ச கோசங்கள் அல்லது ஐந்து உறைகள் ஆத்மாவாக மாட்டா என்று முந்திய சுலோகத்தில் கூறப்பட்டது. ஒரு நபர் தனது உடலின் மேல் பனியன், சட்டை, கோட், ஓவர் கோட் ஆகியவற்றை ஒன்றின் மேல் ஒன்ருக அணிந்திருக்கிருர். பனியன், கோட் போன்றவற்றை அவரது உடலின் மேல் போடப்பட்டிருக் கும் உறைகள் எனக் கொள்ளலாம். ஒருவர் அந்த நபரிடம் சென்று "நீங்கள் யார்?" என்று கேட்பதாக வைத்துக் கொள்வோம். உடனே தன்னை அவர் இன்னார் என்று அறிமுகப்படுத்திக் கொள்கிருர். உண்மையில் அவர் யார்? உண்மையில் அவர்தான் அணிந்திருக்கும் ஓவர் கோட்டா? இல்லை கோட்டா? இல்லை சட்டையா? இல்லை பனி யனா? இல்லை. ஏன்? அவை யாவும் அவரது உட லைப் போர்த்தியிருக்கும் வெறும் உறைகள் மாத்திரமே. சரி. இன்னும் சற்று ஆழ்ந்து செல்வோம். இத்தனை

உறைகளையும் அவர் தனது உடலின் மீதுதானே போட்டுக்கொண்டிருக்கிறுர். அந்த உடல் தான் உண்மையில் அவரா? இல்லை. ஏனெனில் அவரது ஸ்தூல சரீரம் ஆத்மாவை மூடியிருக்கும் ஐந்து உறைகளில் முதல் உறை என்று நாம் பார்த்தோம்.

ரேடியோப் பெட்டி ஒன்றை உறை ஒன்றினால் மூடியிருக்கிறோம். அந்த உறை ரேடியோப் பெட்டி ஆகுமா? ஆகாதல்லவா? அது போலவே ஆத்மாவை மறைத்திருக்கும் உறைகள் ஐந்து. அவற்றில் ஸ்தூலமாகத் தென்படுவது புறத்தே கட்புலனாகும் உடல். எனவே அந்த உடல் ஆத்மாவாகாது. இந்தக் கோசங்கள் அல்லது உறைகள் ஒன்றைக்காட்டிலும் மற்ருென்று சூக்ஷ்மமானவையாக இருப்பினும் அவையாவும் உண்மைப் பொருளை மூடியிருக்கும் உறைகளே. எனவே அவை ஆத்மா ஆகமாட்டா.

பிராணமய கோசம் அன்னமய கோசத்தைவிட சூக்ஷ்மமாக இருந்து கொண்டு அதை வியாபித்துள்ளது. மனோமய கோசம் பிராணமய, அன்னமய கோசங்களை விட சூக்ஷ்மமாக இருக்கிறது. விஞ்ஞானமய கோசம் மனோமய, பிராணமய, அன்னமய கோசங்களை விட சூக்ஷ்மமாக இருந்து கொண்டு அவற்றை வியாபித்திருக்கிறது. இங்கே நாம் கவனிக்க வேண்டியது இந்த ஐந்து கோசங்களும் எவ்வளவு சூக்ஷ்மமாக இருப்பினும் அவையாவும் உண்மைப் பொருளாகிய ஆத்மாவைச் சூழ்ந்திருக்கும் உறைகளே யாம். எனவே அவை ஆத்மாவாகா. அவற்றை ஆத்மா எனக் கருதுதலோ அல்லது ஆத்மாவை அவையாகக் கருதுதலோ அத்யாரோபம் என்ற குற்றத்தின் பாற்படும். எனவே இந்தக் கோசங்களை ஒவ்வொன்ருக "இது ஆத்மா அல்ல், இது ஆத்மா அல்ல" என்ற கோட்பாட்டின் மூலம் நீக்கி அவற்றின் பின் உறையும் ஆத்மாவை உணர முற்பட வேண்டும். இதற்கு "நேதி,

நேநி" கோட்பாடு என்று பெயர். இதை வேதாந்தத்தில் அபவாதயுக்தி என்று அழைக்கிறோம்.

ஆத்மனை அதை மூடியிருக்கும் உறைகள் அல்லது கோசங்களிலிருந்து ஆராய்ச்சியின் மூலம் பிரித்து அறிய வேண்டும் என்பதற்கு இந்த சுலோகத்தில் ஒரு எளிய உதாரணம் தரப்படுகின்றது. வயலிலிருந்து கொண்டு வரப்பட்ட நெல் ஒரு மூலையில் குவிந்து கிடக்கிறது. நமக்குத் தேவையானது அரிசி. நெல்லிலிருந்து அரிசி எப்படிக் கிடைக்கிறது? நெல்லைக் குத்துவதன் மூலம் அரிசியை மூடியிருக்கும் உமி, தவிடு போன்றவற்றைப் பிரித்தெடுக்கிறோம். இந்த உமி, தவிடு முதலியவை அரிசியை மூடியிருந்த உறைகளாகும். அந்த உறைகளைப் படிப்படியாக நீக்குவதன் மூலம் அரிசி கிடைக்கப்பெறுகிறது. அதைப் போலவே உண்மைப் பொருளாகிய ஆத்மனை மறைந்திருக்கும் பல உறைகளை, "இந்த உறைகள் யாவும் ஆத்மனாக மாட்டா" என்ற விசாரத்தின் மூலம் படிப்படியாகப் பிரித்துணர வேண்டும்.

மேற்காணும் கருத்தைப் புரிந்து கொள்ள மற்றுமொரு எடுத்துக் காட்டைக் காண்போம். விலையுயர்ந்த நெக்லஸ் ஒன்றை நாம் எப்படிப் பாதுகாக்கிறோம்? இரும்புப் பெட்டியினுள் பத்திரமாக வைத்து அதைப் பாதுகாக்கிறோம். இரும்புப் பெட்டியின் வெளிக்கதவைத் திறந்தவுடன் அதற்குள்ளே ஒரு சிறு அறை போன்றதொரு பகுதி காணப்படுகிறது. அதையும் சாவி போட்டுத் திறக்கிறோம். அதற்குள்ளே மற்றுமொரு சிறு பெட்டி இருக்கிறது. இந்த பெட்டியைத் திறக்கும் பொழுது கண்ணைப் பறிக்கும் ஒளியுடன் நெக்லஸ் காட்சி தருகிறது. விலையுயர்ந்த பொருளாகிய நெக்லஸுக்கு சிறுபெட்டி, உள்அறை, வெளி இரும்புப்பெட்டி யாவும் பல்வேறு உறைகளாயமைவது போன்று அமர ஆத்மனுக்கு அன்னமய கோசம், பிராணமய கோசம் போன்றவை உறைகளாக அமைகின்றன.

நெல்லைக் குத்தினால் அரிசி தென்படுவது போல விசாரம் செய்தால் ஆன்ம அனுபவம் கிட்டும். விசாரம் என்பது உண்மை எது, உண்மை அல்லாதது எது என்று பகுத்தறிவதேயாகும். பொருள் வேறு ஆன்மாவை மூடியிருக்கும் பஞ்சகோசங்கள வேறு. தாற்காலிகச் சேர்க்கையின் விளைவாக ஒன்று மற்றொன்றாகத் தென்படும். அப்படித் தென்படுவதற்குக் காரணம் அஞ்ஞானம் அல்லது அவித்யை. நேரிய தத்துவ ஆராய்ச்சி செய்தால் நாம் பல்வேறு உபாதிகளுக்குட்பட்ட கோசங்கள் அல்ல. அவையெல்லாம் கடந்த தூய சைதன்ய நிஷ்கல, நிராமய ஆத்மன் என்பது புலனாகும.

## 17

सदा सर्वगतोप्यात्मा न सर्वत्रावभासते ।
बुद्धावेवावभासेत स्वच्छेषु प्रतिबिंबवत् ॥

ஸதா ஸர்வகதோப் யாத்மா
ந ஸர்வத்ராவப் பாஸதே ।
புத்தாவே வாவபாஸேத
ஸ்வச்சேஷு ப்ரதிபிம்பவத் ॥

எங்குமே யென்று மிருப்பினு மான்மாவு
மெங்குமே யான்மா விலகவிலை - துங்கமாம்
புத்தியி லேயே பொலியுநிழல் சொச்சமாம்
வத்துவிற் றோன்றும் வகை.

[ஸ்ரீ ரமணர்]

सदा ஸதா - எப்பொழுதும், सर्वगतो अपि ஸர்வகதோ அபி आत्मा ஆத்மா - ஆத்மா, सर्वत्र ஸர்வத்ர - எங்கும், न अवभासते ந அவபாஸதே - பிரகாசிக்கிறதில்லை. स्वच्छेषु

ஸ்வச்சேஷு - தெளிவான இடத்தில் மட்டுமே (ஸ்வச்ச மான உபாதியிலே) प्रतिबिंबवत् பிரதிபிம்பவத் - பிரதிபிம்பம் (ஏற்படுவது) போல, बुद्धौ एव புத்தௌ எவ - புத்தியில் மட்டுமே, अवभासेत அவபாஸேத - வெளிப்படும்.

கருத்துரை : பரம்பொருள் எங்கும் நிறைந்து இருக் கிறது என்றாலும் அது எங்கேயும் ஒளிர்வதில்லை. பொருள்களின் பிரதி பிம்பம் கண்ணாடித் தளத்தில்தான் விழும். அதே போல ஆத்மனையும் (தூய) புத்தியில் தான் பிரதிபலிக்கக் காணலாம்.

தெரியாத ஒரு விஷயத்தைத் தெரிந்துகொள்ள முற்ப டுகையில் மனதில் பலவித சந்தேகங்கள் தோன்றுவது சகஜம். ஆசிரியர் சொல்லித் தருவதை அப்படியே மௌன மாக ஒப்புக்கொள்வது ஒரு மாணாக்கனுக்கு அழகாகாது. ஆசிரியர் சொல்லித் தருவதிலேயே அவனுக்குச் சந்தேகங் கள் பல அவ்வப்பொழுது எழலாம். அவற்றையெல்லாம் அவன் ஆசிரியரிடம் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண் டும். ஐயங்கள் அகல அகல உண்மை மாணவனுக்குத் தெற்றெனத் துலங்கும்.

ஸ்ரீசங்கரர் ஓர் ஒப்பற்ற ஆசிரியர். அதாவது சிரேஷ் டமான குரு. நல்ல குருவின் இலக்கணம் தான் பாடம் புகட்டுவதில் சிஷ்யர்களுக்கோ அல்லது கேட்பவர்கட்கோ எவ்வித சந்தேகங்களும் தோன்றாதவாறு பார்த்துக்கொள்ளு தலேயாகும். கேட்பவர்களுக்கு இன்னின்ன சந்தேகங்கள் தோன்றலாம் என்று முன்கூட்டியே தெரிந்து கொண்டு அவற்றிற்கான விடைகளைத் தருவது நல்லாசிரியருடைய தன்மையாகும். அதற்கேற்ப இந்த சுலோகத்தில் ஸ்ரீசங் கரர் சாதகர்களது மனத்தில் அடிக்கடி தோன்றும் முக்கி யமான ஒரு ஐயப்பாட்டிற்குத் தகுந்த விடை தருகிறார்.

முந்திய சுலோகங்களில் ஆத்மனைப் பற்றிய பல விளக்கங்கள் தரப்பட்டன. அவற்றுள் முக்கியமான ஒன்று

ஆத்மன் எங்கும் நிறைந்த தொன்று என்பதாகும். எங்கும் நிறைந்த பொருள் என்னும் பொழுது அது இல்லாத இடமே இல்லை என்றாகிறது. இப்பொழுது சிஷ்யனது மனத்திலே முக்கியமானதொரு ஐயம் தோன்றுகிறது. ஆத்மா எங்கும் நிறைந்த தென்றால் அதை எல்லாப் பொருள்களிலும் காண முடிவதில்லையே என்பதே அந்தச் சந்தேகமாகும். அந்தச் சந்தேகத்திற்கான விளக்கம் இந்த சுலோகத்தில் தரப்படுகிறது.

பாலில் வெண்ணெய் இருக்கிறது என்பது நாமெல்லாம் அறிந்த விஷயம்தான். ஆனால் பால் வைக்கப்பட்டுள்ள பாத்திரத்தில் எவ்வளவு தேடியும் வெண்ணெய் அகப்படுவதில்லை. ஏன்? அந்தப் பாலில் வெண்ணெய் இல்லையேோ! அப்படியல்ல. அந்தப் பாலில் வெண்ணெய் இருக்கிறது. ஆனால் வெறும் பாலில் வெண்ணெயைப் பார்க்க முடியாது. பாலிலிருந்து வெண்ணெய் கிடைக்க சில பக்குவங்கள் செய்யப்பட வேண்டும். முதலில் பாலைக் காய்ச்ச வேண்டும். பிறகு அது இளம் சூடாக இருக்கும்பொழுது அதில் கொஞ்சம் மோரை விட்டு உறை ஊற்றி வைக்க வேண்டும். ஆடாது அசையாது அது இருக்குமேயாகில் பால் உறைந்து தயிராகிறது. பிறகு அந்தத் தயிரை மத்தைக் கொண்டு கடைய வேண்டும். வெண்ணெய் கிடைக்க நாம் இத்தனை பக்குவங்களைச் செய்தாக வேண்டியிருக்கிறது. இத்தனைக்கும் பிறகு நாம் பாலில் வெண்ணெய் இருக்கிறது என்ற கூற்றின் உண்மையை உணர்ந்து கொள்கிறோம்.

சூரியன் வெம்மை மிகுந்தவன். சூரிய கிரணங்கள் எரிக்கும் சக்தி வாய்ந்தவை என்பது அனைவரும் அறிந்த விஷயம். நம்மீதும் நம் அருகிலுள்ள பொருள்கள் மீதும் சூரிய கிரணங்கள் விழுகின்றன. நம்மையோ அல்லது அந்தப்பொருள்களையோ அவை எரிப்பதில்லையே. ஏன்? சூரிய கிரணங்கள் எரிக்கும் சக்தியை இழந்துவிட்டனவா!

இல்லை, இல்லை. சூரிய கிரணங்களிலிருந்து எரிக்கும் சக்தியைப் பிரிக்க முடியாது. நாம் அதற்கு வேண்டிய சில பக்குவங்களைச் செய்ய வேண்டும். சூரிய கிரணங்கள் செல்லும் பாதையிலே ஒரு லென்ஸைப் பிடிக்க வேண்டும். அந்த லென்சின் கீழே கொஞ்சம் பஞ்சை வைக்க வேண்டும். சிறிது நேரத்தில் பஞ்சு தீப்பற்றி எரியக் காண்கிறோம். இப்பொழுது எப்படி அது எரிகிறது? சிதறிச் சென்று கொண்டிருந்த சூரிய கிரணங்கள் லென்ஸ் மூலம் ஒருமைப்படுத்தப்படும் பொழுது அவற்றினுடைய இயல்பான எரிக்கும் சக்தி வெளிப்படுகிறது.

முகம்பார்க்கும் கண்ணாடி ஒன்று இருக்கிறது. அதன் முன்னே சென்று நாம் நின்றுகொண்டு நமது முகத்தைப் பார்க்க விரும்புகிறோம். நமது முகம் அதில் சரியாகத் தெரிவதில்லை. ஏன் என்று காரணத்தை ஆராய்கையில் அந்தக் கண்ணாடி மீது தூசியும், அழுக்கும் படர்ந்திருக்கிறது என்று தெரிந்து கொள்கிறோம். உடனே ஒரு சுத்தமான ஈரத்துணியைக் கொண்டு அதைத் துடைத்து அந்தத் தூசியையும் அழுக்கையும் நீக்குகிறோம். இப்பொழுது அந்தக் கண்ணாடியில் நமது முகத்தைப் பார்க்கிறோம். முகம் பளிச்சென்று அதில் அழகாகப் பிரதிபலிக்கிறது. முன்பு நன்கு பிரதிபலிக்காத முகம் இப்பொழுது பிரதிபலிக்கக் காரணம் என்ன? கண்ணாடியில் முன்பு படர்ந்திருந்த அழுக்கு இப்பொழுது அகற்றப்பட்டு விட்டது என்பது தான்.

பௌதிக விஞ்ஞானத்தின்படி எல்லாப் பொருள்களும் ஒளியைப் பிரதிபலிக்கவல்லவை. ஆனால் எல்லாப் பொருள்களிலும் நாம் நமது முகத்தைப் பிடிக்க முடியாது. ஏன்? பிரதிபலிக்கும் தன்மை பொருளுக்குப் பொருள் மாறுபடுகிறது. கல்லில் நாம் முகம் பார்க்க முடியாது. கண்ணாடியில் முகம் பார்க்கலாம். கல்லினுடைய மேற்பரப்பு சொர சொரப்பானது. நம்மால் பார்க்க முடியாத

அளவு மிக மிகக் குறைந்த அளவில் அது நமது முகத்தைப் பிரதிபலிக்கிறது. கண்ணாடியின் மேற்பரப்போ முற்றிலும் மாறுபட்டது. அதன் பிரதிபலிக்கும் சக்தி மிகமிக அதிகம். எனவே நமது முகம் நன்கு பிரதிபலிக்கிறது. கல்லையும் கண்ணாடி போன்று ஆக்கலாம்? எப்படி? கல்லின் மேற்பரப்பை நன்கு பாலிஷ் செய்துவிட்டால் சொரசொரப்பாயிருந்த பகுதி இப்பொழுது வழவழவென்று ஆகி நன்கு நமது முகத்தைப் பிரதிபலிக்கும் சக்தியைப் பெற்றுவிடுகிறது.

ஆத்மன் ஏன் எல்லாவற்றிலும் ஒளிர்வதில்லை என்ற சந்தேகத்திற்குரிய விளக்கம் மேற்சொன்ன பல உதாரணங்களிலே காணக்கிடைக்கிறது. ஆடாது அசையாது இருக்கும் நீர்ப்பரப்பில் சூரியன் நன்கு பிரதிபலிக்கிறது. சூரிய பிம்பம் மிகத் தெளிவாக அதில் காணப்படுகிறது. அதே நீர்ப்பரப்பில் அலை வீசுகின்ற பொழுது பிம்பம் சரியாகத் தெரிவதில்லை. அதே போன்று மனதில் இருக்கும் மாசுக்கள் அகல அகல ஆத்ம சைதன்யம் அதிக மதிகம் ஒளிர்கிறது. நம் புத்தியைத் தெளிவுள்ளதாக்கப் பழகிக் கொண்டால் அதிலே பரமாத்மனின் பிரதி பிம்பத்தைக் காண முடியும். சஞ்சலமான மனது, காம குரோதங்கள் நிறைந்த மனது, தீய எண்ணங்களாகிய அலைகள் சதா வீசிக் கொண்டிருக்கும் மனது, பொறாமையும் போட்டியும் நிறைந்த மனது, சூதும் வாதும் கூடிய மனது ஆத்ம பிரகாசத்தை மங்கச் செய்து விடுகின்றது. மனமென்னும் கண்ணாடியின் மீது படிந்திருக்கும் பல்வேறு தீய குணங்களாகிய மாசுக்களைத் தீவிர சாதனை என்னும் துணியைக் கொண்டு அறவே நீக்கி விட்டால், ஆத்மன் தனது சுய தேஜஸோடு அங்கே நன்கு ஒளிரும். மனத்துக்கண் மாசு இல்லாது ஆக்குவதே புத்தியைத் தெளிவுடையதாக ஆக்குவதே ஆத்மனை உணர்வதற்கான உபாயமாகும்.

# 18

देहेन्द्रियमनोबुद्धिप्रकृतिभ्यो विलक्षणाम् ।
तद्वृत्तिसाक्षिणं विध्यादात्मानं राजवत्सदा ॥

தேஹேந்த்ரிய மனோபுத்தி
ப்ரக்குருதிப்யோ விலக்ஷணம் ।
தத் விருத்தி ஸாக்ஷிணம் வித்யா
தாத் மாநம் ராஜலவத் ஸதா ॥

உடல்கருவி யுள்ள மொடுபுத்தி மாயை
விடவே யுவற்றின் விருத்தி - யுடனே
யெவைக்குமே சாட்சியா் மென்றுமான் மாவை
யவைக்கரசன் போல வறி.

[ஸ்ரீரமணர்]

अत्मानं ஆத்மாநம் - ஆத்மாவை, सदा ஸதா - எப்பொழுதும் राजवत् ராஜவத் - அரசனைப் போல, देह इन्द्रिय मनोबुद्धिप्रकृतिप्य தேஹ இந்த்ரிய மனோபுத்தி ப்ருக்ருதிப்ய: - உடல் புலன்கள், மனமம், புத்தி பிரகிருதிகள் இவைகளிலிருந்து विलक्षणम् விலக்ஷணம் - தனிப்பட்டதாகவும், तदवृत्तिसाक्षिणं தத்வ்ருத்தி சாக்ஷிணாம் ( பிரகிருதிகளான) அவைகளுடைய செயல்களுக்குச் சாட்சியாக உள்ளதாகவும், विद्यात् வித்யாத் - அறிய வேண்டும்.

கருத்துரை : ஆத்மா சாட்சி ரூபமானது. உடல், புலன்கள் மனம், புத்தி முதலிய பிரகிருதிகளுக்கு அப்பாற்பட்டது. எப்பொழுதும் அரசரவையில் அரசரைப் போலவே (ஆற்றல் தந்தும் செயலைத். தூண்டியும்) ஒதுங்கி நிற்கிறது.

ஒரு பெரிய அரசவை. மந்திரி பிரதானியர் மற்றும் பிரமுகர்கள் சேனைத் தலைவர்கள், ஆஸ்தான வித்வான்கள் போன்ற பலர் அங்கு தத்தம் இருக்கையில் அமர்ந்தி

ருக்கின்றனர். ஒருபுறம் நாட்டிய நிகழ்ச்சி ஒன்று நடந்து கொண்டிருக்கிறது. அது முடிந்தவுடனே நாடகம் ஒன்று நடித்துக் காட்டப்படுகிறது. அந்த தர்பார் ஹாலின் இரு மருங்கிலும் வீரர்கள் தங்களது விசேஷ உடையுடன் கம்பீரமாகக் காவல் புரிகின்றனர். தர்பார் ஹாலின் நடுவே அழகிய சிம்மாசனத்தில் அரசன் முன் பல விஷயங்கள் விவாதிக்கப்படுகின்றன. தத்தம் குறைகளை அவரவர்கள் அரசன் முன் வந்து முறையிடுகின்றனர். ஒரு சமயம் பிரதான மந்திரியின் பக்கம் அரசனது பார்வை திரும்புகிறது. உடனே சேனைத் தலைவர் தாம் சொல்லவேண்டியதைச் சொல்கிருர். இது போன்று பல்வேறு நிகழ்ச்சிகள் அரசன் முன்னே நிகழ்கின்றன. இருந்த போதிலும் அரசன் எந்தவிதச் செயலும் செய்யாது சாக்ஷி மாத்திரமாக ஆசனத்தில் அமர்ந்து கொண்டிருக்கிருன். அங்கு நடக்கின்ற நிகழ்ச்சிகளில் அவன்தானே பங்கு கொள்ளவில்லை. இருப்பினும் அவன் முன்னிலையில் அனைத்தும் செயல்படுகின்றன. அரசன் தனது இருக்கையை விட்டு எழுந்து செல்கிருன். உடனே தர்பாரும் கலைகிறது. இது அரச தர்பாரில் காணக்கூடிய காட்சியாகும்.

நீராவி எஞ்சின் நீராவியின் சக்தியினால் இயங்குகிறது. நீராவியை அழுத்தத்திற்குள்ளாக்கிப் பிறகு விரிய வைத்து இஞ்சினை இயக்குகின்ருேம். இஞ்சின் தனது பாதையில் ஒழுங்காகச் சென்ருலும் அல்லது பாதையை விட்டுத் தடம்புரண்டாலும் அது நீராவியின் குற்றமாகாது. இஞ்சின் செயல்படுவதற்கு வேண்டிய சக்தியானது நீராவியிடமிருந்து பெறப்பட்டாலும் இஞ்சினுடைய செயல்களுக்கு நீராவி எந்த விதத்திலும் பொறுப்பாகாது. சக்திக்கு ஆதாரம் நீராவி என்ருலும் அந்தச் சக்தியின் விளைவுகளான செயல்களிலிருந்து அது அப்பாற்பட்டது.

வீட்டு வாசல் தட்டப்படுகிறது. அன்பர் சென்று கதவைத் திறக்கிருர். அவருடைய பால்ய சினேகிதர், அவரோடு பல வருடங்கள் பள்ளியிலும் கல்லூரியிலும் கூடப் படித்த நண்பர் ஒருவர் பெட்டி படுக்கையோடு அங்கே

வாயிலிலே நிற்கிறார். உடனே அன்பர் அவரை மிகவும் உற்சாகத்தோடு வரவேற்று வரவேற்பறைக்கு அழைத்துச் சென்று அவரோடு தன்னை மறந்து - 'பாவம், தனது நண்பர் வெகுதூரம் பிரயாணம் செய்து களைத்துப் போய் வந்திருக்கிறாரே' என்பதையும் மறந்து அவருடன் அளவளாவுகிறார். அப்பொழுது அவருடைய மனைவி உள் அறையிலிருந்து வந்திருப்பது யார் என்று அறிந்து கொள்ள தலையை மட்டும் சிறிது நீட்டி எட்டிப் பார்க்கிறார். அந்தச் சமயத்தில் அவருடைய கணவர் தமது மனைவியை ஒரு முறை பார்க்கிறார். அவ்வளவுதான் உடனே அவள் உள்ளே சென்று பரபரப்பாகக் காரியத்தில் ஈடுபடுகிறாள். குளிக்கும் அறைக்குச் சென்று வந்திருக்கும் விருந்தாளி குளிப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்கிறார். சமையலறைக்குச் சென்று காபி, டிபன் போன்றவற்றைத் தயார் செய்வதில் முனைகிறாள். அதற்கிடையே விருந்துக்கு வேண்டிய ஏற்பாடுகளையும் செய்கிறாள். இவையனைத்தும் அவருடைய கணவரது ஒரு பார்வையினுடைய விளைவு.

கணவர்தான் புருஷன். மனைவி பிரகிருதி. பிரகிருதியான மனைவி புருஷனுடைய பார்வை மாத்திரத்திலேயே - அதாவது அவருடைய சாந்நித்தியத்திலேயே - இயங்க ஆரம்பித்து விடுகிறாள். இங்கு நாம் மிகவும் உன்னிப்பாகக் கவனிக்க வேண்டியது ஒன்று உண்டு. சக்தியின் நிலைக்களன் புருஷன். செயல்படுவது பிரகிருதி. பிரகிருதியின் செயல்களுக்குப் புருஷன் ஆளாகாது.

அலுவலகத்திற்கு இன்னும் முதலாளி வரவில்லை. அங்குள்ள பல்வேறு அலுவலர்கள் தங்களது வேலையில் கவனம் செலுத்தாது ஒருவரோடருவர் குஷியாகப் பேசிக்கொண்டிருக்கின்றனர். அப்பொழுது காவல்காரன் பரபரப்போடு உள்ளே நுழைகிறான். தொடர்ந்து முதலாளியும் வருகிறார். உடனேயே அங்கு இருந்த சப்தமனைத்தும் அடங்குகிறது. அனைவரும் தம்தம் வேலைகளில் லயித்து விடுகின்றனர். ஊசி விழுந்தால்கூட கேட்கும் அளவுக்கு

நிசப்தம் நிலவுகிறது. முதலாளியின் பார்வை பட்ட மாத்திரத்திலேயே அனைத்து வேலைகளும் ஒழுங்காக நிகழ்கின்றன.

இந்த சுலோகத்தின் இரண்டாவது அடியில் "தத்வி ருத்தி சாக்ஷிணம்" என்ற வாக்கியத்தில் சாக்ஷி என்ற சொல் மூலம் உயிர்த் தத்துவம் ஒன்றிலும் ஈடுபடுவ தில்லை என்று குறிக்கப்படுகிறது. மனம், இந்திரி யங்கள், புத்தி போன்றவை யாவும் ஆத்மனின் முன்னி லையில் செயல்படுகின்றன. இவை அனைத்தினுடைய செயல்களுக்கு ஆத்மன் சாக்ஷி மாத்திரமாக இருக்கிறது. "சாக்ஷி" என்ற பதம் செயலில் ஈடுபடாதது" என்பதைக் குறிக்கிறது. நமது கோர்ட்டுகளில் கூட விசாரணைகளின் போது சாக்ஷிகளைக் கூப்பிட்டு அவர்களை விசாரிப் பது வழக்கம். சம்பவத்தில் ஈடுபட்டவர் சாக்ஷியாக மாட்டார். சம்பவத்தை ஒருவிதமான உறவும் ஏற்படாமல் எவ்விதத்திலும் பாதிக்கப்படாமல் பார்த்துக் கொண்டிருக் கின்றவர்தான் சாக்ஷியாக முடியும். அதுபோல் பரம் பொருளாகிய ஆத்மா புலன், பொறிகளது செயல்களில் சம்பந்தப்படாது இருக்கிறது. ஆனால் எல்லாவித இயக் கங்களுக்கும் ஆதாரமாயிருப்பது ஆத்மா. எனவே ஆத்மா சாட்சி ரூபமானது. உடல், புலன்கள், மனம், புத்தி முத லிய பிரகிருதிகளுக்கு அப்பாற்பட்டது. அரசவையில் அர சன் எவ்விதம் சாக்ஷியாக இருக்கின்றானோ அதுபோன்று ஆற்றல் தந்தும், செயலைத் தூண்டியும், ஆத்மாவானது அவற்றிற்கு அப்பாற்பட்டும் இருக்கிறது என்று இந்த சுலோகம் தெரிவிக்கிறது.

## 19

व्यापृतेष्विन्द्रियेष्वात्मा व्यापारीवाविवेकिनाम् ।
दृश्यतेऽभ्रेषु धावत्सु धावन्निव यथा शशी ॥

வ்யாப் பருதேஷ்விந்த்ரியேஷ் வாத்மா
வ்யாபாரீ விவேகி நாம் ।
த்ருச்யதே (அ) ப்ரேஷு தாவத்ஸு
தாவந்நிவ யதா சசீ ॥

கருவி களின்ருெழில் கண்டவவி வேகி
கருத்தன்போன் ருன்மாவைக் காண்பன்-றுரிதமா
யோடுமே கங்கன் டுணர்விலி சந்திரனே
யோடுகிரு னென்பதை யொத்து.

[ஸ்ரீரமணர்]

यथा யதா - எப்படி, अभ्रेषु அப்ரேஷு - மேகங்கள், धावत्सु தாவத்ஸு - ஓடும்பொழுது, शशी சசீ - சந்திரன், धावन्निव தாவந்நிவ - ஓடுகிறது போல, दृश्यते த்ருச்யதே - காணப்படுகிறதோ, அப்படி अविवेकिनाम् அவிவேகினாம் - அவிவேகிகளுக்கு, इन्द्रियेषु இந்திரியேஷு - இந்திரியங்கள், व्यापृतेषु வ்யாப்ருதேஷு - அலுவல் செய்யும் போது, आत्मा ஆத்மா - ஆத்மனே, व्यापारी வ்யாபாரீ இவ - அலுவல் செய்கின்றதாகத் (தோன்றுகிறது)

கருத்துரை : மேக வரிசை ஓடுகிறது. சந்திரன் ஓடுவதாக எண்ணுகிறோம். அதே போல இந்திரியங்கள் செயல்படுகின்றன; மனம் அலைகிறது. புத்தி இயங்குகிறது. அப்பொழுது செயல்படும் ஆற்றலைத் தரும் ஆத்மன் அசைவதில்லை, அலைவதில்லை, பாதிக்கப்படுவதில்லை. ஆத்ம போதம் இல்லாத காரணத்தால் ஆத்மனே மாற்றத்தை ஏற்பது போல் எண்ணுகிறோம்.

அறை முழுவதும் இருள் சூழ்ந்திருக்கிறது. ஏற்கெனவே அந்த அறை நமக்குப் பழக்கமானது என்ற காரணத்தால் நமது கைகள் நேராக ஸ்விட்ச் இருக்குமிடத்தை நாடிச் சென்று அதை இயக்குகின்றன. உடனே அறையை அதுவரை கவ்வியிருந்த இருள் நீங்குகிறது. மின் விளக்கு எரிகிறது. தொலைதூரம் நடந்து வந்த காரணத்தினால்

உடலெல்லாம் வியர்க்கிறது. மற்றொரு ஸ்விட்சை போட்டு விட்டு நாற்காலியில் அமர்ந்து கொள்கிறோம். தலைக்கு மேலே உள்ள மின்விசிறி சுழல ஆரம்பிக்கிறது. இனிய காற்று நம்மை வருடிச் செல்கிறது. வியர்வை அகல் கிறது. களைப்பு நீங்க ஒரு டம்ளர் குளிர்ந்த நீர் வேண்டும் போலிருக்கிறது. உடனே எழுந்து சென்று அந்த அறையின் ஒரு பகுதியிலிருக்கும் ரெப்ரிஜிரேட் டரைத் திறந்து அதனுள் சீசாவில் வைக்கப்பட்டிருக்கும் ஐஸ்வாட்டரை டம்ளரில் ஊற்றிக் குடிக்கிறோம். இன்னும் சிறிது நேரம் கழித்துச் சூடாக ஒரு கப் பால் குடித்தால் நன்றாகஇருக்கும் என்ற எண்ணம் தோன்றுகிறது. உடனே அருகிலேயிருக்கும் எலெக்ட்ரிக் ஹீட்டரில் பாலைச் சுட வைக்கிறோம். இனிய பாட்டுக் கேட்கவேண்டும் என்ற ஆசை தோன்றவே ரேடியோவைத் திருப்புகிறோம். உடனே இனிய கீதம் காதில் விழுகிறது. ரேடியோவில் பாடு பவரைப் பார்க்க வேண்டும் போலிருக்கிறது. உடனே டெலிவிஷனை இயக்குகின்றோம். எங்கோ தொலை விலிருப்பவரது உருவத்தை நாம் நமது அறையினுள் காண்கிறோம்.

மின் விளக்கிற்கு ஒளி தருவது, விசிறியைச் சுழல வைப்பது, ரேடியோவைப் பாடவைப்பது மற்றும் இது போன்ற ஏனைய செயல்களுக்கு எல்லாம் அடிப்படை யாயமைவது எது? மின்சாரம். மாறுபட்ட பல்வேறு செயல்களுக்கு ஆதாரமாக அமைகிறது அது. திடீரென்று மின்சப்ளை லைனில் ஏதோ கோளாறு ஏற்படுகிறது. மின் சாரம் தடைபடுகிறது. விளக்கு அணைகிறது. ஹீட்டர் குளிர்கிறது. விசிறி நிற்கிறது. ரேடியோ மௌனி யாகிறது. ஆக இவை அனைத்தினுடைய செயலுக்கும் நிலைக்களன் மின்சாரம் என்பது உண்மை. எவ்விதத்திலே னும் பாதிக்கப்படுவதில்லை. ஒரே மின்சார சக்தி பல்வேறு கருவிகளின் மூலம் இயங்குகின்ற பொழுது பல்வேறு குணங்களைப் பெற்றிருப்பது போன்று காணப்படுகிறது. ஆனால் உண்மையில் இந்த குணங்களுக்கு அப்பாற்பட்ட

தாகவே அது உள்ளது. உண்மையில் மின்சாரம் என்பது அணுவினுள்ளேயிருக்கும் எலெக்டரான்களின் சலனத்தால் ஏற்படும் சக்தியேயாகும்.

மேலே காணும் உதாரணத்தை அடிப்படையாகக் கொண்டு ஆராய்ந்தால் கருவி கரணங்களுக்கும், ஆத்மாவிற்கும் இடையேயுள்ள தொடர்பை நன்கு அறிந்து கொள்ளலாம். மின் சக்தியின் மூலம் செயல்படும் பல்வேறு கருவிகளை உடலில் அமைந்திருக்கும் பல்வேறு பொறி புலன்களுடனும் ஒப்பிடலாம். மின் சக்தியின் துணை கொண்டு விளக்கு, விசிறி, ரேடியோ போன்ற கருவிகள் இயங்குவது போன்று ஆத்மனின் துணையுடன் மனம், புலன்கள், புத்தி போன்றவை இயங்குகின்றன. விளக்கினுடைய சூடு, ஹீட்டரின் உஷ்ணம் ஆகியவை எவ்விதம் மின்சாரத்தின் அடிப்படையான எலெக்ட்ரான்களின் குணங்களாகக் கருதப்படமாட்டாதோ அது போல் மனம், புத்தி மற்றும் புலன்களுடைய செயல்கள் ஆத்மனுடையவையாகக் கருதப்படகூடாது. உண்மையை உணராதவன் ஆத்மனல்லாததை ஆத்மனாகக் கருதுகிறான். அது அந்த நபருடைய கோளாரே தவிர ஆத்மனுடையதாகாது. இதை சங்கரர் ஒரு எடுத்துக்காட்டின் மூலம் விளக்குகின்றார்.

வானத்தில் சந்திரன் பிரகாசித்துக் கொண்டிருக்கிறான். அப்பொழுது எங்கிருந்தோ வந்த படலம் படலமாக நகர்ந்து செல்லும் கருமேகங்கள் அங்கு தோன்றி சந்திரனை மறைக்கின்றன. மேகங்கள் நகர்ந்து செல்கையில் குழந்தையொன்று மேலே பார்க்கிறது. உடனே தனது அருகேயுள்ள இன்னொரு குழந்தையிடம், "அதோ பார்; சந்திரன் வெகு வேகமாக நகர்ந்து செல்கிறது" என்று கூறுகிறது. அதைக் கண்ட அந்தக் குழந்தையும் அதிசயத்தோடு நகரும் சந்திரனைக் கண்டு ரசித்து நிற்கிறது. உண்மையில் நகர்வது மேகம். ஆனால் சந்திரன் நகர்வதாகத் தென்படுகிறது. மேகத்தின் இயக்கம் அதனோடு தற்காலிகமாகத் தொடர்பு கொண்ட காரணத்தால் சந்திரன் மீது ஆரோபிக்கப்படுகிறது அல்லது ஏற்றிக் கூறப்

படுகிறது. அதுபோல் பொறிபுலன்களுடன் தாற்காலிகத் தொடர்பு கொண்டு விளங்கும் காரணத்தினால் அவற்றின் செயல்கள் ஆத்மாவின் மீது ஏற்றிக் கூறப்படுகின்றன. உண்மையை உணர்ந்தவன் அல்லது உணரவல்லவன் என்பதை உள்ளவாறு காண்கிருன்.

## 20

आत्मचैतन्यमाश्रित्य देहेन्द्रिय मनोधियः ।
स्वक्रियार्थेषु वर्तन्ते सूर्यालोकं यथा जनाः ॥

ஆத்ம சைதந்யமாச்ரித்ய
தேஹேந்த்ரிய மனோதிய: ।
ஸ்வக்ரியார்தேஷு வர்த்தந்தே
சூர்யாலோகம் யதா ஜனா: ॥

ஞானவொளி யான்மாவை நண்ணி
யுடல்பொறிகண்
மானகம் புத்தியிவை மன்னுதமக் - கான தொழி
லாற்றிடுமா தித்த னவிரொளியான் மக்கடொழி
லாற்றுவது போலு மறி.

[ஸ்ரீ ரமணர்]

यथा யதா - எப்படி, जनाः ஜனா: - மக்கள், सूर्यालोकं சூர்யாலோகம் - சூரிய வெளிச்சத்தை (உதவியாகக் கொண்டு), स्वक्रियार्थेषु ஸ்வக்ரியார்தேஷு, - தன் செயல்களின் பயன்களில், वर्तन्ते வர்தந்தே - (ஈடுபட்டு) இருக்கிருர்களோ, அப்படியே देहेन्द्रिय मनोधियः தேஹேந்த்ரிய மனோதிய: உடல் இந்திரியம் மனம், புத்தி (இவைகள்) आत्मचैतन्यं ஆத்ம சைதந்யம் - ஆத்ம அறிவொளி आश्रित्य ஆச்ரித்ய - உதவி பெற்றே (தங்கள் வேலைகளில்) वर्तन्ते வர்தந்தே - இயங்குகின்றன.

கருத்துரை:- மனம் எதையெல்லாமோ நினைக்கிறது. வினாடிப் பொழுதில் சிந்தனையானது ஆயிரமாயிரம் மைல்களுக்கு அப்பால் உள்ள இடங்களுக்குச் சென்று

விடுகிறது. கண் எதையெல்லாமோ இடைவிடாது பார்த்துக்கொண்டிருக்கிறது. காது இனியது இன்னாதது அனைத்தையும் கேட்ட வண்ணமிருக்கிறது. இவ்விதம் இந்திரியங்கள், மனம், புத்தி முதலான அனைத்தும் சதா தொழில் புரிந்துகொண்டே இருக்கின்றன. இவையனைத்தும் ஜடப்பொருள்கள். அதாவது தங்கள் அளவிலே செயல்படுவதற்குச் சிறிதும் சக்தியற்றவைகள். ஆகவே வேறு ஏதோ ஒன்றினுடைய துணைகொண்டு தான் அவை செயல்பட்டாக வேண்டும். அது எது? அதுதான் ஆத்ம சைதன்யம் அல்லது ஆத்ம அறிவொளி. அந்த ஆத்ம சைதன்யத்தின் உதவி இருந்தாலொழிய அவற்றிற்கு தாங்களாகத் தொழிலாற்ற சக்தி கிடையாது.

மின்சார சக்தியின் துணை இருந்தாலொழிய, விசிறி சுழலாது; பல்பு எரியாது; ரேடியோ பாடாது. ரேடியோ பாடுகையில் அதற்கு இயல்பாகவே பாடும் சக்தி இருப்பது போலத் தோன்றும்., ஆனால் அது வெறும் ஜடப்பொருள். மின்சக்தியின் துணை கொண்டுதான் அது செயல்படும்; இன்றேல் செயல்படாது. அதுபோல் மின்விசிறிக்குத் தானாகச் சுழலும் சக்தி கிடையாது. அவற்றின் இயக்கங்களுக்கெல்லாம் அடிப்படையாயமைவது மின்சக்தியேயாகும். கண்ணுக்குப் புலப்படும் ரேடியோ, விளக்கு போன்ற ஜட வஸ்துக்களுக்குப் பின்னால் கண்ணுக்குப் புலப்படாத மின் சக்தி மறைந்து கிடக்கிறது. அது போல பல்வேறு விதங்களில் செயல்படும் இந்திரியங்களுக்குப் பின்னால் அவற்றைச் செயல்படுத்தும் ஆன்ம சக்தி மறைந்து கிடக்கிறது.

தேகம், மனம், இந்திரியங்கள், புத்தி ஆகியவை ஆத்ம சைதன்யத்தின் துணை கொண்டே செயல்புரிகின்றன என்பதை ஸ்ரீசங்கரர் இந்த சுலோகத்தில் ஒரு உதாரணத்தின் மூலம் விளக்குகின்றார்.

நிலவுலகில் உயிர் வகைகளின் வாழ்விற்கும் வளர்ச்சிக்கும் சூரிய ஒளி இன்றியமையாதது. சூரிய ஒளியின் துணை கொண்டுதான் தாவரங்கள் வளர்கின்றன, வாழ்கின்றன. அறையினுள்ளே ஜன்னலோரத்தில் ஜாடியில் வைக்கப்பட்டிருக்கும் பூச்செடியானது சூரிய ஒளியை நாடி அறைக்கு வெளியே தனது கிளைகளை நீட்டுகிறது. ஏன்? அதற்கு சூரிய ஒளி தேவை. மற்றும் விலங்குகள், பறவைகள் போன்ற ஏனைய ஜீவராசிகள் அனைத்திற்கும் சூரிய ஒளி இன்றியமையாததாகும்.

இருள் நீங்கி கிழக்கே சூரியன் உதிக்கப்போகிறன் என்பதை அறிந்த புள்ளினங்கள் தங்களது துயில் நீங்கி இரை தேடும் பொருட்டு வானத்தில் கூட்டம் கூட்டமாக வரிசை வரிசையாகப் பாடிக் கொண்டே பறந்து செல் கின்றன. செங்கதிரோன் கிழக்கே உதிக்கப்போகிறன் என்பதை அறிந்த மக்கள் தங்கள் துயில் நீங்கி தத்தம் கர்மங்களைச் செய்ய முனைகிறர்கள். செயலற்றிருந் தவை அனைத்தும் சூரியன் உதித்தவுடனே செயல்பட ஆரம்பிக்கின்றன. சூரிய ஒளியின் துணை கொண்டு நற் கருமங்கள், தீய கருமங்கள் யாவும் நிகழ்த்தப்படுகின்றன. இத்தனை கருமங்களுக்கு சூரியன் ஆதாரமாக இருக்கின்ற பொழுதிலும் இந்தக் கருமங்களால் அது எந்த விதத்தி லும் பாதிக்கப்படுவதில்லை. நற்கருமங்களுக்கு ஒளி தருவ தால் சூரியன் அதிகப் பிரகாசத்தையோ அல்லது பாபச் செயல்களுக்கு ஒளி தருவதால் அது குறைந்த ஒளியையோ அடைவதில்லை. இந்தக் கருமங்களுக்கும் சூரியப் பிரகா சத்திற்கும் எந்தவிதத் தொடர்பும் கிடையாது. ஆனால் சூரியப் பிரகாசம் இந்தச் செயல்களனைத்திற்கும் அடிப்ப டையாகும்.

மேற்கூறிய உதாரணத்தில் கூறப்பட்டது போன்று மனம், புத்தி மற்றும் பொறி யாவும் ஆத்ம சைதன்யத்தின் உதவியுடன்தான் செயல்படுகின்றன என்றாலும் அவற்றின் செயல்கள் எந்தவிதத்திலும் ஆத்மனைப் பாதிப்பதில்லை. எவற்றினுடைய இயக்கங்களுக்கெல்லாம் தான் ஆதாரமாக அமைகிறதோ அவற்றின் இயக்கத்தால் தான் எவ்விதத் திலும் பாதிக்கப்படுவதில்லை என்பது தான் ஆத்மனைப் பற்றிய உண்மையாகும்.

# 21

देहेन्द्रियगुणान् कर्माण्यमले सच्चिदात्मनि ।
अध्यस्यन्त्यविवेकेन गगने नीलतादिवत् ॥

தேஹேந்த்ரியகுணான் கர்மாண்
யமலே ஸச்சிதாத்மநி ।
அத்யஸ்யந்த்யவிவேகேந
ககனே நீலதாதிவத் ॥

தேகம் பொறிக டிகழ்குணங் கள்வினைக
ளாகுமிவை தூயச்சி தான்மாவில் - மோகத்தூற்
கற்பிப்பர் சுத்த ககனத்தி னீல முதற்
கற்பித்தல் போலக் கருது.

[ஸ்ரீ ரமணர்]

अविवेकेन அவிவேகேந - விவேகமில்லாத காரணத்தால், गगने ககனே - ஆகாயத்தில், नीलतादिवत् நீலதாதிவத் - நீலத் தன்மை முதலியவற்றை (ஏற்றுவது) போல, देहेन्द्रिय गुणान् தேஹேந்த்ரிய குணான் - உடல் பொறிகள் இவைகளின் குணங்கள் कर्माणि கர்மாணி - செயல்கள், இவைகளை अमले அமலே- குற்றமற்ற, सच्चिदात्मनि ஸச்சிதாத்மனிசச்சிதாநந்தப் பொருளான அந்த ஆத்மனிடத்தில், अध्यस्यन्ति அத்யஸ்யந்தி - (ஆரோபிக்கிறார்கள்) ஏற்றுகிறார்கள்.

கருத்துரை : ஆகாயத்தில் நீல நிறத்தை நாம் பார்க்கிறோம். அதேபோல சச்சிதாத்மப் பொருளின் மேல் உடல், புலன்கள் ஆகியவற்றின் குணங்களை ஏற்றி உணர்கிறோம். அது அவிவேகம்.

ஆத்மன் நிர்மலமானது. எந்தவிதக் கறையுமற்றது. அதுமட்டுமல்ல, அது குணங்களுக்கெல்லாம் அப்பாற்பட்டது. அத்தகைய நிர்மல, நிஷ்கள ஆத்மனின் துணை கொண்டு பொறி புலன்கள் யாவும் செயல்படுகின்றன. ஆனால் பொறிபுலன்களின் செயல்கள் ஆத்மனை பாதிக்

கமாட்டா. இந் உண்மையை மறந்து அல்லது தெரியாத காரணத்தால் ஆத்மனை உடல், மனம் மற்றும் இதர புலன்கள் மயமாகப் பாரக்கிறோம். அப்படிப் பார்க்கையில் உடல், மனம் ஆகியவற்றினுடைய குறைபாடுகளை ஆத்மனுடையதாகவே எண்ணிவிடுகிறோம். அப்படி எண்ணுவதற்கு என்ன காரணம் என்ற கேள்வி எழுப்பப்படுகையில், மோஹமே அதற்குக் காரணம் என்று விடை வருகிறது. அப்படி எண்ணுதல் 'அவிவேகம்' என்றழைக்கப்படுகிறது.

ஒரு பொருளை அது உள்ளவாறு உணர்வது விவேகமாகும். விவேகிகள் மோகத்தின் வயப்பட மாட்டார்கள். அவர்கள் தெளிந்த அறிவுடையவர்கள். தெளிந்த அறிவுடையவருக்குப் பொருள்களை அவைகளது யதார்த்த நிலையில் அல்லது உண்மைநிலையில் பார்க்கும் திறன் உண்டு. தெளிந்த அறிவு அற்றவர்கள், அதாவது அவிவேகிகள் பொருள்களைத் தாறுமாறுகப் பொருள்படுத்துவார்கள்.

நமது அன்றுட வாழ்க்கையில் நாம் இத்தகைய அவிவேகநிலைக்கு அடிக்கடி உட்படுகிறோம் என்பது நமது செயல்களைச் சற்று ஆராய்ந்தால் நன்கு புலனாகும். குழந்தைகள் அல்லது உண்மை தெரியாதவர்கள், "ஆகாயம் நீல நிறமுடையது" என்று சொல்லுவார்கள். உண்மையில் ஆகாயத்தின் நிறம் நீலமா? இல்லை. உண்மையில் ஆகாயம் நிறமற்றது. பின் ஏன் அது நீலநிறமாகத் தோன்றுகிறது? இதற்கு விஞ்ஞானரீதியில் ஆராய்ந்தால் பதில் கிடைக்கும்.

வானவெளியில் நுண்ணிய துகள்கள் பல மிதந்து கொண்டிருக்கின்றன. தூசி, நீர்த்துகள்கள், காற்றில் அடங்கியிருக்கும் பல்வேறு வாயுக்கள் ஆகியவை சூரியனிடமிருந்து வரும் ஒளிக் கற்றைகளைப் பிரித்துச் சிதறடிக்கின்றன. சூரிய ஒளியில் நாம் சாதாரணமாக வானவில்லில் காணும் எல்லா நிறங்களும் சேர்ந்திருக்கின்றன. நிறமாலையிலுள்ள எல்லா நிறங்களையும் ஒன்று கலந்தால் கிடைப்பது வெண்ணிற ஒளியாகும்.

சூரிய ஒளியானது பூமியினுடைய வாயு மண்டலத்தின் வழியாக ஊடுருவிச் செல்லும் போது காற்றில் கலந்திருக்கும் தூகள்களால் அந்த ஒளியினுடைய நீலப் பகுதியானது சிதறடிக்கப்படுகிறது. அதே சமயம் காலையிலும் மாலையிலும் சூரிய ஒளியானது வாயு மண்டலத்தின் அதிகமான பகுதியின் மூலம் செல்வதால், பூமியின் மட்டத்திற்கருகே அதிக எண்ணிக்கையில் தூகள்களின் மீது படுவதால் ஒளியினுடைய சிவப்பு , ஆரஞ்சுப்பகுதிகள் சிதறடிக்கப்படுகின்றன. எனவேதான் காலை, மாலை வேளைகளில் ஆகாயம் செவ்வானமாகக் காட்சி தருகிறது.

மேற்கூறிய விளக்கத்திலிருந்து நாம் அறிந்து கொள்ள வேண்டியது நிறமற்ற ஆகாயம் சூரிய ஒளிக்கும் வாயுமண்டலத்திலிருக்கும் தூகள்களுக்குமிடையே நிகழும் பிரதிபலிப்பு மற்றும் ஒளிச் சிதறல், காரணமாக நீல நிறமாகத் தோற்றமளிக்கிறது என்பதாகும். அது வெறும் தோற்றமே ஒழிய உண்மை அல்ல.

நீலத்தன்மை போன்ற ஆகாயத்தின் இன்னும் சில தன்மைகளை 'நீலதாதி' என்ற சொல் குறிக்கிறது. விண்வெளியில் தூசி நிறைந்துள்ளது. பல்வேறு வாயுக்களும், நீர்த்துகள்களும் உள்ளன. இவை எவற்றாலும் ஆகாயத்தினுடைய நிர்மலத்தன்மையானது எவ்விதத்திலும் பாதிக்கப்படுவதில்லை. அதுபோன்று ஆத்மனுக்கு உள்ளதாக

நாம் எண்ணும் குறைபாடுகள் அனைத்தும் உண்மையில் ஆத்மனுடையவையல்ல. அவையெல்லாம் உபாதிகளுடையவை. மனம், புத்தி போன்றவற்றின் குறைகள் ஆத்மனின் மீது ஆரோபிக்கப்படுகின்றன. உண்மையில் ஆத்மன் சத்சித் ஆனந்தப் பொருளாகும். அது குற்றமற்றது களங்கமற்றது, தூயது. அதைத்தான் 'அமலே' என்ற சொல் குறிப்பிடுகின்றது. 'அத்யஸ்யந்தி' என்ற பதம் ஆரோபித்தல் அல்லது ஏற்றிச் சொல்லுதல் என்று பொருள்படுகிறது.

நிறமற்ற ஆகாயத்தை நாம் நீலநிறமுடையதாகக் காண்பது போல, உடல் புலன்களின் குற்றங்களால்

நாம் குற்றமற்ற ஆத்மனையும் குற்றமுடையதாகப் பார்க்கிறோம். அதற்குக் காரணம் அவிவேகம் என்று இந்த சுலோகம் தெரிவிக்கிறது.

## 22

अज्ञानान्मानसोपाधेः कर्तृत्वादीनि चात्मनि ।
कल्पयन्तेम्बुगते चन्द्रे चलनादि यथाम्भसः ॥

*அஞ்ஞானான் மானஸோபாதே:*
*கர்த்ருத்வாதீநி சாத்மநி ।*
*கல்ப்யந்தே(அ)ம்புகதே சந்த்ரே*
*சலநாதி யதா(அ)ம்பஸ: ॥*

மனமா முபாதி மருவுகர்த் தத்வ
வினமாய வற்றையறி வின்மை - யெனுமயலா
லான்மாவிற் கற்பிப்ப ரப்பலைவை
நீர்தோன்றும்
வான்மதியிற் கற்பிக்கு மாறு.

[ஸ்ரீ ரமணர்]

अम्बुगते அம்புகதே - நீரில் வந்த, चन्द्रे சந்த்ரே-சந்திரனிட (பிரதி பிம்ப)த்தில் अम्भसः அம்பஸ: நீரினுடைய, चलनादि சலநாதி - ஆட்டம் முதலியவை, यथा யதா -எப்படி (கற்பிக்கப்படுகின்றனவோ) அப்படியே, अज्ञानात् அஞ்ஞானாத் - அறிவின்மை காரணமாக, मानसोपाधेः மான ஸோபாதே - மன உபாதியின், कर्तृत्वादीनि கரத்ருத்வாதீனி - நான் செய்பவன் முதலியவை (வினையாட்சிகள்) आत्मनि ஆத்மநி - ஆத்மாவிடத்தில், कल्पयन्ते கல்ப்யந்தே - கற்பிக்கப்படுகின்றன.

கருத்துரை : நீரின் ஆட்டம் முதலியவை பிரமையால் சந்திரன் பிரதிபிம்பத்தின் மேல் ஏற்றிப் பார்க்கப்படுகின்றன. அதே போல் மனம் புத்தியின் முனைப்பெல்

லாம் ஆத்மாவுடையது என்று கற்பிப்பது அஞ்ஞானம்.

ஒரு நண்பரைப் பார்க்கச் செல்கின்றோம். அந்த நண்பரது வீட்டிற்குச் சென்று வாசற்கதவைத் தட்டுகிறோம். உள்ளேயிருந்து 'யாரது?' என்ற கேள்வி கேட்கப்படுகிறது. உடனே 'நான்தான் நாராயணன்' என்று 'நான்' என்ற முந்திய பதிலோடு 'நாராயணன்' என்ற அடைமொழியையும் சேர்த்துப் பதில் சொல்கிறோம். எ[illegible]வே நம்மிடம் முனைந்திருக்கும் எண்ணம் 'நான்' என்[illegible]ர. இந்த 'நான்' சமஸ்கிருதத்தில் 'அஹம்' என[illegible]றது. இதை அடிப்படையாகக் கொண்டதுதான் [illegible]காரம் என்ற வார்த்தை (அதாவது தன்னைப் பற்றிப் பிரதானமாகக் கருதும் எண்ணம்.)

'இந்தப் படம் மிகவும் நன்றாகஇருக்கிறதே. இதை யார் வரைந்தது' என்ற கேள்விக்கு நாம் உடனே "நான் வரைந்தேன்" என்று பதில் சொல்லுகிறோம். அதுபோல் நாம் செய்கின்ற எல்லாக் காரியங்களையும் ஆராய்ந்து பார்த்தால் அவற்றில் இந்த 'நான்' ஊடுருவி நிற்பதைக் காணலாம். இந்த 'நான்' செய்கிறேன். நான் சாப்பிடுகிறேன், நான் பாடுகிறேன். நான் அனுபவிக்கிறேன்

என்ற எல்லா எண்ணங்களும் புத்தியினுடையவையாகும். இவை அனைத்தும் விழிப்பு நிலையிலும், கனவு நிலையிலும் தான் மனதில் எழுகின்றன. ஆழ்ந்த தூக்கத்தில் இது போன்ற 'நானைப்'பற்றிய எண்ணங்கள் எழுவதில்லை. ஏன்? ஆழ்ந்த உறக்கநிலையில் மனம் அடங்கி விடுகிறது. மனம் செயல்படாத நிலையில் புத்தியும் செயலற்று விடுகிறது. எனவே அத்தகைய எண்ணங்கள் ஆழ்ந்த உறக்கநிலையில் எழுவதில்லை. ஆழ்ந்த உறக்கத்தில் இருக்கும் ஒருவனது உடல் அசைவற்றுக் கிடக்கிறது. புத்தியும் ஒடுங்கி விடுகிறது. ஆழ்ந்த உறக்கநிலையில் இருப்பது போன்றே சமாதி நிலையிலும் உடல், மனம், புத்தி ஆகியவற்றின் ஈடுபாடுகள் செயலற்றுப் போகின்றன. எனவே ஆழ்ந்த உறக்கநிலையிலும், சமாதி நிலையிலும் 'நான் செய்கிறேன்' என்ற

எண்ணம் இருக்க வழியில்லை. ஆகவே நானைப் பற்றிய எண்ணங்கள் ஆத்மனுடையதல்ல என்பது நிரூபணமாகிறது.

வாளி ஒன்றில் தண்ணீர் இருக்கிறது. மேலே நிர்மலமான ஆகாயத்தில் சந்திரன் பிரகாசித்துக் கொண்டு இருக்கிறது. வாளியிலிருக்கும் நீரில் சந்திரனுடைய பிம்பம் தெரிகிறது. வாளியிலிருக்கும் நீர்மட்டம் அசைகின்ற பொழுது சந்திர பிம்பமும் அசைகிறது. வாளியில் தெரியும் சந்திரபிம்பத்தினுடைய அசைவிற்கும் வானத்தில் பிரகாசிக்கும் சந்திரனுக்கும் எவ்வித சம்பந்தமும் கிடையாது. தண்ணீர் மட்டம் அசைவதால் ஏற்படுகின்ற ஒரு பிரதிச்செயலே சந்திரபிம்பத்தின் அசைவாகும். தண்ணீர் அசைவது நின்று விட்டால் மீண்டும் சந்திரன் உள்ள படி நீரில் பிரதிபிம்பிக்கிறது. நீர் அசைந்த பொழுது சந்திரன் பகுதி பகுதியாகப் பிரிக்கப்பட்டது போன்று சிதறடைந்து காட்சி தருகிறது. அசைவற்ற நிலையில் பகுதியாய்க் காட்சி தராமல் ஒரே முழு சந்திரனாகவே அது காட்சி தருகிறது.

அதுபோன்றே, நமது மனம் என்னும் தடாகத்தில் விருத்திகள் அல்லது எண்ணங்களாகிய அலைகள் எழுகின்றபொழுது ஆத்மசைதன்யம் அதில் பிரிவடைந்து பின்னமடைந்து பிரதிபலிப்பது போல் தென்படுகிறது. மனத்தின் சலிப்புத் தன்மை நின்றுவிட்டால், மனத்தின் விருத்திகள் அடங்கி விட்டால் அத்தகைய மாசற்ற மனத்தில் ஆத்மன் தனது உயரிய பூரணப்பொலிவுடன் ஒளிர்கிறது. மனது சலிக்கின்ற பொழுது அது ஆத்மாவின் சலனமாகக் கருதப்பட்டால் அது அப்படி கருதுகிறவனின் தவறேயன்றி ஆத்மாவின் தவறாகாது. நீரின் அசைவால் ஏற்படும் பிம்பத்தின் அசைவை சந்திரனுடைய அசைவாகக் கருதினால் அது அடிப்படையிலேயே தவறாகுமல்லவா! நீரின் அசைவு சந்திரனுடைய பிரதிபிம்பத்தின் மீது ஏற்றிப் பார்க்கப்படுவதற்குக் காரணம் பிரமையேயாகும். அதுபோல் மனம் புத்தியின் செயற்கூறுகள் யாவும் ஆத்மாவினுடையது என்று கருதுவது அஞ்ஞானம். அத்

தகைய அஞ்ஞானம் அல்லது அறியாமை அகல்கின்ற பொழுது உண்மை அறிவு கிட்டுகிறது.

## 23

रागेच्छा सुखदुःखादि बुद्धौ सत्यां प्रवर्तते ।
सुषुप्तौ नास्ति तन्नाशे तस्मादबुद्धेस्तु नात्मनः ॥

ராகேச்சா ஸுகதுக்காதி
புத்தௌ ஸத்யாம் ப்ரவர்ததே ।
ஸுஷுப்தௌ நாஸ்தி தந்நாசே
தஸ்மாத் புத்தேஸ்து நாத்மன: ॥

விருப்பாசை துன்பின்பு மேலுமிவை போல்வ
விருப்பவாம் புத்தி யிருப்பா - லிருப்பில்லாத்
தூக்கத்தி லின்றதனாற் சொந்தமவை புந்திக்கே
யோர்க்குகவாந் மாவிற்கா மோ.

[ஸ்ரீ ரமணர்]

राग ராக - பற்றுதல், इच्छा இச்சா - விருப்பம், सुख ஸுக - இன்பம், दुःखादि துக்காதி - துன்பம் முதலியன, बुद्धौ புத்தௌ - புத்தி, सत्यां ஸத்யாம் - இயங்கும் போது தான், प्रवर्तते ப்ரவர்ததே - உண்டாகின்றன. सुषुप्तौ ஸுஷுப்தௌ - ஆழ்ந்த தூக்கநிலையில், तन्नाशे தந்நாசே - அது (புத்தி) அழிந்தவுடன், नास्ति நாஸ்தி - இல்லை, तसमात् தஸ்மாத் - அதனால், बुद्धेस्तु புத்தேஸ்து (அவை எல்லாம்) புத்தியினுடையதே, न आत्मनः ந ஆத்மன: - ஆத்மாவினுடையதில்லை.

கருத்துரை : விருப்பு, வெறுப்பு, சுகம், துக்கம் யாவும் புத்தி இயங்கும் வரைதான் ஏற்படுகின்றன. உறங்கும் போது புத்தி அடங்கியிருக்கிறது. அந்த வேளையில் மனம் செயல்படாததால் அதனது விருத்திகளும் காணப்படுவதில்லை. அதிலிருந்து அனைத்தும் மனத்தின் வேலைதான் ஆத்மாவினுடையதல்ல என்று தெரிந்து கொள்ள வேண்டும்.

மனது மனிதனைப் படாதபாடு படுத்துகிறது. மனதின் பிடியில் மனிதன் படும் பாடு கொஞ்சநஞ்சமன்று. சுழிக்காற்றில் அகப்பட்ட சருகைப் போல மனதின் பிடியில் அகப்பட்ட மனிதன் தத்தளிக்கிறான். நல்லதைக் கெட்டதாகவும், கெட்டதை நல்லதாகவும் நினைக்கச் செய்கிறது மனது. அழகுடையதை அழகற்றதாகவும் அழகற்றதை அழகுடையதாகவும் கருதச் செய்கிறது அது. இன்பம் தரத் தக்கதைத் துன்பம் தரத் தக்கதாகவும், துன்பம் தரத் தக்கதை இன்பம் தரத்தக்கதாகவும் எண்ணச் செய்கிறது, மனது.

போர்களிலெல்லாம் மிகப் பயங்கரப் போர் மனதுடன் மனிதன் நடத்தும் போர் ஆகும். சாதாரண உலக மகா யுத்தங்களில் பயன்படுத்தப்படும் அதி பயங்கர ஆயுதங்களை மனது மனிதன் மீது பிரயோகம் செய்கிறது. யுத்தங்களில் வெற்றி பெறும் மாவீரன் அவனது மனதிற்கடிமையாகிறான். அண்டத்தையெல்லாம் தங்கள் காலடியில் வைக்க வல்ல மாவீரர்கள் தம் தம் மனத்தின் காலடியில் வீழ்ந்து கிடக்கிறார்கள். இதிலிருந்து அணுகுண்டு, ஹைடிரஜன் குண்டு யுத்தத்தில் பெறும் வெற்றியைக் காட்டிலும் மனத்துடன் நடக்கும் யுத்தத்தில் வெற்றி பெறுவதே அதிமஹத்துவம் வாய்ந்தது என்பது வெளியாகிறது.

மனிதனைத் தன்பால் ஈர்க்க மனமானது பல்வேறு முறைகளைக் கையாள்கிறது. மனதின் தொழில் முறைகளை நன்கு அறிகிறவன் அதை அடக்கும் உபாயத்தையும் அறிந்தவனாகிறான். பணத்தை அடக்கும் வழி அதனுடன் மல்யுத்தம் செய்வதன்று. மனத்துடன் போரிட்டால் வெற்றி மனதிற்கே. மனிதனுக்கல்ல என்பதை நாம் கருத்தில் கொள்ள வேண்டும். சாட்சியாயிருந்து அதன் செயல் முறைகளை நன்கு கண்காணித்துப் படிப்படியாகத் தீய விருத்திகள் இருக்குமிடத்தில் நல்ல விருத்திகளை இருக்கச் செய்தலே மனதையடக்கும் உபாயமாகும்.

கடைத்தெரு வழியாகச் சென்று கொண்டிருக்கிறோம். விதவிதமான பொருள்களைப் பார்க்கிறோம். அவற்றிலெல்

லாம் நமது மனது பதிவதில்லை. அப்படிச் சென்று கொண்டிருக்கும் பொழுது நகைக்கடை ஒன்றின் வாசலில் கண்ணாடி பீரோவில் தொங்க விடப்பட்டிருக்கும் வைர நெக்லஸ் ஒன்று நம் கண்களில் பட்டு விடுகிறது. அவ்வுளவுதான் கண்கள் அந்த நெக்லஸில் குத்திட்டு நின்றுவிடுகின்றன. அது மட்டுமல்ல! நமது கண்களிலிருந்து கண்ணீர் பொல பொலவென்று கொட்டுகிறது. என்ன காரணம்? அந்த வைர நெக்லஸின் மீது மிகவும் பற்று வைத்திருந்து சென்ற வருடம் திடீரென்று நோய்வாயப்பட்டு இறந்து போன நமது பத்துவயது பெண்ணினுடைய ஞாபகம் வந்து விடுகிறது. நாம் உயிருக்குயிராக நேசித்த அந்த பெண்ணின் முகம் அதன் கழுத்தில் தொங்கும் வைர நெக்லஸ், நம்மைப் பார்த்து அது சிரிக்கும் சிரிப்பு அனைத்தும் நமது மனத்திரையின் மீது தென்படுகின்றன. அந்தப் பெண் மீது நாம் வைத்திருந்த பற்றுதல் காரணமாகத்தான் அதைப் பிரிந்ததால் நமக்குத் துக்கம் ஏற்படுகிறது. ஆக துன்பத்திற்குக் காரணம் பற்றுதல் என்பது தெளிவாகிறது.

ஒரு பொருளைப் பார்த்தவுடனே அதைப் பெறவேண்டுமென்ற ஆசை உண்டாகிறது. அந்த ஆசை தோன்றுவதற்கு நிலைக்களன் மனது. குமாஸ்தாவாக இருக்கும் ஒருவன் ஆபீஸ் மானேஜராவதற்கு ஆசைப்படுகிறான். பெருமுயற்சிக்குப்பின் அந்த மானேஜர் பதவி கிட்டுகின்ற பொழுது அவன் பெருமகிழ்ச்சியடைகிறான். பிறகு அந்த மானேஜர் பதவி பட்டுமெத்தையன்று, இடுக்கண்கள் பல நிறைந்தது என்றுணருகின்ற பொழுது "ஐயையோ! ஏன் இதில் வந்து மாட்டிக்கொண்டோம்" என்று வருந்துகின்றான். மானேஜர் பதவி வேண்டுமென்ற ஆசை, அது கிட்டியபொழுது கிடைக்கும் மகிழ்ச்சி, பிறகு அதில் உள்ள இடுக்கண்களால் ஏற்படும் வருத்தம் ஆகியவை யாவும் தோன்றுவது அவனுடைய மனத்திலேயாகும்.

விருப்பு, வெறுப்பு, இன்பம், துன்பம் அனைத்தும் மனத்தளவேயாகும். மனம் அல்லது புத்தி செயல்படு

கின்ற வரைதான் அவை நிலவமுடியும். ஆழ்ந்து உறங்குகையில் இந்த மாறுபட்ட நிலைகள் யாவும் அடிபட்டுப் போய்விடுகின்றன. சுஷுப்தி நிலையில் விருப்பு இல்லை! வெறுப்பு இல்லை. இன்பமில்லை. துன்பமில்லை. அது தன்னை மறந்த நிலையாகும். எனவே இந்த விருப்பு வெறுப்பு போன்றவையெல்லாம் மனதுடன் சம்பந்தப் பட்டவையேயன்றி ஆத்மாவுடன் சம்பந்தப்பட்டவையல்ல. பச்சைக் கண்ணாடியணிந்து பார்க்கையில் அனைத்தும் பச்சை நிறமாகத் தோற்றம் தருகின்றன. கண்ணாடியை எடுத்து விட்டால் பொருள்கள் உள்ளபடித்தோன்றுகின்றன. அதைப் போல இந்த எதிர்மறை எண்ணங்கள் யாவும் மனத்தினுடையவையேயன்றி ஆத்மனுடையவை ஆகமாட்டா.

## 24

प्रकाशोर्कस्य तोयस्य शैत्यमग्नेर्यथोष्णता ।
स्वभावस्सच्चिदानन्द नित्यनिर्मलतात्मन ॥

ப்ரகாசோ(அ)ர்கஸ்ய தோயஸ்ய
சைத்யமக்நேர் யதோஷ்ணதா ।
ஸ்வபாவஸ் சச்சிதாநந்த
நித்ய நிர்மலதாத்மந: ॥

அருக்கன் றனக்கொளி யப்புக்குத் தட்ப
மெரிக்குட் டணமு மியல்பா - யிருக்கையெனச்
சத்துச்சித் தானந்தஞ் சார்நித்தஞ் சுத்தமியல்
பொத்ததான் மாவுக்கென் றோர்.

[ஸ்ரீ ரமணர்]

अर्कस्य அர்கஸ்ய - சூரியனுக்கு, प्रकाशः ப்ரகாச- பிரகாசம் (ஒளி), तोयस्य தோயஸ்ய - நீருக்கு, शैत्यं சைத்யம் - குளுமை, अग्नेः அக்நே: - நெருப்புக்கு, उष्णता உஷ்ணதா - சூடு, यथा யதா - எப்படி, स्वभावः ஸ்வபாவ: - ஸ்வபாவமோ,

அப்படியே, आत्मनः ஆத்மந: - ஆத்மாவுக்கு, सच्चिदानन्द சச்சிதானந்த - சச்சிதானந்தத் தன்மையும், नित्यनिर्मलता நித்ய நிர்மலதா - என்றும் சுத்தமாயிருக்கும் தன்மையும் स्वभावः சுபாவ: இயற்கைக் குணமாம்.

கருத்துரை : சூரியனுக்கு ஒளி சிறப்பு; நீருக்குக் குளுமை தர்மம். நெருப்புக்குச் சூடு என்றுமுள்ள தன்மை. அதேபோல ஆத்மனுக்கு சத், சித், ஆனந்தம், நித்ய சுத்தத் தன்மை சிறப்பாம்.

மனிதனாகட்டும், மிருகமாகட்டும், செடி கொடி போன்ற தாவரங்களாகட்டும் - எதுவும் துன்பத்தை விரும்புவதில்லை. இன்பத்தையே விரும்புகின்றன. வெயிலில் கிடக்கும் புழு ஒன்று நிழலை நாடுகிறது. இருளில் இருக்கும் செடி வெளிச்சத்தை நாடுகிறது. குளிரில் நடுங்கும் மனிதனொருவன் வெப்பத்தை நாடுகிறான். கூட்டில் அடைபட்டிருக்கும் பறவை சுதந்திரமாகப் பறந்து செல்ல விரும்புகிறது. இவற்றின் அடிப்படைக் காரணம் என்ன? ஜீவர்களின் இயல்பு அல்லது ஸ்வபாவம் இன்பத்திலேயே இருப்பதாகும். துன்பத்தில் உழல்வதல்ல. ஜீவர்களின் ஸ்வபாவம் அறியாமையில் உழல்வதல்ல. அறிவைப் பெறுவதாகும். ஜீவர்களின் ஸ்வபாவம் பொய்யில் புரள்வதல்ல. உண்மையை உணர்வதேயாகும்.

இயற்கையிலுள்ள பலவிதமான பொருள்களையெல்லாம் ஆராய்ந்தால் அவற்றிற்கிடையே ஒரு சிறப்பான ஒற்றுமை நிலவுவதைக்காணலாம். ஒவ்வொரு பொருளுக்கும் அதற்கென்று அமைந்த ஒரு ஸ்வபாவம் அல்லது இயல்பு அல்லது சிறப்பு அம்சம் உண்டு. அந்த ஸ்வபாவத்தை அல்லது அதனது சகிப்புத்தன்மையை அந்தப் பொருளின்றும் பிரிக்க முடியாது. உதாரணமாக சூரியன் ஒளிப்பிழம்பு. அதனுடைய ஸ்வபாவம் ஒளியாகும். ஒளியில்லாத சூரியன் என்று சொன்னால் அதில் அர்த்தமே கிடையாது. ஒளியாகிய தனது ஸ்வபாவத்தின் மூலம் தான் அது தன்னை வெளிக்காட்டிக்கொள்கிறது.

நெருப்பின் ஸ்வபாவம் உஷ்ணம். நெருப்பு என்றாலே வெப்பம் என்றும் சேர்ந்தே பொருள்படுகிறது. குளிர்ச்சியான நெருப்பு அல்லது குளிர்ந்த தீ இருக்க முடியாது. அதனது இயல்பாகிய வெப்பத்தை நெருப்பிலிருந்து பிரித்துவிடமுடியாது. அதுபோல் நீரின் ஸ்வபாவம் தட்பம் அல்லது குளிர்ச்சியாகும். நீர் என்று சொன்னாலே கூடவே குளிர்ச்சியும் சேர்ந்தே பொருள்படுகிறது.

ஆத்மாவினுடைய ஸ்வபாவம் என்ன? ஆத்மா பிரகிருதியினின்றும் அப்பாற்பட்டது. எனவே பிரகிருதியிலுள்ள பொருள்கள் பெற்று விளங்கும் குணங்களுக்கும் ஆத்மாவிற்கும் சம்பந்தம் கிடையாது. ஆத்மாவினுடைய தன்மை சத், சித், ஆனந்தம் என்பவையேயாம். அதாவது, இருப்பது, இயங்குவது இன்பமயமானதாம்.

தோன்றிய அனைத்தும் அழியும். இது உறுதி. எனவே தோற்றத்திற்கு வந்திருப்பவை யாவும் அநித்யம். ஆத்மாவோ தோன்றாப்பொருள். எனவே அது அநித்யம். அதாவது என்றுமுள்ளது. உலகப்பொருள்கள் யாவும் குற்றமுள்ளவை. அதாவது மலம் கலந்தவை. ஆனால் ஆத்மாவோ நிர்மலமானது, தூயது, குற்றமற்றது. இத்தகைய சச்சிதானந்தத்தன்மை, தூய்மை, நித்தியத்தன்மை போன்றவற்றை ஆத்மாவிலிருந்து பிரிக்கமுடியாது. ஏனெனில் ஆத்மாவினுடைய ஸ்வபாவம் அல்லது இயல்பே அவைதாம்.

எனவே சூரியன், நெருப்பு, நீர் ஆகியவற்றின் தன்மைகள் முறையே ஒளி, உஷ்ணம், தட்பம் ஆகியவையாக அமைவது போன்று ஆத்மாவினுடைய தன்மைகள் சத், சித், ஆனந்தம், நிர்மலம், நித்யம் போன்றவைகளாக அமைகின்றன.

## 25

आत्मनः सच्चिदंशश्च बुद्धेर्वृत्तिरिति द्वयम् ।
संयोज्य चाविवेकेन जानामीति प्रवर्तते ॥

ஆத்மன: ஸச்சிதம் சஸ்ச
புத்தேர்வ்ருத்திரிதி த்வயம் ।
ஸம்யோஜ்ய சாவிவேகந
ஜாநாமீதி ப்ரவர்ததே ॥

சத்துச்சித் தென்னத் தகுமான்ம வம்சமும்
புத்தி விருத்தி புகலொன்று - மொத்த
விரண்டோடு மூடத்தால் யானறிகின் றேனென்
ருெருத்தன் ருெழிற்படுவ னோர்.

[ஸ்ரீரமணர்]

आत्मनः ஆத்மந: - ஆத்மாவினுடைய, सच्चिदंशाः ஸச்சிதம்ஸ: - சச்சிதாம்சம் (ஒன்று), बुद्धेः புத்தே: - புத்தியினுடைய, वृत्तिः வ்ருத்தி: - போக்கு, इति இதி - என்ற (இரண்டு), द्वयं च த்வயம்ச - இரண்டையும், संयोज्य ஸம்யோஜ்ய - சேர்த்து, अविवेकेन அவிவேகேன - அறியாத் தன்மையினால், जानामि इति ஜாநாமி இதி - நான் அறிகிறேன் என்று, (ஜீவாத்மா) प्रवर्तते ப்ரவர்ததே - இயங்குகிருன். (காரியத்தில் ஈடுபடுகிருன்.)

கருத்துரை : ஆத்மாவினுடைய குணம் சத், சித், ரூபம். புத்திக்குத்தான் விருத்தி உண்டு. செயற்போக்கு உண்டு. அதுவும் அதன் ஒளியில் தான் உண்டு. இந்த இரண்டையும் சேர்த்து அறியாமை காரணமாக, 'நான் அறிகிறேன்' என்று ஆத்மா அறிகிறது போல பேசுகிருேம். ஆத்மா அறியவேண்டியதொன்றில்லை. அது அறிவதுமில்லை.

தண்ணீரைக் கொதிக்கவைக்கிறோம். என்ன நடக்கிறது? சற்றுமுன் குளிர்ந்திருந்த நீர் இப்பொழுது சூடாகி விடுகிறது. கையால் தொடமுடியாத அளவிற்கு அது சுடுகிறது. சூடு பண்ணுவதை நிறுத்தி விடுகிறோம். படிப்படியாக நீர் குளிர்ச்சியடைந்து தனது இயற்கை நிலையை அடைந்து விடுகிறது. இதிலிருந்து நாம் என்ன அறிகிறோம்? நீரின் இயற்கையான தன்மை குளிர்ச்சி. அது போல் நெருப்பின் இயற்கையான தன்மை உஷ்ணம். இயற்கையில் எல்லாப் பொருள்களுக்கும் அவற்றிற்கென்று இயற்கையாயமைந்துள்ள தன்மைகள் உண்டு. இந்தத் தன்மையைத்தான் சுபாவம் என்கிறோம். சுபாவம் என்ற சொல்லே இயற்கையாயமைந்துள்ள தன்மை என்று பொருள் படுகிறது. எல்லாவற்றிற்கும் அதனதன் சுபாவம் இருப்பது போன்று ஆத்மனுடைய சுபாவம் என்ன? ஆத்மனுடைய சுபாவம் அல்லது தன்மை 'இருப்பது, இயங்குவது, இன்பமயமானது' ஆகும். அதைத்தான் சமஸ்கிருதத்தில் சத்-சித்-ஆனந்தம் என்கிறோம்.

தண்ணீர் மேட்டுப் பகுதியிலிருந்து பள்ளத்தை நோக்கி ஓடி வருகிறது. அப்படி ஓடுவது அதன் தன்மை. மேலே எறிந்த கல் கீழே விழுகிறது. அப்படிக் கீழே விழுவது அந்தக் கல்லின் சுபாவம் அல்லது தன்மை. தண்ணீர் ஏன் மேட்டிலிருந்து பள்ளத்தை நோக்கிப் பாயவேண்டும், கல் ஏன் மேலேயிருந்து கீழே விழவேண்டும் என்பதற்கெல்லாம் நாம் விஞ்ஞான பூர்வமாக விளக்கம் கொடுக்க முயன்றால் கூட அந்த நிகழ்ச்சிகளெல்லாம் பொருள்களின் தன்மைகளின் பாற்பட்டவை என்பதை ஒப்புக்கொண்டுதானாக வேண்டும். அதுபோல் மனத்திற்கும் அதனது சுபாவங்கள் அல்லது தன்மைகள் உண்டு. ஓயாது அலைந்து திரிதல், சினப்படுதல், துக்கப்படுதல் போன்றவை அனைத்தும் மனத்தின் தன்மைகள். அதே வேளையில் ஆத்மா சுயம்பிரகாசமானது. அது மாறுபடாதது. மாற்றமில்லாதது. மாறுபாடு அடையும் தன்மையதான மனத்தினை மாறுபாடுகளுக்கப்பாற்பட்ட ஆத்மனுடன் நாம் ஒன்று படுத்திக்கூற முடியாது, கூறக்

கூடாது. ஏன்? மனம் வேறு. ஆத்மா வேறு. மனத்தின் தன்மைகள் வேறு. ஆத்மாவின் தன்மைகள் வேறு. இருப்பினும் ஆத்ம ஒளியின்றி மனத்தினால் உணரவோ எண்ணவோ முடியாது.

மனிதன் அடிப்படையில் தூய அறிவு சொரூபமான வன். அந்தத் தூய அறிவானது அவனது ஸ்தூல சரீரத்தின் மூலமாகச் செயல்படுகின்ற பொழுது நனவுலக அனுபவங்களை அனுபவித்துக் கொண்டு தன்னை அது ஜாக்கிர நிலை (விழிப்பு நிலை) நபராக வெளிப்படுத் திக்கொள்ளுகிறது. அதே தூய அறிவு சூக்ஷ்ம சரீரத்தின் மூலம் செயல்படுகையில் கனவுலக அனுபவம் பெறும் சொப்பன நிலை (கனவுநிலை) நபராகவும், காரண சரீரத் தின் மூலம் செயல்படும்போது ஆழ்ந்த உறக்கநிலையாகிய சுஷுப்தி நிலையை அனுபவிக்கும் சுஷுப்திநிலை நபர் போலவும் செயல்புரிகிறது. ஜாக்கிர, ஸ்வப்ன, சுஷுப்தி ஆகிய மூன்று நிலைகளின் தொகுப்பே ஜீவாத்மனின் தனித்தன்மை எனப்படுகிறது.

ஒரு பொருளைப் பற்றிய அறிவு நமக்கு எப்படி வரு கிறது என்பதைப் பற்றி நாம் கொஞ்சம் ஆராய்ந்து பார்ப் போம். தூய உள்ளுணர்வுத் தத்துவமானது எண்ணத்திற்கு ஒளி தரும் பொழுது தான் அனுபவங்களை அடைவதாக நாம் அறிகிறோம். உணர்வுத் தத்துவம் அறியக் கூடிய தொன்றல்ல. அது தூய்மையான பூரணப்பொருள். அதே சமயத்தில் எண்ணமானது அதனளவிலே உணர்வற்றது, ஜடமாகும். இரண்டும் சேரும் பொழுது தான் “நான் அறிகிறேன்” என்ற அறிவு பிறக்கிறது. இதை ஒரு எளிய உதாரணம் மூலம் விளக்கலாம்.

மின்சார பல்பு ஒன்று இருக்கிறது. அது ஜடவஸ்து. அதனிடத்து ஒளியில்லை. மின்சாரம் இருக்கிறது. அது சக்தி சொரூபம். ஆனாலும் அதனிடத்தும் ஒளியில்லை. தனித்தனியாகப் பார்க்கையில் பல்பு, மின்சாரம் இரண் டும் ஒளியற்றே இருக்கின்றன. ஆனால் மின்சாரம் பல்பு மூலமாகப்பாயும் பொழுது அதாவது பல்பும் மின்சாரமும் ஒன்றோடொன்று தொடர்பு கொள்ளும் பொழுது ஒளிதோன் றுகிறது. அதைப் போலவே ஆத்மன் சேதன ஸ்வரூபம்.

மனம், புத்தி ஆகியவை அசேதனங்கள். இரண்டினுடைய சேர்க்கையினால்தான் 'நான் அறிகிறேன்' என்ற அறிவு பிறக்கிறது.

ஒரு பொருளைப் பார்க்கிறோம். ஒளியின் துணை கொண்டே ஒரு பொருளைப் பார்க்கிறோம். 'பார்த்தல்' என்பது என்ன? ஒளி பொருளின் மீது பட்டு பிரதிபலிக்கப்படும் பொழுது அதை நாம் பார்க்கிறோம். இருட்டில் இருக்கும் ஒரு பொருளை நம்மால் பார்க்க முடியாது. பிரதிபலிக்கும் பொருள் இல்லாமல் வெறும் ஒளியை மட்டும் நம்மால் பார்க்க முடியாது. எனவே பார்த்தல் என்பது பொருள், ஒளி ஆகியவற்றின் சேர்க்கையால் உண்டானவதாகும். அதைப் போல் உணர்வும் எண்ணமும் சேர்ந்து அறிவாகிறது.

ஆத்ம ஞானத்தைப் பெறுவதற்கு மனம் ஒடுங்க வேண்டும். மனம் அற்ற நிலையதுவே பிரம்மாகும். "நான் அறிகிறேன்" என்ற எண்ணம் எப்பொழுது ஏற்படும்? நான் வேறாகவும், அறியப்படுபொருள் வேறாகவும் இருந்தால் தான் அந்த எண்ணம் உண்டாகும். ஆனால் நான் எத்தகையவன்? "நான்" அறிவு சொரூபம். நானே அறிவு சொரூபமாயிருக்க நான் எதைப்போய் அறிவது? உண்மை இதுவாயிருக்க, 'நான் அறிகிறேன்' என்ற எண்ணம் தோன்றக் காரணம் என்ன? உண்மையை உணராததுதான் காரணம். அந்த அறியாமை அகன்றால் அறிவு கைவரப்பெறும்.

## 26

आत्मनो विक्रिया नास्ति बुद्धेर्बोधो न जात्विति ।
जीवस्सर्वमलं ज्ञात्वा ज्ञाताद्रष्टेति मुह्यति ॥

ஆத்மனோ விக்ரியா நாஸ்தி
புத்தேர் போதோ ந ஜாத்விதி ।
ஜீவஸ் ஸர்வமலம் ஞாத்வா
ஞாதா த்ரஷ்டேதி முஹ்யதி ॥

என்றும் விகார மிலதான்மா புத்தியு
மென்றுமறி வின்றியதே யென்றுலு - மொன்றிய
சிவனே யெல்லாந் தெரிவான்செய்

வான்காண்பான்
பாவத்தான் மாமோகி பார்.
[ஸ்ரீரமணர்]

आत्मनः ஆத்மந: - ஆத்மாவுக்கு, विक्रिया விக்ரியா - மாற்றம், பதற்றம் ஒன்றும், नास्ति நாஸ்தி - கிடையாது, बुद्धेः புத்தே: - புத்திக்கு, बोधः போத: - ஞானம், न जातु ந ஜாது - ஒருகாலும் கிடையாது. इति இதி - என்று, जीवः ஜீவ: - ஜீவாத்மா, सर्वं ஸர்வம் - முற்றிலும், अलं ज्ञात्वा அலம் ஞாத்வா - அறிந்து கொள்ளாமலேயே, ज्ञाता (க்) ஞாதா - அறிகிறேன், द्रष्टा த்ரஷ்டா - பார்க்கிறவன் நான், इति இதி - என்று, मुह्यति முஹ்யதி - மோகம் கொள்கிறது.

கருத்துரை : ஆத்மனுக்கு மாற்றம், படபடப்பு, ஆட்டம், அலைவு ஒன்றும் கிடையாது. புத்திக்குத் தானாக அறிவு கிடையாது. ஜீவன் இதையெல்லாம் புரிந்து கொள்ளாமல் நான் அறிகிறேன், பார்க்கிறேன் என்றெல்லாம் எண்ணிக்கொண்டு சங்கடப்படுகிறது.

மின்சார பல்பு ஒன்றிற்குத் தன்னளவிலே எந்த விதமான வெளிச்சமும் கிடையாது. அதன் வழியாக மின்சாரம் பாய்கின்ற பொழுது அது கண்ணைப் பறிக்கும் ஒளியுடன் பிரகாசிக்கிறது. மின்சாரத்திற்கும் தன்னளவிலே ஒளிரும் திறம் இல்லை. அது சக்திமயமாக இருந்தாலும் அதனது சக்தி வெளிப்பட ஜடப்பொருளாகிய பல்பின் உதவி வேண்டும். ஜடப்பொருளாகிய பல்பும் சக்திமயமான மின்சாரமும் சேர்கின்ற பொழுது ஒளி உண்டாகின்றது. ஒளிமட்டுமல்ல, மின்சாரத்தால் எத்தனையோ விதமான நன்மைகளை நாம் அடைகின்றோம். அவை அனைத்திற்கும் அடிப்படைத் தத்துவம் மேலே கூறப்பட்ட முறையிலேதான் அமைகிறது. அதைப் போலவேதான் நம்மிடமிருக்கும் புத்திக்குச் சுயமாக எண்ணவோ, சிந்திக்கவோ முடியாது. ஏனெனில் அது ஜடப்பொருளிலிருந்து தோன்றியதாகும். ஆத்மன் அறிவு சொரூபம். அதாவது தூய அறிவு மயம். அது சரீரத்தினுடைய செயல்களாலும், மனத்தினுடைய எண்ணங்களாலும் சிறிதும் பாதிக்கப்படுவதில்லை. அறியாமையின் விளைவாக

ஆத்மனும் சரீரம், மனம், புத்தி போன்ற ஜடப்பொருள்களும் ஒன்று படுத்திப் பேசப்படுகின்றன.

பெண் சிங்கமொன்று சாகும் தறுவாயில் குட்டியொன்றை ஈன்றெடுத்து விட்டுச் செத்தது. ஆட்டுக்கூட்டத்தினிடையே அகப்பட்டுக்கொண்ட அந்தச் சிங்கக்குட்டியும் ஆடுகளோடு ஆடாகத் தன்னையும் பாவித்துக்கொண்டும் புல்லைத் தின்று கொண்டும் 'மே மே' என்று கத்திக்கொண்டும் வளர்ந்து வந்தது. ஒருநாள் அது புல் மேயப்போன இடத்திலே அதை வேறொரு சிங்கம் பார்த்துவிட்டது. ஆட்டுக்கூட்டத்திலே சிங்கக்குட்டியைப் பார்த்து அதிசயமடைந்த அது கரகரவென்று அந்தச் சிங்கக்குட்டியைத் தன்பால் இழுத்தது. அந்தக் குட்டியோ பரிதாபமாக மே மே என்று கத்தியது. இதர ஆடுகள் சிங்கத்தைக் கண்டு ஓட்டம் பிடித்தன. பெரிய சிங்கம் சிங்கக் குட்டியிடம், "நீ ஒரு சிங்கமாயிற்றே! ஏன் இப்படி மே மே என்று ஆடு போலக் கத்திக்கொண்டு புல்லைத் தின்கிறாய்?" என்று கேட்டது. அதற்கு அந்தச் சிங்கக் குட்டி "ஐயோ! நான் ஒரு ஆடு, என்னை விட்டுவிடு" என்று கெஞ்சியது. அதைக் கேட்ட சிங்கம் சிரித்துக் கொண்டே தன்னிடமிருந்த ஒரு மாமிசத்துண்டை அதன் வாயிலே திணித்தது. மாமிசத்தின் சுவையை முதன் முதலில் சுவைத்த அந்தச் சிங்கக் குட்டிக்குத் தனது இயல்பான சுபாவம் தலையெடுத்தது. உடனே பெரிய சிங்கம் அதை இழுத்துக்கொண்டு போய் அருகிலிருந்த நீர் நிலையில் அதனது பிரதிபிம்பத்தைப் பார்க்க வைத்து, "இப்பொழுது சொல். நீ என்னைப் போல சிங்கமா அல்லது ஆடா?" என்று கேட்டு அந்த காடே அதிரும் வகையில் கர்ஜனை செய்தது. அதைக் கேட்டு அந்தச் சிங்கக்குட்டியும் தான் சிங்கம் என்பதை உணர்ந்து தானும் இடி முழக்கம் போன்ற கர்ஜனையைக் கிளப்பிற்று.

மேற்காணும் கதையில் வரும் சிங்கக் குட்டியைப் போலத்தான் அறியாமையில் உழலும் ஜீவன் தான் உண்மையில் அறிவுமயமான, சின்மயமான, ஆத்மசொரூபம் என்பதை மறந்து ஜடப்பொருள்களோடு தன்னை ஒன்று படுத்திக்கொள்கின்றான். அறியாமையை அகற்ற இறைவன் குருவாய் வந்து அவனை ஆட்கொள்ளுகின்ற பொழுது அவனும் தனது நிஜ சொரூபத்தை அறிந்து கொள்கிறான்.

## 27

रज्जुसर्पवदात्मानं जीवं ज्ञात्वा भयं वहेत्।
नाहं जीवः परात्मेति ज्ञातश्चेन्निर्भयो भवेत्॥

*ரஜ்ஜு ஸர்ப்பவதாத்மாநம்*
*ஜீவம் ஞாத்வா பயம் வஹேத் ।*
*நாஹம் ஜீவ: பராத்மேதி*
*ஞாதச்சேத் நிர்பயோ பவேத் ॥*

தன்னைத்தான் சீவகனெனத்தாம்பிலே பாம்புபோ
லுன்னியே யச்ச முறுகின்ருன் - றன்னைத்தான்
சீவனவன் யான்பரமான் மாவென்று தேர்ந்ததனா
லாவனஞ் சானா யவன்

[ஸ்ரீரமணர்]

आत्मानं ஆத்மாநம் - ஆத்மாவை, रज्जुसर्पवत् ரஜ்ஜு ஸர்ப்பவத் - கயிற்றில் பாம்பைப் போல், जीवं ஜீவம் - ஜீவனாக, ज्ञात्वा ஞாத்வா - அறிந்து, भयं பயம் - பயத்தை, वहेत् வஹேத் - தாங்குகிருன், अहं அஹம் - நான், न जीवः ந ஜீவ: - ஜீவனல்ல, परमात्मा பரமாத்மா - அந்த பரமாத்மா தான், इति இதி - என்று, ज्ञातः चेत् ஞாத: சேத்-அறிந்து கொண்டால், निर्भयो நிர்பயோ - பயமற்றவனாக, भवेत् பவேத் - ஆவான்.

கருத்துரை : கயிற்றைக் கயிறென்று அறியாத காரணத்தால் பாம்பு என்ற பயம் அதன் படைகளுடன் பரந்து விரிந்து அலற வைக்கிறது. கயிறுதான் என்று புரிந்து விட்டால் பாம்பு என்ற தவருன அறிவும் தொலைந்துவிடும். அதனுடன் எழுந்து விரிந்த பயக்கூட்டமும் பறந்துவிடும். அதே போல் ஆத்மாவை அறியாத காரணத்தால் ஜீவனை ஏற்கிறேம். அது தரும் தொல்லைகளின் பயத்தை ஏற்று அலறுகிறேம். 'நான் பரமாத்மனே' என்ற ஞானநிலை

வந்துவிட்டால் தப்பெண்ணம் தொலையும். அதனுடன் மற்ற தொல்லைகளும் தொலைந்துவிடும்.

இருட்டிலே ஒரு மனிதன் தனியாய்ப் போய்க்கொண்டிருக்கிறான். அந்த வேளையிலே புதரினுள் எலி ஓடுவதால் ஒரு சிறு சலசலப்புச் சத்தம் கேட்கிறது. அதைக் கேட்ட அம்மனிதன் வருவது புலியோ என எண்ணி மிகுந்த அச்சமடைகிறான். ஏதோ கயிறு போல் ஒரு பொருள் தட்டுப்படுகிறது. அது பாம்பாக இருக்கலாமோ என அவன் பயப்படுகிறான். மூங்கில்களிலுள்ள துவாரம் வழியாகக் காற்று போவதால் 'ஊள்' என்ற சப்தம் எழுகிறது. அப்படிச் சத்தமிடுவது பேயாக இருக்கலாமோ என அவன் அஞ்சுகிறான். இது பொதுவாக நம் அனைவருக்கும் ஏற்படும் அனுபவமாகும்.

நம்மில் ஒவ்வொருவரையும் ஏதாவது ஒருவகை பயம் பிடித்தாட்டுகிறது. இந்தப் பயம் ஏன் ஏற்படுகிறது, எப்படி ஏற்படுகிறது என்பதைப் பற்றி நாம் சிறிது ஆராய வேண்டும். பயம் பல காரணங்களால் உண்டாகிறது. முதலாவதாக, என்னிலிருந்து அவன் வேறுபட்டவன் அல்லது அது வேறுபட்டது என்ற எண்ணம் பயத்திற்கு ஒரு காரணமாக அமைகிறது. உதாரணமாக ஒரு தேசத்திலிருக்கும் ஒருவன் பிறிதொரு தேசத்திற்குப் போகின்றான் என்று வைத்துக்கொள்வோம். அந்தத் தேசத்து மக்கள் எப்படியிருப்பார்களோ என்று மிகவும் பயப்படுகிறான். அங்குச் சென்ற பிறகு அந்தத் தேசத்து மக்களோடு பழகிய பிறகு அவர்களுடன் தன்னையும் ஒருவனாகப் பாவித்துக் கொள்கிறான். தன்னிலிருந்து அவர்கள் அன்னியமானவர்களல்லர் என்ற உணர்வு வந்தபிறகு அவனிடமிருந்த பயம் அடியோடு அகன்று விடுகிறது.

"எல்லாம் நானே" என்ற உணர்வு வந்துவிடுகின்ற பொழுது பாம்பும் புலியும் ஒருவனுக்கு நண்பர்களாகிவிடுகின்றன. இது வெறும் கதையல்ல. மகான்கள் தங்களது

வாழ்வில் அனுபவித்ததொன்றாகும். சைதன்ய மகாப்பிரபு தமது சிஷ்யர்களுடன் ஒருமுறை காட்டு வழியே நாமா வளி சொல்லிக்கொண்டு செல்கையில் எதிரே கொடூரமான புலி ஒன்று எதிர்பட்டது. புலியைக் கண்ட அவ ரது சிஷ்யர்கள் பயந்து போய் ஓட்டம் பிடித்தார்கள். ஆனால் சைதன்ய மகாப்ரபுவோ புலியை எதிர்கொண்டு சென்றார். புலியும் அவரை நெருங்கியது. புதர் மறை விலிருந்து அந்தக் காட்சியைப் பார்த்துக் கொண்டிருந்த பக்தர்கள் தங்களது குருவிற்கு என்ன நேருமோ என்று பதைபதைத்தனர். பிரபுவை நெருங்கிய புலி அவரை ஒன்றும் செய்யவில்லை. தன் கையிலிருந்த துளசி மாலை யைப் பிரபு புலியின் கழுத்தில் போட்டார். சைதன்யர் நாமாவளி பாட புலி ஆடியது. என்னே அந்தக் காட்சி!

சுவாமி ராமதாஸ் ஒரு முறை இருட்டறை ஒன்றில் தங்கியிருந்த பொழுது ஒரு நச்சுப்பாம்பு அவரது கால் பெருவிரலை வருடியவாறே ஊர்ந்து சென்றது. அது சுவைத்து மிச்சம் வைத்துச் சென்ற தின்பண்டத்தை அவர் பிரசாஸதமாக உட்கொண்டார்.

சுவாமி ராமதீர்த்தர், சுவாமி விவேகானந்தர், சுவாமி சிவானந்தர் போன்ற மகான்களது வாழ்விலும் இது போன்ற எண்ணற்ற நிகழ்ச்சிகளைக் காணலாம். நமக்கு அரிதாகத் தோன்றும் அந்தச்செயல்கள் அவர்களுக்கு எளி தாக முடிந்தன. ஏன்? அவர்கள் தங்களுக்கு அன்னியமாக என்று உலகில் வேறு எதையும் பார்த்ததில்லை. எல்லா வற்றையும் தன்மயமாகப் பார்த்த அவர்களுக்கு எதைக் குறித்தும் பயம் இல்லாது போயிற்று. இரண்டு என் னும் பொழுது பயம் ஏற்படுகிறது. ஒன்று என்கையில் பயம் இல்லை.

ஆத்மன், எல்லாமாக விளங்குகிறது. எல்லாவற்றை யும் தானாகப் பார்ப்பது என்பது எல்லாவற்றையும் ஆத்மாவாக அதாவது 'தானே ஆத்மன், ஆத்மனே தான்'

என்ற உணர்வு வரப்பெறுகையில் பயம் நீங்கி பயமற்ற நிலையை ஜீவன் அடைகிறான்.

இருளில் கயிற்றைப் பாம்பாகக் கருதிய நிலை வரையில் ஒருவன் பயத்தால் நடுங்குகின்றான். விளக்கின் வெளிச்சத்தில் 'அது பாம்பாகச் சுருண்டு கிடக்கும் வெறும் கயிறு தான்' என்று அறிந்து கொண்டபின் அவன் பயமற்றவனாகிறான். உண்மையைப் பற்றிய அறிவு அவனிடமிருந்த பயம் நீங்குவதற்குக் காரணமாக அமைந்தது.

தன்னைச் சரீரம், மனம், புத்தி ஆகியவற்றுடன் பிணைத்துப் பார்க்கையில் ஒருவன் பயத்திற்குள்ளாகிறான். தான் ஆத்ம சொரூபம் தனக்கு அன்னியமாக வேறொன்றும் இல்லை என்ற மேலாம் அறிவு வருகின்ற பொழுது அவன் பயமற்றவனாகிறான். உலகத்திலுள்ள எல்லாத் தொல்லைகளிலிருந்தும் விடுதலை பெறுகிறான்.

# 28

आत्मावभासयत्यको बुद्ध्यदिनीन्दिन्द्रयाण्यपि ।
दीपो घटादिवत्स्वात्मा जडैस्तैर्नावभस्यते ॥

ஆத்மாவபாஸயத்யேகோ
புத்யாதீநீந்த்ரியாண்யபி ।
தீபோ கடாதிவத்ஸ்வாத்மா
ஜடைஸ்தைர்நாவ பாஸ்யதே ॥

ஒருபொருளா மான்மா வொளிர்க்கு மதிமுன்
கருவிகளைத் தீபங் கடாதி - யொருவ
வொளியி லவற்று லொருபோது மான்மா
வொளிர்க்கப் படாதென் றுணர்

[ஸ்ரீ ரமணர்]

दीपे घटादिवत् தீபே கடாதிவத் - விளக்கு, குடமம் முத லியவைகளை (ஒளிரச் செய்வது) போல, एकः आत्मा ஏக: ஆத்மன் - ஆத்மன் ஒன்றே, बुद्ध्यदीनि புத்யாதீநி - புத்தி முதலியவைகளையும், इन्द्रियाण्यापि இந்திரியாண்யபி - இந் திரியங்களையும் கூட, अवभास्यति அவபாஸ்யதி - ஒளிரச் செய்கிறது, जडैः ஜடை: - ஜடப்பொருள்களான, तै தை: - அவைகளால் (அந்த இந்திரியங்களால்) स्वात्मा ஸ்வாத்மா - தன்னுடைய ஆத்மா (ஸ்வசொரூபம்), न अवभास्यते அவபாஸ் யதே - விளக்கப்படுவதில்லை.

கருத்துரை : விளக்குத்தான் குடம் முதலியவற்றுக்கு ஒளி தந்து விளக்கம் பெறச் செய்கின்றது. குடம் முதலி யன விளக்குக்கு ஒளி தருகிறதில்லை. அதே போல ஆத் மாதான் புத்தி முதலிய உறுப்புகளுக்கு இயக்க விளக்கம் தருகிறது. ஜடப்பொருள்களான அவை அதற்கு இருப்போ ஒளியோ தருவதில்லை.

இன்றைய விஞ்ஞானம் தற்கால மனிதனுக்கு எண் ணற்ற வசதிகளைச் செய்து தந்திருக்கிறது. அவற்றில் ஒன்று 'கம்ப்யூட்டர்' எனப்படும் இயந்திரமாகும். இந்தக் கம்யூட்டரைத் தமிழில் 'கணித இயந்திரம்' என்று சொல்லுவார்கள். 'கம்ப்யூட்டர் விஞ்ஞானம்' தற்காலத் தில் வெகுவாக வளர்ச்சியடைந்திருக்கிறது. கம்ப்யூட்டர் செய்யும் வேலைகளைப் பற்றித் தெரிந்துகொண்டால் நாம் மிகவும் பிரமித்துப் போவோம். பல கணிதவியல் நிபுணர்கள் சேர்ந்து மாதக் கணக்காகச் செய்யும் கடின மான கணக்குகளைக் கூட கம்ப்யூட்டர் இயந்திரம் ஒரு சில வினாடிகளிலே செய்து முடித்துவிடும். அமெரிக்கா போன்ற மிகப்பெரிய தேசங்களில் நடைபெறும் பொதுத் தேர்தல்களின் முடிவை வெகு சீக்கிரம் அறிவித்து வரு கிறது கம்ப்யூட்டர். தொலைதூர கிரகங்கள், நட்சத்தி ரங்களின் தூரத்தைத் துல்லியமாகக் கணக்கிடுகிறது. கம்ப்யூட்டர். இது மட்டுமா? ஒரு மனிதனது எதிர்காலத்

தைப் பற்றி ஜோஸ்யம் சொல்ல வல்ல கம்ப்யூட்டர்களும் கண்டுபிடிக்கப் பட்டிருக்கின்றன. இத்தகைய அற்பு தங்களைச் செய்யும் மாபெரும் இயந்திரங்களால் தாமாகச் செயல்பட முடியுமா என்ற கேள்வி எழுகிறது. ஏனெ னில் அவை வெறும் ஜடப்பொருள்களே. அவற்றை இயக் குவது அவற்றின் பின்னுறையும் மனித அறிவாகும். கண்ணுக்குப்புலனாகாத அறிவு கண்ணுக்குப் புலனாகும் இத்தனைப் பொருள்களையும் இயக்குகிறது.

நமது உடலில் பொறிபுலன்கள் செயல்படுகின்றன. ஒருபுறம் மனம் சதா எதிர்காலத்திற்கான திட்டங்களைத் தீட்டிய வண்ணமாயிருக்கிறது. புத்தியானது 'எது நல் லது, எது கெட்டது' என்று பகுத்து அறிதலாகிய செயலைச் செய்து கொண்டிருக்கிறது. கண் பார்க்கி றது. காது கேட்கிறது. இந்தப் பொறிகள், புலன்கள், மனம், புத்தி, யாவும் சுயமாகச் செயல்பட முடியாதவை களாகும். மனம், புத்தி, ஆகியவற்றையும் ஒரு நுண்ணிய கம்ப்யூட்டருடன் ஒப்பிடலாம். கம்ப்யூட்டர் எவ்வளவுதான் நுட்பமானதாயிருந்தாலும் அதனால் சுயமாகச் செயல் பட முடியாதது போன்று, மனம், புத்தி ஆகியவை எத்தகைய அற்புதமான காரியங்களைச் செய்தாலும், அவற்றால் தாமாக இயங்க முடியாது. அவற்றை இயக்க இயக்கி ஒன்று வேண்டும். அதுதான் ஆத்மன். அது தூய அறிவு சொரூபம். இந்தக் கருத்தைத்தான் கேனோ பநிஷதம் மிக அழகாகத் தெரிவிக்கிறது. கண்களின் பார்க்கும் சக்தி புத்தியின் அறியும் சக்தி அனைத்தும் ஆத்மனுடையதாகும். ஆத்மனின் முன்னிலையில் இவை அனைத்தும் இயங்குகின்றன. இவற்றை இயக்குவிப்பது ஆத்மசைதன்யமாகும்.

ஒரு அறைக்குள் பானை, மேஜை, நாற்காலி முதலான பற்பல பொருள்கள் இருக்கின்றன. அவை அனைத் தும் ஜடப்பொருள்கள். அறைக்குள் அவை எல்லாம்

இருந்த போதிலும், உள்ளே வெளிச்சம் இல்லாமல் ஒரே இருட்டாக இருந்தால் ஸ்விட்சைப் போடுகிறோம். அறையைக் கவ்வியிருந்த இருள் அகலுகிறது. அறையிலுள்ள பொருள்கள் நமக்கு நன்கு தெரிகின்றன. பொருள்களை நமக்குத் தெரியவைப்பது விளக்கொளி. இருட்டில் இருக்கும் ஒரு பொருளை விளக்குவதனால்தான் விளக்கு என்ற பெயர் வந்தது. விளக்கினை விளக்க வேறு ஏதாவது தேவையா என்ற கேள்வி எழலாம். விளக்கை விளக்க மற்றொன்று தேவையில்லை. ஏனெனில் அது தன்னைத் தானே விளக்கிக்கொள்ள வல்லது.

விளக்கு இருக்கிறது என்பதற்கு எது சான்று? அதன் ஒளியே சான்று. அந்த ஒளியின் துணை கொண்டே ஏனையப் பொருள்கள் அறியப்படுகின்றன. இங்கே நாம் கவனிக்க வேண்டிய முக்கியமான விஷயம் ஒன்று உண்டு. ஏனையப் பொருள்களை விளக்க விளக்குத்தேவை. ஆனால் விளக்கை விளக்க ஏனைய பொருள்கள் தேவையில்லை. அதுபோல ஆத்மன் அனைத்தையும் உணர்த்தும் ஒன்றே தவிர, ஏனையவற்றால் உணர்த்தப்படும் ஒன்றல்ல. மனம், புத்தி ஆகியவற்றின் உணர்வுகளின் அடிப்படை ஆத்மன். அவற்றால் ஆத்மனை உணர்த்த முடியாது. எனவே தான் மனம், புத்தி இவற்றிற்கெட்டாதது ஆத்மன் என்று சொல்லப்படுகிறது.

## 29

स्वबोधे नान्यबोधेच्छा बोधरूपतयात्मनः ।
न दीपस्यान्यदीपेच्छा यथा स्वात्मप्रकाशने ॥

ஸ்வபோதே நாந்ய போதேச்சா
போதரூபதயாத்மந: ।
ந தீபஸ்யாந்யதீபேச்சா
யதா ஸ்வாத்ம பிரகாசனே: ॥

விளக்கி னுருவை விளக்கிட வேறு
விளக்கை விரும்பா விதம்போல் - விளங்கு
மறிவுருவா மான்மா வறிந்திடத் தன்னைப்
பிறிதறிவு வேண்டப் பெருது.

[ஸ்ரீ ரமணர்]

दीपस्य தீபஸ்ய - விளக்குக்கு, यथा யதா - எப்படி, स्वात्म प्रकाशने ஸ்வாத்ம ப்ரகாசநே - தன்னை வெளியிட் டுக்கொள்ள), अन्य दीच्छा அன்ய தீபேச்சா - வேறு ஒரு விளக்கின் தேவை, न ந - இல்லையோ, அப்படியே, आत्मनः ஆத்மந: - ஆத்மாவுக்கும், बोधरूपया போதரூபதயா - ஞான ஸ்வரூபியாக இருக்கும் காரணத்தால், स्वात्म प्रकाशने ஸ்வாத்ம ப்ரகாசநே- ஆத்ம பிரகாசத்தில், आन्य बोधेच्छा அந்ய போதேச்சா - மற்ற அறிவின் இச்சை, न ந - இல்லை.

கருத்துரை : விளக்கைத் தெரிந்துகொள்ள வேறு விளக்கு வேண்டாம். ஆத்ம ஞானம் பெற்றபிறகு அதை அறிய என்று வேறு ஒன்றும் வேண்டாம். அது அறிவு மயம் - ஒளி மயம், அதற்கு வேறு அறிவு விளக்கம் ஒன்றும் தேவையில்லை.

ஒரு நாடக அரங்கு. ஆயிரக்கணக்கில் மக்கள் நாடகத் தைக்காண அங்கே குழுமியிருக்கிருர்கள். நாடக மேடை கண்ணைப் பறிக்கும் வண்ண விளக்குகளால் அலங்கரிக் கப்பட்டிருக்கிறது. அந்த மேடையின் ஒரு புறம் பல்வேறு இசைக்கருவிகளை · இசைக்கவல்ல இசை வல்லுனர்கள் தங்கள் தங்கள் இசைக் கருவிகளுடன் அமர்ந்திருக் கின்றனர். திடீரென்று திரை அகல்கிறது. நடிகர்கள் நேர்த்தியான உடையில் மேடையில் தோன்றுகிருர்கள். பல்வேறு நடிகர்கள் அடுக்கடுக்காய் வரும் காட்சிகளில் திறம்பட நடித்துப் பார்ப்போரது பாராட்டைப் பெறுகின் றனர். ஒரு புறம் அந்த நாடகத்தின் டைரக்டர் அந்த நாடகத்தை டைரக்ட் செய்து கொண்டிருக்கின்ருர்.

நாடகம் முடிகிறது. மக்கட் கூட்டம் கலைகிறது. நடிகர்கள் சென்று விடுகிறார்கள். அந்த நாடக அரங்கில் இப்பொழுது ஒருவரும் இல்லை. ஆனால் நாடகத்திற்கு முன்பும், நாடகத்தின் இடையிலும் எந்த விளக்குகள் அந்த மேடையில் பிரகாசித்துக் கொண்டிருந்தனவோ, எந்த விளக்குகளின் ஒளியில் அந்த நாடகம் நிகழ்கிறதோ, அந்த விளக்குகள் நாடகம் முடிந்து மக்கள் அனைவரும் கலைந்து போன பின்பும் பிரகாசித்துக் கொண்டிருக்கின்றன. அந்த நாடகம் அந்த விளக்குகளின் ஒளியின்றி இருட்டில் நடந்திருக்க முடியாது. அந்த நாடகத்தின் அனைத்துக் காட்சிகளையும் மக்களுக்கு விளக்கிக் காட்டியவை அந்த விளக்குகள் என்றாலும், அந்தக்காட்சிகளுக்கும் அந்த விளக்குகளுக்கும் எந்தத் தொடர்பும் கிடையாது. அந்த விளக்குகளை விளக்க, அதாவது விளக்குகள் அங்கே பிரகாசித்துகொண்டிருக்கின்றன என்பதை விளக்கிக் காட்ட நாடகத்தின் காட்சிகளோ நடிகர்களோ வேறு யாரோ தேவையில்லை. அனைத்தையும் விளக்கிக் காட்டிய அந்த விளக்குகளை விளக்க மற்றொன்று தேவையில்லை.

மேற்காணும் உதாரணத்தில் காணப்படுவது போன்று மனிதனுள் ஒளிர்கின்ற ஆத்ம சைதன்யத்தின் துணை கொண்டு மனம், புத்தி, பொறி, புலன்கள் யாவும் செயல் படுகின்றன. ஆத்மன் அறிவு சொரூபம். அதை அறிவிக்க வேறு எதனுடைய உதவியும் தேவையில்லை. நாடகத்தில் நடிக்கப்படும் கொலை, கொள்ளை போன்ற காட்சிகள் எவ்விதம் அந்தக் காட்சிகளைக் காணப் பிறருக்கு உதவி செய்யும் விளக்குகளைச் சாராவோ அதேபோல மனம், சரீரம், புத்தி ஆகியவற்றின் எந்தவித செயலும் ஆத்மனைச் சாராது. ஏனெனில் ஆத்மனுடைய அடிப்படைத்தன்மை வேறு. சரீரம், மனம், புத்தி ஆகியவற்றின் அடிப்படைத் தன்மைகள் வேறு. உலகிலுள்ள மலை, காடு, கடல், நதி போன்றவற்றைப் பார்க்கத் துணையாயிருப்பது சூரிய ஒளி. சூரியனுடைய பிரகாசத்தில் ஏனைய அனைத்தும்

கடபுலனாகின்றன. ஆனால் சூரியனை விளக்கிக் காட்ட வேறு ஏதாவது ஒளி தேவையா? தேவை இல்லை. ஏனெனில் சூரியனே ஒளிமயம். அது தன்னைத் தானே யாண்டும் விளக்கிக் கொண்டிருக்றது.அது போல் ஆத்மன் தன்னைத் தானே விளக்கவல்லது என்பதால் அதை விளக்க வேறு ஒன்றும் தேவையில்லை.

மனிதன் தன்னைச் சூழ்ந்திருக்கும் அறியாமையைப் படிப்படியாய் அகற்றினால் இறுதியில் அறிவு மயமான ஆத்ம சொரூபம் ஆகிவிடலாம் என்பதை இந்த சுலோகம் விளக்குகிறது.

## 30

निषिघ्दय निखिलोपाधीन् नेति नेतीति वाक्यतः ।
विद्यादैक्यं महावाक्यैजीवात्म परमात्मनोः ॥

நிஷித்ய நிகலோ பாதீந்
நேதி நேதீதி வாக்யத: ।
வித்யா தைக்யம் மஹா வாக்யர்
ஜீவாத்ம பரமாத்ம நோ: ॥

நேதி நேதி வாக்கினா னீக்கி யுபாதியெலா
மீதியாஞ் சீவான்மா மீதிலா - வாதியா
மப்பரமான் மாக்களி னைக்கியா வாக்கியங்கள்
செப்புவ தோர்ந்து தெளி.

[ஸ்ரீ ரமண

निखिल நிகில - எல்லா, उपाधीन् உபாதீன் - உபாதிக ளையும், नेति नेति इति நேதி நேதி இதி - "இது இல்லை. இது இல்லை" என்கிற, वाक्यतः வாக்யத: - வாக்கியத்தி னால், निषिद्य நிஷித்ய - நிவேதம் செய்துவிட்டு (இல்லை என்று ஒதுக்கிவிட்டு), महावाक्यैः மஹாவாக்யை: - மஹா வாக்கியங்களினால் (உதவியினால்), जीवात्म परमात्मनोः ஜீவாத்ம பரமாத்மநோ: - ஜீவாத்ம பரமாத்மாவின், ऐक्यं ஐக்யம் - ஒன்றென்ற தன்மையை, विद्यात् வித்யாத் - அறிந்து கொள்க.

கருத்துரை : உடலுறைகளான உபாதிகளை எல்லாம் இது இல்லை' என்று பேசும் வாக்கியப்படி ஒதுக்கிவிட்டு வேத மஹா வாக்கியங்களின் கருத்தான ஜீவாத்மன் பரமாத்மன் ஒன்றே என்ற உண்மையை அறிந்துகொள்ள வேண்டும்.

இருட்டினில் இருந்து கொண்டு கண்ணுக்கு ஒன்றும் புலப்படவில்லை என்று ஒருவன் புகார் செய்கிறான். அது இருட்டின் தவறா அல்லது அங்கே உள்ள பொருள்களின் தவறா? இரண்டினுடைய தவறும் அல்ல. அப்படிப் புகார் கூறுபவனுடைய தவறாகும். பொருள்களை இருட்டினில் பார்க்க முடியாது. பொருள்களைப் பார்க்க ஒளி வேண் டும். ஆக இருள் அகன்றால் அதாவது ஒளி வந்தால்தான் பொருள்களை உள்ளபடி பார்க்கலாம். இருளும் ஒளியும் நேர் எதிரிடை. பொருள்களைப் பார்ப்பதற்குத் தடையாயிருந்த இருள் நீங்குகின்ற பொழுது அல்லது நீக்கப்படுகின்ற பொழுது உள்ளது உள்ளபடி தோன்றுகிறது.

ஜீவன் உண்மையில் பரமாத்ம சொரூபம்தான். ஆனால் அந்த உண்மையை மறைக்கின்ற விதத்தில் மனிதனிடத்தில் அறியாமையாகிய பல திரைகள் இருக் கின்றன. அந்தத் திரைகளைப் படிப்படியாக ஒவ் வொன்றாக அகற்றினால் இறுதியில் அறியாமை அறவே அகன்று உண்மை அறிவு கிட்டும்.

கடபுலனாகின்றன. ஆனால் சூரியனை விளக்கிக் காட்ட வேறு ஏதாவது ஒளி தேவையா? தேவை இல்லை. ஏனெனில் சூரியனே ஒளிமயம். அது தன்னைத் தானே யாண்டும் விளக்கிக் கொண்டிருக்றது.அது போல் ஆத்மன் தன்னைத் தானே விளக்கவல்லது என்பதால் அதை விளக்க வேறு ஒன்றும் தேவையில்லை.

மனிதன் தன்னைச் சூழ்ந்திருக்கும் அறியாமையைப் படிப்படியாய் அகற்றினால் இறுதியில் அறிவு மயமான ஆத்ம சொரூபம் ஆகிவிடலாம் என்பதை இந்த சுலோகம் விளக்குகிறது.

## 30

निषिध्दय निखिलोपाधीन् नेति नेतीति वाक्यतः ।
विद्यादैक्यं महावाक्यैजीवात्म परमात्मनोः ॥

நிஷித்ய நிகலோ பாதீந்
நேதி நேதீதி வாக்யத: ।
வித்யா தைக்யம் மஹா வாக்யர்
ஜீவாத்ம பரமாத்ம நோ: ॥

நேதி நேதி வாக்கினா னீக்கி யுபாதியெலா
மீதியாஞ் சீவான்மா மீதிலா - வாதியா
மப்பரமான் மாக்களி னைக்கியா வாக்கியங்கள்
செப்புவ தோர்ந்து தெளி.

[ஸ்ரீரமணர்]

निखिल நிகில - எல்லா, उपाधीन् உபாதீன் - உபாதிகளையும், नेति नेति इति நேதி நேதி இதி - "இது இல்லை. இது இல்லை" என்கிற, वाक्यतः வாக்யத: - வாக்கியத்தினால், निषिद्य நிஷித்ய - நிவேதம் செய்துவிட்டு (இல்லை என்று ஒதுக்கிவிட்டு), महावाक्यैः மஹாவாக்யை: - மஹா வாக்கியங்களினால் (உதவியினால்), दीवात्म परमात्मनोः ஜீவாத்ம பரமாத்மநோ: - ஜீவாத்ம பரமாத்மாவின், ऐक्यं ஐக்யம் - ஒன்றென்ற தன்மையை, विद्यात् வித்யாத் - அறிந்து கொள்க.

கருத்துரை : உடலுறைகளான உபாதிகளை எல்லாம் இது இல்லை' என்று பேசும் வாக்கியப்படி ஒதுக்கிவிட்டு வேத மஹா வாக்கியங்களின் கருத்தான ஜீவாத்மன் பரமாத்மன் ஒன்றே என்ற உண்மையை அறிந்துகொள்ள வேண்டும்.

இருட்டினில் இருந்து கொண்டு கண்ணுக்கு ஒன்றும் புலப்படவில்லை என்று ஒருவன் புகார் செய்கிறான். அது இருட்டின் தவறு அல்லது அங்கே உள்ள பொருள்களின் தவறு? இரண்டினுடைய தவறும் அல்ல. அப்படிப் புகார் கூறுபவனுடைய தவறாகும். பொருள்களை இருட்டினில் பார்க்க முடியாது. பொருள்களைப் பார்க்க ஒளி வேண்டும். ஆக இருள் அகன்றால் அதாவது ஒளி வந்தால்தான் பொருள்களை உள்ளபடி பார்க்கலாம். இருளும் ஒளியும் நேர் எதிரிடை. பொருள்களைப் பார்ப்பதற்குத் தடையாயிருந்த இருள் நீங்குகின்ற பொழுது அல்லது நீக்கப்படுகின்ற பொழுது உள்ளது உள்ளபடி தோன்றுகிறது.

ஜீவன் உண்மையில் பரமாத்ம சொரூபம்தான். ஆனால் அந்த உண்மையை மறைக்கின்ற விதத்தில் மனிதனிடத்தில் அறியாமையாகிய பல திரைகள் இருக்கின்றன. அந்தத் திரைகளைப் படிப்படியாக ஒவ்வொன்றாக அகற்றினால் இறுதியில் அறியாமை அறவே அகன்று உண்மை அறிவு கிட்டும்.

இரசாயன சாஸ்திரத்தில் சோதனைக்குக் கொடுக்கப் பட்ட ஒரு இரசாயனக் கூட்டுப் பொருளைக் கண்டு பிடிக்கப்பல முறைகள் உள்ளன. அவற்றில் ஒன்று பண் பறி பகுப்பு முறை அதாவது Qualitative Analysis என்ப தாகும். பல இரசாயன சோதனைகளைச் செய்து அந் தச் சோதனைகளிலிருந்து கிடைக்கும் முடிவுகள் மூலம் கொடுக்கப்பட்ட பொருள் இன்னது என்று அறிந்துகொள் வதே அந்த முறையாகும். அதில் சில சோதனைகள் எதிரிடையாகவும் சில நேரிடையாகவும் விளைவு தரும். எதிரிடை முடிவுகளின் மூலம் கொடுக்கப்பட்ட பொருள் இது அல்ல, இதுவல்ல, என்று தீர்மானிக்கப்படும். இறு தியில் ஒரு குறிப்பிட்ட சோதனையில் நேரிடைய முடிவு உண்டாகுமேயாகில் கொடுத்த பொருள் இதுதான் என் பது தெரியவரும்.

ஆன்மாவைப் பற்றிய ஆராய்ச்சியிலும் சாதகன் தனது மனம், புத்தி முதலிய பலவற்றைப்பற்றி ஆராய் கிறான். ஆன்மா உடலா, மனமா, புத்தியா என்று ஒவ் வொன்றாக அவன் ஆராய்கிறான். அந்த ஆராய்ச்சிகளின் பொழுது அவனுக்கு எதிரிடை முடிவுகள் கிடைக்கின்றன. எனவே ஆன்மா உடல் அல்ல, மனம் அல்ல, புத்தி அல்ல என்று நீக்கி விடுகிறான். இவ்விதம் அனைத்தையும் 'இது அல்ல', என்று நீக்கிவிட்ட பிறகு இறுதியில் எஞ் சுவது ஆன்மா தான். அந்த நிலையில் 'தானே ஆத்ம சொரூபம்' அதாவது 'தானே ஆத்மா', 'ஆன்மாவே தான்' என்ற அறிவு கிட்டுகிறது. அந்த நிலையில் ஜீவாத்ம பரமாத்ம ஐக்யம் ஏற்படுகிறது. அதுவே அனைத்திலும் உயர்ந்த நிலை. அந்த நிலையை அடைந்தவன் ஆத்ம ஞானி அல்லது பிரம்மஞானி எனப்படுகின்றான். அவனே பெறற்கரிய பெருநிலையை அடைந்தவன்.

வேதங்களில் காணப்படும் ஆத்மனைப் பற்றிய விரி வான ஆராய்ச்சிகளின் தொகுப்பாக நான்கு மஹாவாக்

கியங்கள் அமைகின்றன. அவற்றைப் பற்றிய சிறு விளக்கத்தைக் கீழே காண்போம்.

மஹா வாக்கியங்கள் நான்கு. அவையாவன:
1) ப்ரக்ஞானம் பிரம்ம (சுத்த ஞானமே பிரம்மம்)
2) தத் த்வம் அஸி (நீ அதுவாக இருக்கிறாய்)
3) அயம் ஆத்மா பிரம்ம (இந்த ஆத்மா பிரம்மமே)
4) அஹம் பிரம்மாஸ்மி (நான் பிரம்மமாக இருக்கிறேன்.)

வேதங்கள் நான்கு. அவற்றில் காணப்படும் வாக்கியங்கள் அனைத்துமே மஹா வாக்கியங்கள்தான். இருப்பினும் ஒவ்வொரு வேதத்திலிருந்தும் ஒவ்வொரு வாக்கியத்தைப் பொறுக்கி எடுத்து அவற்றை வேதங்களின் சாரமாக நான்கு மஹா வாக்கியங்கள் எனக் குறிப்பிடுகின்றார்கள். அவற்றின் பொருள் மேலே அடைப்புக் குறியினுள் தரப்பட்டிருக்கிறது.

முதலாவது மஹாவாக்கியம் 'ப்ரக்ஞானம் பிரம்ம' என்பதாகும். இது ரிக்வேதத்தில் அயித்ரேய உபநிடதத்தில் காணப்படுகிறது. மேலாம் பரம்பொருளைப் பற்றிய ஒரு சுருக்கமான விளக்கத்தை இந்த மஹா வாக்கியம் தருகிறது. எல்லா ஜீவராசிகளிலும் பொதுவாக இருப்பது உணர்வு. தனி மனிதனிடம் இருக்கும் உணர்வாகிய ஆத்மனும் இயற்கை அனைத்திற்கும் அடிப்படையாயமையும் பேருணர்வான பிரம்மமும் ஒன்றே என்பது இதன் கருத்து. அதாவது தன்னை ஒருவன் உணர்ந்தால் அவன் பிரம்மத்தை உணர்ந்தவனாகிறான் என்று இந்த மகாவாக்கியம் கூறுகிறது.

இரண்டாவது மஹாவாக்கியம் 'தத் த்வம் அஸி' ஸாம வேதத்தில் சாந்தோக்கிய உபநிடதத்தில் காணப்படும் இந்த மகாவாக்கியம் "எங்கும் நிறைந்த பரம் பொருளான பிரம்மமாகவே ஜீவாத்மனான நீ இருக்கிறாய்" என்று ஜீவனும் பிரம்மமும் அடிப்படையில் ஒன்றுதான்

என்ற உண்மையைப் புகட்டுகிறது. இதிலே 'தத்' எ பது பிரம்மத்தையும், 'த்வம்' என்பது பொறி, புலன்ச பஞ்ச கோசங்களுக்கும் அப்பாற்பட்டு விளங்கும் ஜீவனி இருக்கும் ஆத்மனையும் குறிக்கிறது. இந்த மஹாவா கியம் உபதேச வாக்கியம் எனப்படுகிறது. ஏனெனி சாதகனுக்கு ஜீவப்பிரம்ம ஒற்றுமையைப் பற்றிய மு வான உண்மையை இது உறுதியாகக் கூறுகிறத இங்கு நாம் கவனிக்க வேண்டிய பகுதி ஒன்று உண் சாதாரண நிலையில் அறியாமையால் சூழப்பட்டிருக்கு ஜீவாத்மனும் பிரம்மமும் ஒன்று என்பது இதன் பொ ளல்ல. அறியாமை அகன்ற ஜீவனும் பிரம்மமும் ஒன் என்பதே அதன் கருத்து.

'அயம் ஆத்மா பிரம்ம' என்பது அதர்வண வேதத்தி மாண்டூக்ய உபநிடதத்தில் வருகின்ற மகாவாக்கியம கும். இது 'அப்பியாச வாக்கியம்' எனப்படுகிறது. 'அய ஆத்மா' என்பது நம்முள்ளிருக்கும் ஆத்மன் எனப்பொ ருள் படுகிறது. நம்மை உயிர்ப்பிக்கும் ஆத்ம சக்தியே அண்டத்தையெல்லாம் உயிர்ப்பிக்கும் பிரம்மசக்தியாகவு விளங்குகிறது. சாதகன் இடைவிடாது தான் உ மையில் பிரம்மமே என்பதை நினைவிலிருத்த வேண்டு என்பது இந்த மகாவாக்கியத்தின் உட்பொருள்.

'அஹம் பிரம்மாஸ்மி' என்ற நான்காவது மகா வா கியம் யஜுர்வேதத்தில் பிரகதாரண்யக உபநிடதத்தி காணப்படுகிறது. இது 'அனுபவ வாக்கியம்' எனப்படு றது. பல்வேறு கடினமான பயிற்சிகளின் இறுதியி பெருநிலையை அடைந்த சாதகன் தானே பிரம்மம் எ உணர்கின்றான்.

இந்த மகாவாக்கியங்களின் மூலம், "ஜீவாத்மன் உட அல்ல, மனம் அல்ல, புத்தி அல்ல, பஞ்சகோசங்கள் அல் இன்னும் இவை போன்ற எந்தவித உபாதிகளுமல் இவற்றையெல்லாம் தாண்டி, ஆனால் இவை அனை

திற்கும் அடிப்படையாக அமையும் ஆத்ம சொரூபமே அது. அந்த ஆத்மாதான் எல்லாவற்றினுள்ளும் இயங்குகிறது. அதுவே பரமாத்மன்" என்று வேதாந்த சாரம் புகட்டுகிறது.

# 31

आविद्यकं शरीरादि दृश्यं बुदबुदवत् क्षरम् ।
एतद्विलक्षणं विद्यादहं ब्रह्मेति निर्मलम् ॥

ஆவித்யகம் சரீராதி
த்ருச்யம் புத்புதவத் க்ஷரம் ।
ஏதத் விலக்ஷணம் வித்யாதஹம்
ப்ரஹ்மேதி நிர்மலம் ॥

அவித்தையா லானவை யாக முதற் காணு
மிவை குமிழி போலபழி வெய்து - மிவற்றி
ளயவா மமல வகம்பிரம் மாமென்
றயராம லென்று மறி.

[ஸ்ரீ ரமணர்]

आविद्यकं அவித்யகம் - அவித்தையால் பெற்ற, शरीरादि சரீராதி - சரீரம் முதலிய दृश्यं த்ருச்யம் - காட்சிப் பொருளுலகம் எல்லாம், बुदबुदवत् புத்புதவத் - நீர்க்குமிழிகள் போல, क्षरं க்ஷரம் - அழியக்கூடியது, एतत् ஏதத் - இதற்கெல்லாம், विलक्षणं விலக்ஷணம் - மாறுபட்டதாக, अहं அஹம் - நான், निर्मलं நிர்மலம் - நிர்மலமான, ब्रह्मेति ப்ரஹ்மேதி - பிருமமம் என்று, विद्यात् வித்யாத் - அறிந்துகொள்க.

கருத்துரை : தூல் உடல் முதல் அவித்தை வரை புலன்படு உலகம் பூராவுமே அழியக்கூடியது. அதற்கு

எல்லாம் அப்பாற்பட்ட 'நானே' நிர்மலமான பிரம்மம் என்று அறிதல் வேண்டும்.

ஒரு மனிதன் தள்ளாடித் தள்ளாடித் தனியே நடந்து செல்கிறன். அந்த இடத்திலே வேறு யாருமேயில்லை. அவன் நடந்து செல்வது கார் செல்லும் தார்ப்பாதை அல்ல. ரயில் செல்லும் தண்டவாளப் பகுதி. அவனைப் பார்த்தால் வாழ்க்கையில் வெறுப்படைந்தவனைப் போலத் தென்படுகிறன். தண்டவாளத்தின் மத்தியிலே தன்னை மறந்து அவன் சென்று கொண்டிருக்கும் அந்த வேளையிலே சொல்லி வைத்தாற்போன்று பயங்கரவேகத்தில் அவனுக்குப் பின்புறத்தேயிருந்து எக்ஸ்பிரஸ் ரயில் ஒன்று காற்றைக் கிழித்துக் கொண்டு வேகமாக ஓடி வருகிறது. இதோ அவனுக்கும் ரயிலிற்கும் இடையேயுள்ள இடைவெளி சுருங்கிக்கொண்டே வருகிறது. சுழன்று சுழன்று வீசும் சுழற்காற்றில் ரயிலின் விசில் சப்தம் அவனுடைய காதில் விழவில்லை போலும்! ஐயோ என்ற பயங்கரம்! அவன் கதி என்ன ஆயிற்று? நம்மையும் மறந்து, சுற்றுப்புறத்தையும் மறந்து 'வீல்' என்று கத்திவிடுகிறேம். நாம் கத்திய சமயம் பார்த்து விளக்குகள் எரிகின்றன. திரை விழுகிறது. பிறகுதான் நமக்கு நாம் பார்த்தது சினிமா, நாம் அமர்ந்திருப்பது சினிமாக் கொட்டகை என்ற உணர்வு வருகிறது. அருகில் அமர்ந்திருப்போர் நாம் கத்தியதைக் கேட்டு நம்மைப் பார்ப்பதை உணர்ந்து நாம் வெட்கத்தோடு தலையைக் குனிந்து கொள்கிறேம்.

பார்ப்பது சினிமா, தெரிவது வெறும் திரையில் என்று அறிந்தும்கூட அதைப் பார்க்கின்ற நேரத்திலே அந்தக் காட்சியுடன் நம்மை நாம் ஒன்றுபடுத்திக்கொள்கிறேம். பிறகு உண்மை நிலையை உணர்ந்தவுடன் நமது அறியாமை நமக்குப் புலப்படுகிறது. அது குறித்து நாம் வெட்கம் அடைகிறேம். இது ஒரு சாதாரண நிகழ்ச்சி.

மேற்காணும் சினிமா நிகழ்ச்சி நமக்கு வாழ்க்கை முழு வதுக்குமே பொருந்தும். ஒரு சில மணி நேரங்களில் சினி மாக் காட்சியுடன் ஒன்றியிருப்பது போலே, அறியாமையில் மூழ்கியவர்களாக நாம் வாழ்வு முழுவதுமே உண்மையை உணராது பொய்ப் பொருள்களின் பின்னே அலைந்து திரிகிறோம். உலகம் பலவாக நமக்குத் தென்படுகிறது. சரீ ரம், மனம், புத்தி ஆகியவை செயல்படுவதன் மூலமாகவே நாம் உலகை உணர்கிறோம். தோன்றுவன அனைத்தும் மாறும் தன்மையவை, மறையும் இயல்பினவை. தோற்றம் தருவன யாவும் என்றோ ஒருநாள் தோன்றியவை. அந் தக் காரணத்தால் அவை என்றோ ஒரு நாள் மறையவும் செய்யும். ஏனெனில் அதுவே இயற்கை நியதி. தோன் றவும், மறையவும் செய்யும் எந்தப்பொருளும் உண்மைப் பொருளாக இருக்க முடியாது. ஏன்? உண்மைப் பொருள் நிரந்தரப் பொருள். அது என்றும் இருப்பது; ஆதியும் அந்தமும் இல்லா அரும் பொருள் அது. அது சச்சிதா னந்தப் பரம்பொருள். அதுவே அழியாத அமர ஆத்மன்.

மனிதன் அடிப்படையில் ஆத்ம சொரூபம். அவன் இந்த சரீரம் அல்ல. மனம் அல்ல, புத்தி அல்ல. எதற்கும், எவருக்கும் ஒருவன் தருகின்ற பதிலான 'நான்' 'நான்' என் பது இந்த சரீரம், மனம், புத்தி ஆகிய அனைத்தையும் கடந்து நிற்பதாகும். "நான் உண்மையில் அழியாத, அமர, நித்திய, சுத்த, புத்த, முக்த ஆத்மன்" என்று உணர்வதன் மூலம் மனிதன் பிரம்மனாகிறான்; பரம் பொருளாகிறான்.

இந்த சுலோகத்தில் மனிதனும் அவன் வாழும் உல கமும் மற்றும் அவனுக்குக் கட்புலனாகின்ற அனைத்து சூரிய, சந்திர, நட்சத்திர மண்டலங்களும் நீர் மேல் தோன் றும் நீர்க் குமிழிகளோடு ஒப்பிடப்படுகின்றன. அதில் பெரிய தத்துவம் ஒன்று அடங்கியுள்ளது. நீர்க்குமிழி நீரில் தோன்றுகிறது. நீரில் இருக்கிறது. நீரில் மறை கிறது. நீர் இன்றி, நீர்க்குமிழிக்குத் தனி வியக்தித்வம்

கிடையாது. அது போல் அனைத்து ஜீவராசிகள் மற்றும் அண்டசராசரங்கள் யாவும் பரப்பிரம்ம சொரூபமாகிய ஆத்மனில் தோன்றி, அதிலே நிலை பெற்று அதிலே லயமாகின்றன. உண்மை சாதகன் ஒருவன் வேறுபாடுகளைக் கொண்ட உலகினில் வாழ்வதற்கிடையில், அனைத்தும் ஆத்ம சொரூபமே என்ற எண்ணத்தில் நிலைபெறுவானேயாகில் அவன் வாழ்வாங்கு வாழ்பவனாவான்.

ஆத்மனை உணரும் முயற்சியில் ஒருவன் ஈடுபடுகையில் சரீரம், மனம், புத்தி மற்றும் உலகம் போன்றவற்றின் மாறும், மறையும் தன்மைகளைப் பற்றித் தெளிவாகப் பகுத்தறிய வேண்டும். பிறகு, நிலையில்லாதவற்றைப் படிப்படியாக ஒதுக்கித் தள்ளி நிலையுள்ள வஸ்துவான ஆத்மனை உணரவேண்டும். "நான் மனம் அல்ல, நான் சரீரம் அல்ல, நான் என் சரீரம், மனம் மற்றும் புத்திக்கு எட்டும் எதுவும் அல்ல. இவற்றிற்கெல்லாம் அப்பாற்பட்ட நிர்மல ஆத்மன் நான்" என்று ஒருவன் உணரவேண்டும்.

## 32

देहान्यत्वान्न मे जन्मजर्श्यलयादय : ।
शब्दादिविषयैस्सङ्गो निरिन्द्रियतया न च ॥

தேஹாந் யத் வாந்நமே ஜன்ம ஜராகார்ச்யலயாதய:
சப்தாதி விஷயை: ஸங்கோ நிரிந்த்ரியதயா ந ச

உடலுக்கு வேறெனக் குண்டாதன் மூத்த
லொடு குன்றல் சாவுமுத லொன்று - படர்ந்த
லொலிமுற் புலன்களோ டொன்றலெனக் கின்றே
யலன் பொறிகள் யானதலால்.

[ஸ்ரீரமணர்]

देहान्यत्वात् தேஹாந்யத்வாத் - தேகத்தையும் மீறி அப்பாற்பட்டவன் என்றதனால், मे மே - எனக்கு जन्म ஜன்ம - பிறவி, जरा ஜரா - கிழத்தன்மை, कार्श्य கார்ச்ய - ஆற்றலழிவு, लय லய - சாவு, आतयः ஆதய: - முதலியன, न ந - கிடையாது. निरिन्द्रियतया நிரிந்த்ரியதயா - பொறிகள் (இந்திரியங்கள்) இல்லாத காரணத்தால், शब्दातिविषयैः சப்தாதி விஷயை - ஒலி முதலிய அவற்றுடன் (பொருள்களுடன்) सङ्गः च சங்க: ச சேர்க்கையும், न ந - கிடையாது.

கருத்துரை : உடலுக்கு அப்பாற்பட்டவன் 'நான்' என்றதனால் 'நான்' என்கிற ஆத்மனுக்குப் பிறப்பு, இறப்பு, நோவு, நொடி ஒன்றும் கிடையாது. அவை எல்லாம் இந்த உடலுக்கே உரியன. இந்திரியங்கள் அல்ல என்பதனால் ஒலி, நாற்றம் முதலான உணர்வுகளுடனும் ஆத்மனுக்கு எவ்வித உறவும் கிடையாது.

ஒரு பொருளின் தன்மையைப் பற்றி விளக்கம் கூறச் சான்றோர்கள் இரு முறைகளைக் கையாள்வர். ஒன்று நேரிடை முறை. அதாவது, இந்தப் பொருள் இத்தகையது, இதைப் போன்றது என்று நேரிடை முறையில் விளக்குவது. மற்றொரு முறை எதிரிடை முறை. அதாவது 'இது அல்ல', 'இது அல்ல' என்று ஒவ்வொன்றாகக் கழித்துக் கட்டி கடைசியில் 'இந்தப் பொருள் இதுதான்' என்று வலியுறுத்துவது. சம்ஸ்கிருதத்தில் இதை 'அஸ்தி' அதாவது இருக்கிறது. 'நேதி' (இல்லை) என்ற பதங்களால் குறிப்பிடலாம். இந்த சுலோகத்திலும் இனி வர இருக்கின்ற இன்னும் சில சுலோகங்களிலும் ஆத்மன் "இது அல்ல, அது அல்ல" என்று குறிப்பிடப்படுகின்றது.

முந்திய சுலோகங்களில் புற உலகப்பொருள்களிலிருந்து ஆத்மன் வேறுபட்டது என்று விவரமாகத் தெரிவிக்கப்பட்டது. புறஉலகப் பொருள்கள் யாவும் மாறும் தன்மையன, தோன்றி மறையும் தன்மையன, அழியும் தன்மையன, ஆனால் ஆத்மன் எவ்வித மாற்றத்திற்கும்

உட்படாத பரம் பொருள் என்பதால் அவைகளிலிருந்து முற்றிலும் வேறுபட்டது என்ற கருத்து பல்வேறு உதாரணங்களின் மூலம் எடுத்துக்கூறப்பட்டது. இந்த சுலோகத்திலும் இதற்கு அடுத்த சுலோகத்திலும் மனித னது பஞ்சகோசங்களிலிருந்து எவ்விதம் ஆத்மன் வேறு பட்டது என்பது விளக்கிக் கூறப்படுகிறது.

பஞ்ச கோசங்கள் எவை என்று ஏற்கனவே முந்தைய சுலோகங்களில் விரிவாகக் கூறப்பட்டிருக்கிறது. பஞ்ச கோசங்களில் முதலாவதாக அமைவது அன்னமய கோசம். அன்னமய கோசத்தில் உடலும் பஞ்ச இந்திரியங்களும் அடங்குகின்றன. ஆத்மன் இவை அல்ல என்று இந்த சுலோகத்தில் கூறப்படுகின்றது.

இந்த உடலின் தன்மைகளைப் பற்றி நாம் நன்கு அறிவோம், இந்த, உடல் எத்தகையது? அது பிறக்கும், வளரும், நோய்வாய்ப்படும், தேயும், அழியும். உணவினால் ஆவது இவ்வுடல். உணவு இன்றேல் உடல் நிலைக்காது. புலன்கள் செயல்படமாட்டா. உடல் பருக்கும் அல்லது மெலியும். ஒரு சமயம் யானைக்குட்டி போலத் தோற்றம் தருபவன் மற்றொரு சமயம் ஒட்டி உலர்ந்து துரும்பெனக் காட்சி தருகிறான். ஒரு காலத்தில் நல்ல கண் பார்வையைப் பெற்று விளங்கியவன் மற்றொரு காலத்தில் பார்வை அற்ற குருடனாகக் காட்சி தருகிறான். எந்த வேளையில் எவ்விதத் தாக்குதலுக்கு உடலும் இந்திரியங்களும் ஆளா கும் என்று யாராலும் சொல்ல முடியாது. இத்தனை மாற்றங்களும் அன்னமய கோசமாய் அமைகின்ற உட லுக்கும் இந்திரியங்களுக்கு மட்டுமே அல்லாது, அவற்றின் பின் உறையும் உண்மையான ஆத்மனுக்கல்ல. அந்த மாற்றங்கள் ஆத்மனை ஒன்றும் செய்யமாட்டா. ஏனெ னில் மாற்றத்திற்கு உட்படாத, உட்படுத்த முடியாத அந்த ஆத்மனை அடிப்படையாகக் கொண்டுதான் இத்தனை மாற்றங்களும் நிகழ்கின்றன. சுழல்கின்ற சக்கரத்திற்குச்

சுழலாத அச்சு ஒன்று வேண்டுமல்லவா? அது போல் மாற்றங்களுக்கு அடிப்படையாக மாருத பொருள் ஒன்று வேண்டும். அதுதான் ஆத்மன். இந்தக் காரணத்தினால் தான் வேதாந்தத்தில் அடிக்கடி இந்த ஆத்மனானது கொல்லன் பட்டறையில் கொல்லன் உலோகத்தை அடித்து நீட்டிப் பல்வேறு உருவங்களாக ஆக்கப் பயன்படுத்தும் 'கூட'த்துடன் ஒப்பிட்டுக் கூறப்படுகிறது. எத்தனையோ வடிவங்ளைச் சமைக்க அந்தக் 'கூடம்' பயன்பட்டாலும், அந்த உலைக்களத்தில் எவ்விதமான மாற்றமும் ஏற்படு வதில்லை. அது போல் உடலிடத்தும் புலன்களிடத்தும் எத்தனை மாற்றங்கள் ஏற்படினும் அவற்ருல் ஆத்மன் எவ்விதகத்திலும் பாதிக்கப்படுவதில்லை.

நாம் உட்கார்வதற்காக நாற்காலி ஒன்றைப் பயன்ப டுத்துகிறோம். ஒரு நாள் அகஸ்மாத்தாக அந்த நாற்காலி யினுடைய கால் ஒன்று ஒடிந்துபோகின்றது. நாற்காலி யின் கால் ஒடிந்து போய்விட்டது என்பதற்காக நாம் நொண்ட வேண்டுமா? தேவையில்லை அல்லவா. ஏன்? நாம் வேறு, நாற்காலி வேறு. நாற்காலியை நாம் நமக்கு உதவுகின்ற ஒரு கருவியாகப் பயன்படுத்தினோமே தவிர மற்றபடி நமக்கும் அதற்கும் வேறு எவ்விதத் தொடர்பும் கிடையாது. நாற்காலிக்கு ஏற்படும் மாற்றங்கள் நம்மை எவ்விதத்திலும் பாதிக்கமாட்டா என்பதைப் போன்று நம் முடைய தேகத்திற்கு உண்டாகும் மாற்றங்கள் ஆத்மனைப் பாதிக்கமாட்டா. வியாதி, வளர்ச்சி, தேய்வு, அழிவு, சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்பனவெல்லாம் உடல் புலன்களுடன் தொடர்பு கொண்டனவேயன்றி ஆத்மனு டன் அல்ல என்று இந்த சுலோகம் விளக்கிக் கூறுகிறது.

# 33

अमनस्त्वान्न मे दुःखरागद्वेषभयादयः ।
अप्राणो ह्यमनाश्शुभ्र इत्यादि श्रुतिशासनात् ॥

அமநஸ்த்வாந்ந மே து:க்கராகத்வேஷ பயாதய: ।
அப்ராணோ ஹ்யமநா: சுப்ர இத்யாதி
ச்ருதி சாஸநாத் ॥

*மனமலனா னாதலான் மன்னுதுய ராசை*
*சினமச்ச மாதியெனைச் சேரா - வினமாக*
*வப்பிரா ணன்மனமில் லான்சுத்த னென்றுமறை*
*செப்புகின்ற தன்றோ தெளி.*

[ஸ்ரீ ரமணர்]

अप्राणहि அப்ராண: ஹி - பிராணன்கள் அற்றது, अमनाः शुभ्रः அமநா: சுப்ர: வெண்மையானது தூய்மையானது इत्यादि இத்யாதி - என்று முதலிய, श्रुतिशासनात् ச்ருதி சாஸநாத் - வேத, अमनस्त्वात् அமநஸத்வாத - மனம் இல்லாத காரணத்தால், मे மே - எனக்கு, दुःख துக்த - துயரம், राग ராக - பற்றுக்கள் द्वेष துவேஷ - வெறுப்பு, भय பய - பயம், आदयः ஆதய: - முதலியவைகள் न ந - இல்லை.

கருத்துரை : சுருதிகள் ஆத்மனுக்குப் பிராணன்கள் இல்லை, மனம் இல்லை, அது சுத்தமானது என்று உத்தரவுக்குரலில் உறுதி கூறுகின்றன. எனவே மனம் இல்லாத காரணத்தால் அதற்கு துக்கம், விருப்பு, வெறுப்பு, பயம் ஆகியவை ஒன்றும் கிடையாது.

நம்மையெல்லாம் ஆட்டிப் படைப்பது நமது மனம் தான். மனத்தின்கண் நிகழும் மாறுபாடுகளால்தான் நாம் சுக துக்கங்களை அனுபவிக்கின்றோம். நல்லதை தீயதாகவும், தீயதை நல்லதாகவும், இருப்பதை இல்லாததாகவும், இல்லாததை இருப்பதாகவும், அழகானதை அழகற்றதாக

வும், அழகற்றதை அழகுடையதாகவும் நம்மை எண்ணச் செய்கிறது நமது மனம். இத்தனை வேறுபாடுகளுக்குக் காரணமாக அமையும் மனம் வேறு, ஆத்மன் வேறு என்று இந்த சுலோகத்தில் பேசப்படுகிறது.

பஞ்ச கோசங்களில் ஆத்மன் அன்னமய கோசம் அல்ல என்று முந்திய சுலோகத்தில் கூறப்பட்டது. இப்பொழுது இந்த சுலோகத்தில் இதர நான்கு கோசங்களிலிருந்தும் ஆத்மன் வேறுபட்டது என்று கூறப்படுகிறது. 'அமன:', 'அப்ராண:' என்ற பதங்கள் ஆத்மன் மனம் அல்ல, பிராணன் அல்ல எனப் பொருள்படுகின்றன. 'அப்ராண:' என்பதால் 'ப்ராணமய கோசமும்', 'அமன:' என்பதால் மனோமய, விக்ஞானமய கோசங்களும் குறிப்பிடப்படுகின்றன. 'சுப்ர' என்ற வார்த்தை தூயது என்று பொருள்படுகிறது. அதாவது 'வாசனைகள்' அற்றது என்ற கருத்தைத் தருகிறது. இதனால் ஆனந்தமய கோசமும் ஆத்மன் அல்ல என்பதாகிறது. எனவே 'அப்ராண', 'அமன:', 'சுப்ர:' என்ற மூன்று பதங்களும் மேலே கூறப்பட்ட நான்கு கோசங்களும் ஆத்மா அல்ல என்பதை விளக்குபவையாக அமைகின்றன. இந்த வார்த்தைகள் மிகவும் சாதாரணமானவை என்றாலும் அவைகளில் பொதிந்து கிடக்கும் தத்துவம் மிகவும் மேலானது. இதுதான் உபநிடதங்களின் தனிச் சிறப்பாகும்!

நமது நாட்டில் எந்த வேதாந்தக்கருத்தைச் சொன்னாலும் அதற்கு வேத உபநிடதங்களிலிருந்து ஆதாரம் காட்டித்தான் பேசுவது வழக்கம். எவ்வளவு பெரியவர்களானாலும் உண்மையைச் சொல்லும் பொழுது மேற்கோள் அல்லது ஆதாரம் சொல்ல வேண்டும் என்று ஏற்பட்ட ஒரு பாரம்பர்யம் காரணமாகத்தான் நமது நாட்டில் தோன்றிய உயர்நூல்கள் யாவும் என்றும் நிலைத்து நிற்கும் தகுதி பெற்று விளங்குகின்றன. பகவானே கீதையில் பல இடங்களில் ஆதாரம் காட்டித்தான் பேசுகிறுர் என்றுல் மற்றவரைப் பற்றிச் சொல்வானேன்? ஸ்ரீசங்கரரும் இதற்கு விதி விலக்கல்ல. எனவே ஆத்மன் பஞ்சகோசங்

களுக்கும் அப்பாற்பட்டது என்ற உண்மையைச் சொல்வதற்கு அவர் 'இத்யாதி ச்ருதி சாஸனாத்' என்று வேத உபநிடதங்களை மேற்கோள் காட்டிப் பேசுகின்றார்.

மேற்கண்ட உண்மையை விளக்கும் வகையில் முண்டகோபநிஷத்தில் ஒரு மந்திரம் வருகிறது; "அப்ராணு ஹி அமனா இத்யாதி" - 'ஆத்மன் ப்ராணனும், மனமும் அல்ல, அது தூயது', என்பது இதன் பொருள்.

இந்த சுலோகத்துடன் 'ஆத்மன் இது அல்ல' என்ற விளக்கம் முடிவுறுகிறது. 'இது அல்ல இது அல்ல' என்னும் பொழுது 'அது எது?' அல்லது 'அது எத்தகையது?' என்ற கேள்வி பிறக்கிறது. நேரிடையால் 'இதுதான்' என்று கூற வேண்டும் அல்லவா? எனவே அடுத்த மூன்று சுலோகங்களும் நேரிடை முறையில் ஆத்மன் இதுதான் என்று விளக்கம் தருகின்றன.

## 34

निर्गुणो निष्क्रियो नित्यो निर्विकल्पो निरञ्जनः ।
निर्विकारो निराकारो नित्यमुक्तोस्मि निर्मलः ॥

நிர்குணோ நிஷ்க்ரியோ நித்யோ
நிர்விகல்போ நிரஞ்சன: ।
நிர்விகாரோ நிராகாரோ
நித்யமுக்தோஸ்மி நிர்மல: ॥

நிர்க்குணனி ரஞ்சன னித்த னிராகார
னிர்விகா ரன்சுத்த னிட்கிரிய - நிர்விகற்ப
னித்தமுக் தன்முன் னிகழ்த்திடப் பட்டவை
யத்தனையு நானென் றறி.

[ஸ்ரீ ரமணர்]

अहं அஹம் -நான், निर्गुणः நிர்குண - குணங்களற்றவன், निष्क्रियः நிஷ்கிரிய: - செயலற்றவன், नित्यः நித்ய: - என்றும் இருக்கிறவன், निर्विकल्पः நிர்விகல்ப: - கலக்கமற்றவன், निरञ्जनः நிரஞ்சன: - களங்கமற்றவன், निर्विकारः நிர்விகார: - மாற்றம் அற்றவன், नित्यमुक्तः நித்ய முக்த: - என்றும் விடு பட்டவன், निर्मलः நிர்மல: - மலமற்றவனாக, अस्मि அஸ்மி - இருக்கிறேன்.

கருத்துரை : 'நான்' என்பது ஆத்மாதான். அந்த ஆத்மா குணங்கள் அற்ற, களங்கமற்ற, மாற்றம் இல்லாத சுத்தப் பொருளாகும்.

உலகில் உள்ள எல்லாப் பொருள்களுக்கும் வெவ்வேறு குணங்கள் உள்ளன. பொருள் என்று ஒன்றைக்குறிப்பிடும் பொழுது அதனது குணங்களையும் சேர்த்தே குறிப்பிடுகின் றோம். பொருளும் அதன் குணங்களும் பிரிக்க முடியாதவை. மனிதர்களும் இந்த விதிக்கு விலக்கானவர்களல்லர்.

மனிதர்களைப் பொதுவாக முக்குணத்தவர்களாகப் பிரிக்கலாம். சத்துவ, ரஜோ, தமோ குணங்கள் என்ப வையே அம்மூன்றுகும். சத்துவ குணம் பொருந்தியவர்கள் தூயவர்கள், உயர்ந்தவர்கள்; ரஜோ குணம் உடையவர்கள் கலங்கிய மதியுடையவர்கள், ஆசைகளுக்கடிமைப்பட்டவர் கள். தமோ குணத்தவர்கள் மந்தமானவர்கள், செயலற்றி ருப்பவர்கள் ஆவார்கள். தூய உணர்வோடு இந்த முக்கு ணங்களும் பொருந்தியவனே மனிதன். உணர்வு அல்லது ஆத்மன் எந்தவிதக் குணமும் இல்லாதது.

குணங்களுடன் கூடிய பொருள்கள் அழிந்து போகும் தன்மையவை. குணம் அற்ற ஆன்மா அழிவற்றது. குணம் இல்லாத ஒன்று பொருளாக இருத்தல் முடியாது. உண்மை அல்லது அறிவு அல்லது பேருணர்வு என்று சொல்லுகையில் அவைகள் பொருள் அல்லவே. எனவே அழியாதவை.

'நிர்குணம்' என்பது குணமற்றது என்று பொருள் படுகிறது. 'நிஷ்க்ரிய' என்ற வார்த்தைக்கு 'செயல்

இல்லாதது' என்பது பொருள். ஆத்மன் தான் செயலற்றிருந்து கொண்டு, சரீரம், மனம், புத்தி முதலானவற்றைச் செயல்படுத்துகின்றது. மின்சாரம் தான் செயல்படாது மின்விசிறியைச் சுழற்றுவதற்கு ஒப்பாகும் அது. செயல்கள் யாவும் பொறி புலன்களைச் சார்ந்தவையே அன்றி ஆத்மாவைச் சார்ந்தவை அல்ல. அது யாண்டும் செயல் கடந்த நிலையில் இருக்கிறது.

ஆத்மன் நித்தியப் பொருள். அதாவது என்றும் இருப்பது. தோன்றிய ஒன்றுக்குத் தான் மறைவு உண்டு. ஆனால் ஆத்மனோ தோற்றம் இல்லாதது., காலம், நேரம் என்பது புத்தி அல்லது அறிவின் விளையாட்டேயாகும். ஆனால் ஆத்மன் புத்திக்கும் முன்பு உள்ள ஒன்று என்பதால் அது என்றும் இருக்கும் நித்தியப் பொருளாகும்.

ஒரு குறிப்பிட்ட விஷயத்தைப் பற்றிய ஐயங்கள் நமது மனத்தே எழுகின்றன. ஐயங்கள் மனத்துடன் தொடர்புடையவை. அந்த மனத்தைச் செயல்படுத்துவது ஆத்மாவாகும். எனவே ஆத்மா 'ஐயங்களற்றது' அதாவது 'நிர்விகல்ப' எனப்படுகிறது. சினிமாத் திரையில் நடக்கும் நிகழ்ச்சிகளுக்கும் திரைக்கும் எவ்வாறு எவ்விதத் தொடர்பும் கிடையாதோ, அவ்வாறு மனத்தின் பல்வேறு செயல்களுக்கும் ஆத்மாவிற்கும் எந்தவித சம்பந்தமும் கிடையாது.

பிறவிதோறும் செய்துவரும் செயல்களின் விளைவாக ஒருவனிடம் 'வாசனைகள்' அல்லது பதிவுகள் ஏற்படுகின்றன. தூசியானது கண்ணாடியின் மேற்பரப்பை அசுத்தப்படுத்துவது போன்று 'வாசனைகள்' மனிதனிடம் இருக்கும் தெய்வீகத் தன்மையை மறைக்கின்றன. தூசிக்கும் கண்ணாடிக்கும் எவ்வாறு தொடர்பு கிடையாதோ அது போல் மனிதனது தெய்வீக இயல்பு அல்லது ஆத்ம சைதன்யம் எதனாலும் அசுத்தப்படுத்தமுடியாதபடி தூயதாக விளங்குகிறது. அதையொட்டி ஆத்மன் "நிரஞ்சன:" எனப்படுகிறது.

மனிதனுடைய உடல், மனம் மற்றும் புத்தி முதலியற்றில் ஓயாது மாற்றங்கள் நிகழ்ந்து கொண்டிருப்பதற்கு

மனிதனிடம் உள்ள மற்றொரு, மாற்றத்துக்குட்படாத அம்சம் அடிப்படையாக அமைகிறது. அந்த மாறாத அம்சம் தான் ஆத்மன். உருண்டோடும் பெரும் தேர் ஒன்றுக்கு அடிப் படையாய் அமைவது ஆடாது இருக்கும் அச்சு ஆகும். மாற்றம் எதுவும் இல்லாத ஆத்மன் 'நிர்விகார:' என்று அழைக்கப்படுகிறது.

பொருள் ஒன்றிற்கு வடிவம் அல்லது உருவம் எப்படி ஏற்படுகிறது? அந்தப் பொருளின் உருவத்தை நிர்ணயம் செய்ய அல்லது ஒப்பு நோக்க இன்னொரு வஸ்து ஒன்று இருக்கும் பொழுதுதான் ஒரு பொருள் இன்ன வடிவம் உடையது என்று நாம் தீர்மானிக்கிறோம். ஆனால் உண் மையில் இருக்கும் ஒரே வஸ்து ஆத்மன் தான். அதற்கு அன்னியமாக இருப்பு உடையது வேறு எதுவும் கிடை யாது. எனவே இரண்டாவது என்று ஒன்று இல்லாத நிலையில் ஆத்மனுக்கு உருவம் அல்லது வடிவத்தை எப் படிக் கணக்கிடுவது? எனவே ஆத்மன் 'உருவமற்றது' அல்லது 'நிராகார:' எனப்படுகிறது.

பிறரை நம்மிடமிருந்து நாம் வேறாகக் கருதுவதால் தான், 'இவன் எனக்கு நண்பன்', 'இவன் எனக்குப் பகை வன்' என்றெல்லாம் நாம் வேறுபாடு பாராட்டுகிறோம். அதாவது பந்தபாசங்களை உண்டாக்கிக் கொள்கின் றோம். 'பந்தம்' அல்லது 'கட்டு' என்பது ஒன்று இருந்தால் தான் 'முக்தி' அல்லது 'விடுதலை' என்பதும் உண்டு. பந்தம் அற்ற நிலையில் முக்தியும் கிடையாது. அனைத் தையும் கடந்த ஆத்மனுக்குப் பந்தம் ஏது? எனவே அது "நித்ய முக்த:" அதாவது யாண்டும் 'சுதந்திரமாய் இருப் பது' எனப்பொருள்படுகிறது.

தங்கம் மற்றொரு உலோகத்துடன் சேரும் பொழுது அதில் களங்கம் ஏற்படுகிறது. தூயநீரில் தூசுபடியும் பொழுது அதில் களங்கம் உண்டாகிறது. அதாவது இரண்டு அல்லது மேற்பட்ட பொருள்கள் இருக்கையில் அவை ஒன்றோடொன்று கலந்து களங்கத்தை உண்டாக் குகின்றன. அடிப்படை உண்மைப் பொருள் மாறாத ஒரே

வஸ்து. அதில் அதற்கு அன்னியமாக மற்றொன்று இருக்க வழி ஏதும் கிடையாது. எனவே ஆத்மா எப்பொழுதும் தூயதாகவே உள்ளது.

நிர்குண, நிஷ்க்ரிய, நித்ய, நிர்விகல்ப, நிரஞ்சன, நிர்விகார, நிராகார, நித்யமுக்த, நிர்மல என்ற தன்மைகளுடன் கூடிய ஆத்மன்தான் ஒவ்வொரு ஜீவனுள்ளும் உறையும் உண்மைப்பொருளாகும் என்பதை இந்த சுலோகம் அழகுற விளக்குகிறது.

## 35

अहमाकाशवत्सर्वं बहिरन्तर्गतोऽच्युतः ।
सदा सर्वसमस्सिद्धो निस्सङ्गो निर्मलोऽचलः ॥

அஹமாகாசவத் ஸர்வம்
பஹிரந்தர்கதோ(அ)ச்யுத: ।
ஸதா ஸர்வ ஸமஸ் ஸித்தோ
நிஸ்ஸங்கோ நிர்மலோ(அ) சல: ॥

ஆகாயம் போல வகிலத்தி னுள்வெளியான்
சாகாதான் சர்வ சமன் சித்தன் - றேகாதி
யாவற்றும் பற்றற்று னென்றுமம லன்சலியா
னாவனா னென்றே யறி.

[ஸ்ரீ ரமணர்]

अहं அஹம் - நான், आकाशवत् ஆகாசவத் - வெளி போல, सर्वं ஸர்வம் - எல்லாவற்றிலும், बहिरन्तर्गतः பஹிரந்தர்கத: - உள்ளும் வெளியேயும் நிறைந்தவன், सदा ஸதா - எப்பொழுதும், सर्व ஸர்வ - எல்லாவற்றிலும், समः ஸம: - சமமாக நிறைந்தவன், सिद्धः ஸித்த: - வெற்றியுடையவன், निस्सङ्गः நிஸ்ஸங்க: - ஒட்டாதவன், निर्मलः நிர்மல: - நிர்மலமானவன், अचलः அசல: - அசைவற்றவன்.

கருத்துரை : 'நான்' (ஆத்மன்) ஆகாயத்தைப் போன்று எங்கும் உள்ளும் புறமும் வியாபித்திருப்ப வன். எப்பொழுதும் எங்கும் சமமாகவும், ஒட்டாதவனாக வும், நிர்மலமாகவும், ஆசையற்றவனாகவும், சுத்தமாகவும் இருப்பவன் ஆவேன்.

ஆகாயம் என்ருல் வெளி என்று பொருள். 'வெளி' இல்லாத இடம் ஏதேனும் உண்டோ? ஆகாயம் எல்லை யற்று எங்கும் வியாபித்திருக்கிறது. அனைத்தினுள்ளும் வியாபித்து, அனைத்தையும் தன்னுள் அடக்கி நிற்பது ஆகாயம். அமாவாசை இரவில் அண்ணுந்து மேலே ஆகா யத்தைப் பார்க்கின்ருேம்! அப்பப்பா! என்ன அரிய காட்சி! ஆயிரமாயிரம் வைரக் கற்களைப் பதித்தாற் போன்று வானம் என்ன அழகாகக் காட்சி தருகிறது. மினுக் மினுக் என்று மின்னும் ஒவ்வொன்றும் நமது சூரியனைப் போன்று பன்மடங்கு பெரிதான கோடிக் கணக்கான மைல்களுக்கு அப்பால் இருக்கும் நட்சத்தி ரங்களாகும். அப்படி மின்னும் பிரம்மாண்டமான நட் சத்திரங்களின் மொத்த எண்ணிக்கை என்ன? இதுவரை அவற்றைக் கணக்கிட்டவர் எவரும் கிடையது. கணக்கிட வல்லவர் யாரும் கிடையாது. ஏன்? அவை கணக்கற் றவை. இத்தனை நட்சத்திரக் கூட்டங்களையும் அடக்கி வைத்திருப்பது ஆகாயம். அவ்வளவு பரந்து விரிந்து எல்லையற்றுக் காட்சி தரும் ஆகாயத்துடன் ஆத்மா ஒப்பிடப்படுகிறது. ஆகாயத்தைப் போன்று ஆத்மனும் அனைத்தினுள்ளும் வியாபித்து அனைத்தையும் கடந்து நிற்கிறது.

ஆத்ம போதத்தில் உள்ள சுலோகங்களில் உண்மையை விளக்கும் பொருட்டுப் பல்வேறு உவமானங்கள் எடுத்துக் காட்டப்படுகின்றன. அவ்விதம் உவமானங்கள் காட்டப் படும் பொழுது நாம் நமது மனதில் ஒரு முக்கிய கருத்தைப் பதியவைத்துக் கொள்ள வேண்டும். ஆத்மன் எந்த ஒரு இன்னொரு பொருளோடும் எல்லாவிதங்களி லும் ஒப்பிட முடியாததாகும். ஏனெனில் ஆத்மன்

அனைத்தையும் கடந்தது. அதற்கு சமமான வஸ்து வேறு எதுவும் கிடையாது. இரண்டற்ற ஒன்று ஆத்மன். ஆகவே இன்னொன்றை ஆத்மனுடன் ஒப்பிடுகையில் அந்த உவமானமாயமைகின்ற வஸ்து ஏதாவது ஒரு சில விஷயங்களில் மட்டுமே ஆத்மனுடன் பொருந்துமேயொழிய, அனைத்து விதங்களிலும் பொருந்தாது. ஏனெனில் ஆத்மனுக்கு நிகர் ஆத்மன் தான். மற்றொன்று கிடையாது.

ஆத்மாவிற்கும் 'வெளி'க்கும் முக்கியமாக இரண்டு ஒற்றுமைகளைக் கூறலாம். முதற்கண் ஆத்மனும் வெளியும் எங்கும் நிறைந்தவை. இரண்டாவதாக எல்லாம் இருப்பதற்கு ஆதாரமாகத் தான் அமைந்த போதிலும், அவற்றால் ஆத்மனோ, வெளியோ எந்த விதத்திலும் பாதிக்கப்படுவதில்லை.

சூக்ஷ்மமான ஒரு பொருளை ஸ்தூலமான ஒரு பொருள் கட்டுப்படுத்த முடியாது. உதாரணமாக ஒரு மனிதனது உடலோ ஸ்தூலமானது. சிறைவாசம் என்பது உடலுக்குத்தானே ஒழிய மனதிற்கல்ல. மனம் எப்பொழுதும் வெளி உலகிலேயே சஞ்சரித்துக்கொண்டிருக்கும். அதை எந்தச் சிறைச்சாலையிலும் அடைத்துவைக்க முடியாது. அதுபோல் அதிசூக்ஷ்மமான ஆத்மனையும் எதனாலும் கட்டுப்படுத்த முடியாது.

அடுத்து ஆத்மன் 'அச்யுதன்' என்று சொல்லப்படுகிறது. இந்த அடைமொழி வெளிக்கும் பொருந்தும். முன்னூறு அடி உயரத்திலிருந்து ஒரு பொருள் கீழே விழுகிறது என்று வைத்துக்கொள்வோம். சற்று முன்பு வரை உயரத்தில் இருந்த ஒன்று இப்பொழுது கீழே விழுந்துவிட்டது. ஆகவே 'விழுந்துவிட்டது' என்றால் உயர்ந்த இடத்தில் இருந்து தாழ்ந்த இன்னொரு இடத்திற்கு இடம் பெயர்ந்து விட்டது என்பது பொருள். ஆத்மன் எங்கும் நிறைந்தது எனும் பொழுது எங்கிருந்து எங்கே அது விழ முடியும்? எனவே ஆத்மன் 'அச்யுதன்' அல்லது வீழ்ச்சியில்லாதவன் என்று சொல்லப்படுகிறது.

அடுத்து ஆத்மன் 'ஸர்வஸம' எனப்படுகிறது. 'ஸர்வஸம:' என்றால் அனைத்திலும் சமமாயிருப்பவன் என்று பொருள். இயங்கும் அனைத்திலும் இலங்கும் ஆத்மனில் எந்தவிதமான வித்தியாசமோ வேறுபாடோ கிடையாது. ஆனால் அது, எவ்விதம் ஒரே மின்சார சக்தி பல விதங்களில் தன்னை வெளிப்படுத்திக்கொள்கிறதோ அதைப் போன்று பலவித வடிவங்களின் மூலம் தன்னை வெளிப்படுத்திக்கொள்கிறது.

'ஸித்த' என்றால் அனைத்தையும் உடையவன் என்று பொருள். ஆத்மனோ அனைத்துமாக இருக்கும் பொழுது அதில் இல்லாதது என்று ஒன்று இருக்கமுடியுமோ? நிஸ்ஸங்க:', 'அசல:' என்ற வார்த்தைகளால் ஆத்மன் நிர்மலமானவன். அசைவற்றவன் என்று குறிப்பிடப்படுகிறது. எது அசையும்? வரம்புள்ள ஒன்று. ஆத்மனுக்கு ஏது வரம்பும் எல்லையும்? எனவே அது அசைவற்றது. எல்லா இடத்திலும் வியாபித்திருக்கும் ஒன்று எங்கிருந்து எங்கு அசைய முடியும்?

அண்ட சராசரங்கள் அனைத்தும் வியாபித்து நிற்கும் அந்தப் பொருளே அடிப்படையில் நான் என்று உணர்வதுதான் வேதாந்த சாரமாகும்.

## 36

नित्यशुद्धविमुक्तैकमखण्डानन्दमद्वयम् ।
सत्यं ज्ञानमनन्तं यत्परं ब्रह्माहमेव तत् ॥

நித்யசுத்த விமுக்தைகமகண்டானந்த மத்வயம் ।
ஸத்யம் ஞானமனந்தம் யத்பரம்
ப்ரஹ்மாஹமேவ தத் ॥

எது நித்தஞ் சுத்த மெது முக்த மேக
மெக கண்ட வின்பிரண் டில்ல - தெதுசத்துச்
சித்தனந்த மாகுந் திகழ்ப் பரப்பிரம
வத்துயா னேயா மதி.

[ஸ்ரீரமணர்]

नित्यशुद्ध நித்யசுத்த - என்றும் தூய்மையானதும், विमुक्त விமுக்த - சுதந்திரமானதும், एकं ஏகம் - தனி ஒன்றுன்றும், अखण्डानन्दं அகண்டானந்தம் - இடையறுத ஆனந்தமயமானதும், अद्वयं அத்வயம் இரண்டாவது அற்றதும், सत्यं ஸத்யம் - என்றென்றும் உண்மையானதும், ज्ञानं ஞானம் - அறிவு மயமானதும், अनन्तं அனந்தம் - எல்லையற்றது மான, यत् யத் - எந்தப்பொருளோ, तत् தத் - அந்த, ब्रह्म ப்ரஹ்ம - பிரம்மம் अहमेव அஹமேவ - நானே.

கருத்துரை : என்றும் தூய்மையானதும், சுதந்திரமானதும், ஒன்றுனதும், இடையறுத ஆனந்த மயமானதும், இரண்டாவது அற்றதும், என்றென்றும் உண்மையானதும், அறிவு மயமானதும் எல்லையற்றதுமாக எந்தப் பரம்பொருள் விளங்குகிறதோ அந்தப் பிரம்மமே நான்.

இதுதான் ஆத்மன் அல்லது இத்தகையது தான் ஆத்மன் என்று விளக்கிக் காண்பிப்பதற்காக இன்னும் சில விளக்கங்கள் இந்த சுலோகத்தில் தரப்படுகின்றன. எந்த ஒன்று புரிந்து கொள்ள மிகவும் கடினமாக உள்ளதோ அதைப் புரியவைப்பதற்கு உதாரணங்களும் அதிகமதிகம் தேவைப்படும். பல்வேறு வார்த்தைகளின் மூலம் ஆத்மனின் தன்மை இத்தகையது என்று இங்கே கூறப்படுகிறது.

'நித்ய' என்றுல் என்றுமிருப்பது என்று பொருள். ஏற்கனவே இந்த வார்த்தை முப்பத்தி நான்காவது சுலோகத்தில் உபயோகிக்கப்பட்டிருக்கிறது. எனினும் கருத்தை வலியுறுத்தும் பொருட்டு அது இங்கு மீண்டும் கூறப்படுகிறது.

'சுத்த' என்ற வார்த்தை ஆத்மன் மிக்வும் தூய்மையானது என்பதைக் குறிக்கிறது. ஏற்கெனவே முன் சுலோகத்தில் விளக்கப்பட்ட பஞ்ச கோசங்களைச் செயல்பட வைப்பது ஆத்மன். இந்த ஐந்து கோசங்களும் ஆத்மனைச் சூழ்ந்துள்ளன. எனினும் ஆத்மன் இவற்ருலோ அல்லது வேறு எதனாலோ களங்கப்படுத்தப்படாது இருக்கிறது. பல்வேறு விதமன செயல்களைச் செய்யும் கருவிகளை இயக்கும் மின்சாரம் அந்தக் கருவிகளின் செயல்முறைகளினால் சிறிதும் பாதிக்கப்படாது

இருப்பது போன்று ஆத்மனும் எதனாலும் பாதிக்கப்ப டாது தூயதாகத் திகழ்கிறது.

'விமுக்த:' என்ற வார்த்தை ஆத்மன் விழிப்பு, உறக்க, கனவுநிலை போன்ற எந்த நிலையிலும் கட்டுப்படாது சுதந்திரமாக விளங்குகிறது என்பதைக் குறிக்கிறது. கன வற்று உறங்கும் மனிதன் அவனது சரீரம், மனம், புத்தி முதலியவற்றால் பாதிக்கப்படாது இருக்கிறான். ஆனால் அவனது தூக்கம் கலைந்தவுடன் திரும்பவும் அவன் தனது சரீரம், மனம், புத்தி ஆகியவற்றின் செயல்முறை களுக்குக் கட்டுப்பட்டவனாகிறான். ஆனால் ஆத்மஞானம் கைவரப் பெற்ற ஒருவன் விழிப்பு, கனவு முதலிய எல்லா நிலைகளிலுமே அவற்றின் தாக்குதல்களிலிருந்து விடுபட் டுச் சுதந்திரமாக இருக்கிறான். இடையறாது இன்பத்தை அவன் யாண்டும் அனுபவிக்கிறான்.

ஏகம் என்றால் ஒன்று என்று பொருள். ஆத்ம ஞானம் கைவரப்பெற்ற ஒருவன் எங்கும் எதிலும் ஆத் மன் ஒன்றையே காண்கின்றான். பேருணர்வில் அவன் ஒன்றாய்விடுகிறான்.

'அகண்ட ஆனந்தம்' என்றால் அபின்னமான அல் லது இடையறாத இன்பம் என்று பொருள்படுகிறது. தோன்றி மறையும் உலகப்பொருள்களிலிருந்து கிடைக்கப் பெறும் இன்பத்திற்கு எல்லையுண்டு. முடிவு உண்டு. ஆனால் தோற்றமும் மறைவும் அற்ற ஆத்மனிலிருந்து பெறப்படும் இன்பத்திற்கு எல்லை என்ற ஒன்று இருக்கமுடி யுமோ? எனவே அது அகண்ட ஆனந்தம் எனப்படுகிறது.

'அத்வயம்' என்பது இரண்டற்றது எனப்பொருள்படு கிறது. இருப்பது ஒன்றுதான் என்பதை 'ஏகம்' என்ற வார்த்தையின் மூலம் விளக்கிய பின்னும், 'அத்வயம்' என்ற பதம் அதைத் தவிர இரண்டாவது என்று குறிப்பிடத்தக்க ஏதும் கிடையாது என்று முந்திய கருத்தை மீண்டும் வலியுறுத்துகிறது.

'ஸத்யம்', 'ஞானம்', 'அனந்தம்' என்ற மூன்று வார்த்தைகளும் உண்மை - அறிவு- எல்லையற்றது எனப்பொருள் படுகின்றன. இது பிரகதாரண்யக உபநிடதத்திலிருந்து எடுக்கப்பட்ட ஒரு மேற்கோளாகும்.

ஸத்யம் என்பது இறந்த, நிகழ், எதிர்காலங்களாகிய எக்காலத்தும் இருக்கும் மெய்ப்பொருளே ஆன்மா என்பதைக் குறிக்கிறது. தூய, பரிபூரண அறிவு என்பதை 'ஞானம்' குறிக்கிறது. 'முடிவு அற்றது' அல்லது 'வரம்பு அற்றது' என்பதை 'அனந்தம்' என்ற சொல் குறிக்கிறது. தோற்றத்திற்கு வந்துள்ள அனைத்தும் ஒரு எல்லைக்குட்டபட்டவை; வரம்புக்குட்பட்டவை. ஆனால் ஆத்மனோ தோன்றாத் தன்மையது. ஆகையால் அது வரம்பற்றது.

மனித மனம் எத்தகையதோ அத்தகையதாகத்தான் புற உலகும் காட்சி தருகிறது. தூய மனம் எங்கும் தூய்மையையே காண்கிறது. தூய்மையும், தீமையும் புறத்தே இல்லை. அகத்தில்தான் அவை உள்ளன. மனத்திலுள்ள மாசுகள் எல்லாம் அகன்று, அது ஆத்ம சொரூபத்தில் லயமாகும் போது அனைத்தும் ஆத்ம சொரூபமாக அகண்டானந்தமயமாகக் காட்சி தருகின்றன என்பதை இந்த சுலோகம் விளக்கிக் கூறுகிறது.

## 37

एवं निरन्तराभ्यस्ता ब्रह्मैवास्मीति वासना।
हरत्यविध्याविक्षेपान् रोगानिव रसायनम् ॥

ஏவம் நிரந்தராப்யஸ்தா
ப்ரஹ்மைவாஸ்மீதி வாஸநா: ।
ஹரத்ய வித்யா விக்ஷேபாந்
ரோகாநிவ ரஸாயநம் ॥

*நிரந்தரமிவ் வாறு நிகழ்த்தப் படுமப்*
*பிரமமே யானால னென்று முறுதி*
*யழிக்குமறி யாமை யலைவுகளை நோய்க*
*ளொழிக்குமிர சாயன மொத்து.*

[ஸ்ரீ ரமணர்]

एवं ஏவம் - இவ்விதம், निरन्तराभ्यस्ता நிரந்தரா்ப்யஸ்தா - எப்பொழுதும் அப்பியாசம் செய்யப்பட்ட, ब्रह्म एव ப்ரஹ்ம ஏவ - பிரம்மமாகவே; अस्मि அஸ்மி - இருக்கிறேன், इति இதி - என்ற, वासना வாஸநா - வாசனை, रसायन ரஸாயனம் - மருந்து, रोगानिव ரோகாநிவ - ரோகங்களைத் (தீர்ப்பது) போல, अविद्या அவித்யா - அவித்தையினால் ஏற்படும், विक्षेपान् விக்ஷேபாந் - பதற்றங்களை, हरति ஹரதி - நீக்குகிறது.

கருத்துரை : 'நான் பிரம்மமே' என்று அடிக்கடி பயிற்சி செய்து அதனால் ஏற்படும் விருத்திச் சுவடு அல்லது 'வாசனை'யே அவித்தையின் காரணமாகப் பல பிறவிகளில் பலவாறாக ஏறியிருக்கும் பதற்றச் சுவடுகளை நீக்கும் வியாதியைத் தீர்த்து மருந்தும் மறைந்து விடுவது போல, இந்த வாசனை மற்ற வாசனைக் குப்பையை எல்லாம் அழித்துத் தானும் மறைந்து விடும். பிறகு பிரம்ம ஸாக்ஷாத்காரம் ஏற்பட்டு விடும்.

பிணியாளன் ஒருவன் ஒரு பிணியினால் வருந்துகிறான். அந்தப் பிணியைப் போக்க அவன் என்ன செய்ய வேண்டும். அந்தப் பிணியைப் போக்கவல்ல மருந்தினை உட்கொள்ள வேண்டும். உட்கொண்ட மருந்து உடலிலிருந்து பிணியை விரட்டியடிக்கிறது. அத்துடன் நின்று விடாது, அதுதானே பிணியாளனது உடலிலிருந்து மறைந்தும் விடுகிறது.

நம்மனைவரையும் பீடித்திருப்பது அஞ்ஞானம் எனும் பிணியாகும். அஞ்ஞானம் என்பது என்ன? அழியும் பொருட்களுடன் நம்மை ஒன்றுபடுத்திக் கொள்வதே அஞ்ஞானம். நான் உண்மையில் ஆத்மன்தான். இந்த

உடல் அல்ல" என்று எண்ணுவதுதான் ஞானத்தின் அறி குறி. அக்ஞானமாகிய பிணியை அகற்ற உபாயம், ஞானம் எனும் மருந்தை உட்கொள்வதுதான்.

மனிதனது இயற்கைநிலை ஆரோக்கியமான நன்னி லைதான். ஆனால் அவ்வப்பொழுது நோய்க்கிருமிகள் உள்ளே புகுந்து ஆரோக்கியம் கெடுகிறது. மருந்தை உட்கொள்வதால் கிருமிகள் அழிவுபட்டு உடலின் ஆரோக் கியநிலை மீண்டும் பெறப்படுகிறது.

மேலே சொன்ன உதாரணத்தில் காண்பது போல் நாம் அடிப்படையில் எங்கும் நிறைந்து விளங்கும் பரம் பொருள்தான். அதில் எந்தவித சந்தேகமும் இல்லை. ஆனால் அந்த அறிவு. பெரும்பாலும் நம்மிடம் இருப் பதில்லை. ஏன்? நாம் நம்மை நமது உடல், மனம், புலன்களுடன் வெகுகாலமாக ஐக்கியப்படுத்திக் கொண்டு வந்திருக்கிறோம். எனவே "நான் இந்த அழியும் உடல் அல்ல, நான் அழியாத ஆத்மா" என்று கொஞ்ச நேரம் தியானம் செய்யும் வரை மனமானது அமைதி நிலையில் இருக்கிறது. தியானம் முடிந்ததும் திரும்பவும் நம்மி டம் ஊறிக்கிடக்கும் உடற்பற்று மீண்டும் தனது பழைய இடத்தை ஆக்கிரமித்துக்கொள்ளுகிறது. இந்த நிலை மாற என்ன செயய வேண்டும்? இதற்கு ஒரு சிறிய உபமானத்தைக் காண்போம்.

ஒருவன் ஒரு நாயை மிக அன்புடன் வளர்த்து வந்தான். எப்பொழுதும் அதைத் தன்னுடனே வைத் துக்கொஞ்சுவான். தான் குளிக்கும் பொழுது அதையும் குளிப்பாட்டுவான். தான் உண்ணும் பொழுது அதற்கும் உணவூட்டுவான். அந்த நாயும் அவனிடம் கொஞ்சி விளை யாடும். இதைப் பார்த்து ஒரு சாது அவனிடம் "நாயுடன் இப்படி நீ அதிகமான பற்று வைத்திருப்பது நல்லதல்ல. அதை விட்டு ஒதுங்கி இரு" என்று அறிவுரை கூறினார். சாதுவின் வார்த்தைகளில் ஏதாவது உள்ளர்த்தம் இருக் கவேண்டும் என்று எண்ணிய அவன் அன்றிலிருந்து நாயுடன் பழகுவதைவிட்டு விட்டான். அவன் நாயை

விட்டுவிட்டாலும் அவனை நாய் விடுவதாக இல்லை. அவன் எவ்வளவு தான் அடித்து விரட்டினாலும் அது மீண்டும் மீண்டும் வந்து அவன் காலை நக்கும். பிறகு மிகுந்த சிரமத்தின் பேரில் அவன் அதைத் திரும்பத் திரும்ப அடித்துவிரட்டவே அது அவனை விட்டுப்போ யிற்று. மேற்காணும் உவமைக்கதையில் காண்பது போல் "நாம் இந்த உடல்" என்று நாம் வெகுநாளாக எண்ணி வந்திருக்கிறோமாகையால் அந்த எண்ணம் நம்மை விட்டு எளிதில் அகலாது தான். அதை அகற்ற ஒரு வழி "நான் உடல் அல்ல, அழியாத ஆத்மன்தான்" என்று மீண்டும் மீண்டும் தியானம் செய்வதுதான்.

## 38

विविक्तदेश आसीनो विरागो विजितेन्द्रियः ।
भावयेदेकमात्मानं तमनन्तमनन्यधीः ॥

விவிக்த தேச ஆஸீனோ விராகோ விஜிதேந்த்ரிய: ।
பாவயேதேக மாத்மாநம் தமநந்தமநந்யதீ: ॥

ஏகாந்த தேசத் திருந்தாசை யின்றிவெளி
போகாது வென்று பொறிகளை - யேகமா
யந்தமி லான்மாவை யன்னியமில் புந்தியனாய்ச்
சிந்திக்க வேண்டுந் தெரி.

[ஸ்ரீரமணர்]

विविक्तदेश விவிக்ததேச - தனியான இடத்தில், आसीनो ஆஸீனோ - அமர்ந்தவனாக, विरागो விராகோ - பிடிப்பை விட்டு (வைராக்யம் கொண்டவனாக), विजितेन्द्रियः விஜிதேந்திரிய: - இந்திரியங்களை அடக்கியவனாய், अनन्यधीः அநந்யதீ: - வேறு ஒன்றிலும் செல்லாது இது ஒன்றிலேயே ஈடுபட்ட மனத்தினாய், तं अनन्तं தம் அநந்தம்- அநந்த எல்லையற்ற, एकं ஏகம் - ஒன்றான, आत्मानं ஆத்மாநம் - ஆத்மாவை, भावयेत् பாவயேத் - பாவிக்க.

உடல் அல்ல" என்று எண்ணுவதுதான் ஞானத்தின் அறி குறி. அக்ஞானமாகிய பிணியை அகற்ற உபாயம், ஞானம் எனும் மருந்தை உட்கொள்வதுதான்.

மனிதனது இயற்கைநிலை ஆரோக்கியமான நன்னி லைதான். ஆனால் அவ்வப்பொழுது நோய்க்கிருமிகள் உள்ளே புகுந்து ஆரோக்கியம் கெடுகிறது. மருந்தை உட்கொள்வதால் கிருமிகள் அழிவுபட்டு உடலின் ஆரோக் கியநிலை மீண்டும் பெறப்படுகிறது.

மேலே சொன்ன உதாரணத்தில் காண்பது போல் நாம் அடிப்படையில் எங்கும் நிறைந்து விளங்கும் பரம் பொருள்தான். அதில் எந்தவித சந்தேகமும் இல்லை. ஆனால் அந்த அறிவு. பெரும்பாலும் நம்மிடம் இருப் பதில்லை. ஏன்? நாம் நம்மை நமது உடல், மனம், புலன்களுடன் வெகுகாலமாக ஐக்கியப்படுத்திக் கொண்டு வந்திருக்கிறோம். எனவே "நான் இந்த அழியும் உடல் அல்ல, நான் அழியாத ஆத்மா" என்று கொஞ்ச நேரம் தியானம் செய்யும் வரை மனமானது அமைதி நிலையில் இருக்கிறது. தியானம் முடிந்ததும் திரும்பவும் நம்மி டம் ஊறிக்கிடக்கும் உடற்பற்று மீண்டும் தனது பழைய இடத்தை ஆக்கிரமித்துக்கொள்ளுகிறது. இந்த நிலை மாற என்ன செயய வேண்டும்? இதற்கு ஒரு சிறிய உபமானத்தைக் காண்போம்.

ஒருவன் ஒரு நாயை மிக அன்புடன் வளர்த்து வந்தான். எப்பொழுதும் அதைத் தன்னுடனே வைத் துக்கொஞ்சுவான். தான் குளிக்கும் பொழுது அதையும் குளிப்பாட்டுவான். தான் உண்ணும் பொழுது அதற்கும் உணவூட்டுவான். அந்த நாயும் அவனிடம் கொஞ்சி விளை யாடும். இதைப் பார்த்து ஒரு சாது அவனிடம் "நாயுடன் இப்படி நீ அதிகமான பற்று வைத்திருப்பது நல்லதல்ல. அதை விட்டு ஒதுங்கி இரு" என்று அறிவுரை கூறினார். சாதுவின் வார்த்தைகளில் ஏதாவது உள்ளர்த்தம் இருக் கவேண்டும் என்று எண்ணிய அவன் அன்றிலிருந்து நாயுடன் பழகுவதைவிட்டு விட்டான். அவன் நாயை

விட்டுவிட்டாலும் அவனை நாய் விடுவதாக இல்லை. அவன் எவ்வளவு தான் அடித்து விரட்டினாலும் அது மீண்டும் மீண்டும் வந்து அவன் காலை நக்கும். பிறகு மிகுந்த சிரமத்தின் பேரில் அவன் அதைத் திரும்பத் திரும்ப அடித்துவிரட்டவே அது அவனை விட்டுப்போ யிற்று. மேற்காணும் உவமைக்கதையில் காண்பது போல் "நாம் இந்த உடல்" என்று நாம் வெகுநாளாக எண்ணி வந்திருக்கிறோமாகையால் அந்த எண்ணம் நம்மை விட்டு எளிதில் அகலாது தான். அதை அகற்ற ஒரு வழி "நான் உடல் அல்ல, அழியாத ஆத்மன்தான்" என்று மீண்டும் மீண்டும் தியானம் செய்வதுதான்.

## 38

विविक्तदेश आसीनो विरागो विजितेन्द्रियः ।
भावयेदेकमात्मानं तमनन्तमनन्यधीः ॥

விவிக்த தேச ஆஸினோ விராகோ விஜிதேந்த்ரிய: ।
பாவயேதேக மாத்மாநம் தமநந்தமநந்யதீ: ॥

ஏகாந்த தேசத் திருந்தாசை யின்றிவெளி
போகாது வென்று பொறிகளை - யேகமா
யந்தமி லான்மாவை யன்னியமில் புந்தியனாய்ச்
சிந்திக்க வேண்டுந் தெரி.

[ஸ்ரீரமணர்]

विविक्तदेश விவிக்ததேச - தனியான இடத்தில், आसीनो ஆஸினோ - அமர்ந்தவனாக, विरागो விராகோ - பிடிப்பை விட்டு (வைராக்யம் கொண்டவனாக), विजितेन्द्रियः விஜிதேந் திரிய: - இந்திரியங்களை அடக்கியவனாய், अनन्यधीः அநந் யதீ: - வேறு ஒன்றிலும் செல்லாது இது ஒன்றிலேயே ஈடுபட்ட மனத்தினாய், तं अनन्तं தம் அநந்தம்- அநந்த எல்லையற்ற, एकं ஏகம் - ஒன்றான, आत्मानं ஆத்மாநம் - ஆத்மாவை, भावयेत् பாவயேத் - பாவிக்க.

கருத்துரை : தனியானதோர் இடத்தில் அமர்ந்து புலன்களை அடக்கி வைராக்கியம் கொண்டு எல்லை யற்ற பரம்பொருளான ஆத்மாவை வேறு ஒன்றிலும் செல்லாத புத்தியுடையவனாகத் தியானிக்க வேண்டும்.

இந்த சுலோகத்தில் தியானம் எவ்விதம் செய்ய வேண்டும் என்பது பற்றி விளக்கம் தரப்படுகிறது.

அலைந்து திரியும் இயல்புடையது நமது மனம். அத் தகைய அடங்காத மனத்தை அடக்கிக் குறிப்பிட்ட ஒன்றின் மீது நிலைநிறுத்தி ஒருமைப்படச் செய்வது தான் தியானத்தின் இலட்சியமாகும்.

எல்லா இடங்களிலும் எல்லா நேரங்களிலும் எளி திலே தியானம் கைகூடாது. சந்தடி மிகுந்த இடத்தில் அமர்ந்து கொண்டு தியானம் செய்யமுடியாது. உடலில் களைப்பு அதிகரித்துச் சோர்வுற்றிருக்கும் வேளையிலே தியானம் செய்ய முடியாது. அந்த வேளையில் நாம் தியானம் செய்யத்தலைப்பட்டால் அது நாம் அறியாமலே நம்மைத் தூக்கத்தில் ஆழ்த்திவிடும். நல்ல முறையில் தியானம் கைகூடுவதானது இடத்தையும் நேரத்தையும் பொறுத்ததாகும்.

தியானம் செய்வதற்கு முதற்கண் தேவையானது 'விவிக்த தேசம்' அல்லது தனி இடம் ஆகும். தனி இடம் என்றவுடன் இமயமலைக் குகை அல்லது அடர்ந்த காடுகளின் உட்புறம் என்று கருதிவிடக்கூடாது. நாம் வசிக் கும் இடத்திலேயே கூடுமான வரை சந்தடி அற்ற இடம், தொந்தரவுகள் இல்லாத இடத்தையே தியானத்திற்கேற்ற தனி இடமாகக் கருத வேண்டும். பல அறைகளுள்ள வீடாக இருந்தால் ஒரு தனி அறையையோ, அல்லது சிறுவீடாக இருப்பின் அறையின் ஒரு மூலையையோ தியானத்திற்கேற்ற தனி இடமாக ஆக்கிக் கொள்ளலாம்.

நாம் தியானம் செய்யும் இடம் எவ்வளவுதான் தியா னத்திற்கேற்றதாக இருந்தாலும் நமது மனத்திலே ஆசை களும் விகாரங்களும் அடங்கவில்லையேயாகில் தனி இடத் தால் ஆகப்போவது ஒன்றுமில்லை. நாம் இமயமலைக்

காட்டில் உள்ள ஒரு குகைக்குள்ளே அமர்ந்திருக்கலாம். இருப்பினும் நமது மனமானது நமது வீட்டைப்பற்றியும், மனைவி, மக்கள் மற்றும் உற்ருர் உறவினரைப் பற்றியும் நமக்கு வரவேண்டிய ஊதிய உயர்வைக் குறித்தும், நாம் பிறருக்குக்கொடுக்க வேண்டிய கடன்கள், நமக்குப் பிறரிட மிருந்த வரவேண்டிய கடன்பாக்கிகள், நாட்டின் அரசியல் நிலைமை குறித்தும் இன்னும் இவை போன்ற எண் ணற்ற பல பிரச்சனைகளைக் குறித்தும் இடைவிடாது சிந்தித்துக் கொண்டிருக்குமாகில் நாம் எந்தவிதமான தியானமும் செய்யமுடியாது. ஏனெனில் காடும் வீடும் பெரும்பாலும் நமது மனநிலையைப் பொறுத்தவையே யாகும்.

சந்தடி மிகுந்த இடத்தில் இருந்து கொண்டு மனத்தை அடக்கித் தியானம் செய்தால் அந்த இடம் நம்மைப் பொறுத்தவரை இமயமலைக் குகைக்கு நிகராகும். மாருக இமயமலைக்குகையில் இருந்து கொண்டு ஊர் உலகத்தைப் பற்றியெல்லாம் சிந்திக்க ஆரம்பித்தால் அந்த இடம் நம் மைப்பொறுத்தவரை புதுடில்லி கொனாட் சதுக்கத்திற்கு நிகராகும். எனவே கண், காது, போன்ற புலன்களை அடக்குதல் தியானத்திற்கு மிகவும் இன்றியமையாததா கும்.

அதிகாலை வேளை நான்கு மணிமுதல் ஆறுமணி வரை உள்ள பகுதி பிரம்ம முகூர்த்தம் எனப்படுகி றது. அந்த நேரம் புறச்சந்தடிகள் இல்லாத வேளையா கும். மனத்திற்கு இதம் தரும் ரம்மியமான வேளை அது. தியானத்திற்கு மிகவும் உகந்த வேளை அது. அந்த வேளையில் எழுந்து தியானம் செய்வது மிகவும் சிறந்த தாகக் கருதப்படுகிறது.

பொருள்களில் பற்றுதல் குறையக்குறைய தியான மும் எளிதிலே கைகூடும். உதாரணமாக அதிகாலை வேளையில் தியானத்தில் நாம் அமர்ந்து கொண்டிருக்கும் பொழுது அடுப்பங்கரையில் பூனையின் ஓசை ஏதாவது கேட்டால், உடனே மனமானது, "ஐயையோ! காப்பிக்

குப் பாத்திரத்தில் பால் வாங்கி வைக்கப்பட்டிருக்கிறதே; மனைவியும் மற்றவர்களும் குறட்டைவிட்டுத் தூங்கிக் கொண்டிருக்கிறார்களே; பூனை ஒரு வேளை பாலைக் கொட்டிவிட்டால்.....இன்று காலை காப்பி கிடைக்காதே, என் செய்வது?'' என்று காப்பியைப்பற்றிய கவலையில் ஆழ்ந்து விடும். எனவே பொருள்களிடம் உள்ள பற்றுதல் குறைந்தால்தான் தியானமும் எளிதிலே கைகூடும்.

"பாவித்தல்" என்ற பதத்தினைத் தமிழில் மொழி பெயர்த்தல் மிகவும் கடினம். உள்ளம் தெளிந்து சிந்தனையைச் செலுத்தி புத்தி அதைப் புரிந்து கொண்டு உணர்ச்சி ஓங்கி, அதிலேயே ஈடுபடுதல் தான் 'பாவித்தல்' என்றாகிறது. "அனன்யதீ:" என்றால் அங்கும் இங்கும் ஓடி ஆடாத நிலைத்த புத்தி என்பது பொருள். ஒருமைப்பட்ட மனமே தியானத்தின் அடிப்படைத் தேவையாகும்.

## 39

आत्मन्येवाखिलं दृश्यं प्रविलाप्य धिया सुधीः ।
भावयेदेकमात्मानं निर्मलाकाशवत्सदा ॥

ஆத்மந்யே வாகிலம் த்ருச்யம்
ப்ரிவிலாப்ய தியாஸுதி: ।
பாவயேதேகமாத்மானம்
நிர்மலாகாசவத் ஸதா ॥

புத்திமான் காணும் பொருளனைத்து மான்மாவிற்
புத்தியா லொன்றல் புரிவித்தே - சுத்தமாம்
விண்ணென வொன்றாய் விளங்கிடு மான்மாவை
யெண்ணுக வெப் போதுமே.

[ஸ்ரீ ரமணர்]

सुधीः ஸுதீ: - நல்லறிவாளன், आत्मनि एव ஆத்மனி ஏவ - ஆத்மாவிலேயே, अखिलं அகிலம் - எல்லா, दृश्यं த்ருச்யம் - பார்க்கப்படும் பொருளையும் (உலகம் முழுமையும்), धिया தியா - புத்தியால், प्रविलाप्य ப்ரவிலாப்ய - அடக்கி, सदा ஸதா - எப்பொழுதும், निर्मल நிர்மல - அழுக்கற்ற आकाशवत् ஆகாசவத் - ஆகாயம் போல, एकं आत्मानं ஏகம் ஆத்மாநம்- ஒரே ஆத்மாவை, भावयेत् பாவயேத் - பாவிக்கவும்.

கருத்துரை : ஆத்மா ஒன்று. இந்த ஆத்மாவினுள்ளே இந்த உலகத்தை அடக்கிவிட வேண்டும். அது ஆகாயம் போல் நிர்மலமானது என்று தீர்மானிக்க வேண்டும்.

நகைப்பெட்டியொன்றினுள்ளே கண்ணைக் கவரும் தங்கச் சங்கிலி ஒன்று இருக்கிறது. அந்தச் சங்கிலியைப் பெண் ஒருத்தி பார்க்கிறாள். அது அவளுக்கு ஒரு அழகிய நகையாகவும், தனது கழுத்தில் அணிந்தால் தனது அழகை அதிகரிக்கும் ஒரு அழகு சாதனமாகவும் தெரிகிறது. அந்தப் பெண்ணின் தந்தையும் அந்த நகையைப் பார்க்கிறார். அது அவருக்கு ஆயிரம் ரூபாய் பெறுமான ஒருபொருளாகக் காட்சி தருகிறது. அந்த நகையின் அழகு அவரைக் கவருவதில்லை. மாறாக அதன் ரூபாய் மதிப்புத்தான் அவரது கவனத்தை ஈர்க்கிறது. ஏன் எனில் அந்த நகையைத் தனது பெண் வாங்க வேண்டுமென்று அடம்பிடித்தால் தன் கையை விட்டு எவ்வளவு பணம் செலவாகும் என்பதுதான் அவரது கவலையாதலால், அது அவருக்கு ஆயிரம் ரூபாயாகக்காட்சி தருகிறது. அதே

நகையைத் தட்டான் ஒருவன் பார்க்கிறான். அது அவனுக்குத் தங்கமாகக் காட்சி தருகிறது. அந்த நகையின் அழகு, அந்த நகையின் மதிப்பு, அந்த நகையின் எடை எவ்வளவு, எத்தனை கிராம் தங்கம் அதில் இருக்கிறது என்பதில்தான் அவனது கவனம் செல்கிறது.

ஒரே பொருளைப் பார்த்த மூவரில், எவர் பார்த்தது உண்மை? பெண், பெண்ணின் தந்தை, தட்டான் ஆகிய மூவரும் கண்டது ஒரே தங்கச் சங்கிலியைத் தான். ஆனால் அவர்கள் அதை வெவ்வேறு கோணங்களிலிருந்து கண்டனர். அது நகை என்பது உண்மைதான். அதன் மதிப்பு ஆயிரம் ரூபாய் என்பதும் உண்மைதான். இருப்பினும் அடிப்படையில் அந்தச் சங்கிலி தங்கம் தவிர வேறில்லை. அதாவது தங்கம்தான் அதனது மூலப் பொருள். அதைத் தங்கமாகக் கண்டவன்தான் அதனது உண்மைத் தத்துவத்தைக் கண்டவனாவான். மற்றது எல்லாம் அதன் வெவ்வேறு தோற்றங்களேயாகும்.

மேற்காணும் உவமானததில் காண்பது போல் இயற்கையில் தோற்றத்திற்கு வந்துள்ளது அனைத்தும் ஆத்மாவின் தோற்றங்களேயாகும். அனைத்தினுடைய அடிப்படை உண்மைத் தத்துவம் ஆத்மாதான். எனவே அனைத்தையும் ஆத்ம சொரூபமாகக் காண்பவனே உண்மையில் உண்மையைக் காண்பவன் ஆவான்.

ஆத்மன் நிர்மலமான ஆகாயத்துடன் ஒப்பிடப்படுகிறது. நாம் விண்ணில் காண்பது அனைத்தும் ஆகாயத்தினுள் அடக்கம். அனைத்தையும் தன்னுள் அடக்கிக்

கொண்டிருக்கும் ஆகாயம் அவற்றால் எந்தவிதத்திலும் பாதிக்கப்படுவது கிடையாது. அதுபோல அனைத்து இயக்கங்களுக்கும் அடிப்படையாக அமையும் ஆத்மன் அவற்றால் சிறிதேனும் பாதிக்கப்படுவதில்லை.சினிமா புரொஜெக்டரிலிருந்து கிளம்பும் ஒளியின் துணையால் திரை மீது பல்வேறு சலனங்கள் தென்படுகின்றன. ஆனால் அந்தத் திரை மீது உண்டாகும் சலனங்களி னால் புரொஜக்டர் எந்த விதத்திலும் பாதிக்கப்படாதிருப் பது போல், மற்றெதனாலும் ஆத்மனும் பாதிக்கப்படாது இருக்கிறது. இந்த உண்மையை உணர்பவரே மெய்யறிவு கைவரப்பெற்றவர் ஆவர். இந்த மெய்யறிவை அடைவது தான் மனித வாழ்க்கையின் இறுதி இலட்சியமாகும்.

# 40

रूपवर्णादिकं सर्वं विहाय परमार्थवित् ।
परिपूर्णचिदानन्द स्वरूपेणावतिष्ठते ॥

ரூபவர்ணாதிகம் ஸர்வம் விஹாய பரமார்தவித்: ।
பரிபூர்ண சிதானந்த ஸ்வரூபேணாவதிஷ்டதே ॥

உள்ள துணர்ந்தொ னுருவம் வருணமுத
லுள்ள மயல்க ளொருங்கொழித் - துள்ளந்
திகழ்பரி பூன்ற சிதானந்தந் தானாத்
திகழ்ந்திடுவ னாளுந் தெளி.

[ஸ்ரீரமணர்]

रूप ரூப - உருவம், वर्ण வர்ண - நிறம், आदिकं ஆதிகம் - முதலியவை கொண்ட, सर्वं ஸர்வம் -எல்லாவற்றையும்,

विहाय விஹாய - விட்டுவிட்டு, परमार्थवित् பரமார்த்த வித் - பரம்பொருளைத் தெரிந்தவன், परिपूर्ण பரிபூர்ண - முழுமை நிறைந்த, चिदानन्द சிதானந்த - அறிவின் மயமான, स्वरूपेण ஸ்வரூபேண - தன் சொரூபத்திலே, अवतिष्ठते அவதிஷ்டதே - நிற்கிறான்.

கருத்துரை : கண், காது, மூக்கு முதலியவற்றின் மூலம் ஒளி, ஒலி, மணம் முதலியவைமயமாகத் தோன்றும் இந்த உலகப்பொருள்களிலிருந்து பிரிந்து தன்னை உணரும் ஞானி அறிவின் மயமான தன் சுய சொரூபத்திலேயே நிலைத்துவிடுகிறான்.

இயற்கையில் எங்கு நோக்கினும் வெளிப்படையாக வேற்றுமைகளையே காண்கிறோம். ஒரே மாதிரியான அல்லது ஒன்று போலமையும் குணாதிசயங்களைக் கொண்ட இரண்டு பொருள்களை இயற்கையில் காண்பதரிது. உருவத்தில் ஒன்று போல காணப்படும் இரட்டையர்களுக்கிடையே கூட அவர்களது குணங்களிலே பெருத்த வேறுபாடு காணப்படுகிறது.

கண்ணுக்குப் புலப்படும் ஸ்தூலப் பொருள்களுக்கிடையேதான் இந்த வேற்றுமை இருக்கிறது என்பதல்ல. கண்ணுக்குப் புலப்படாத அணுக்களுக்கிடையேயும் இந்த உண்மை பொருந்துகிறது. அண்டத்தின் அடிப்படையாக அமைவன அணுக்கள். அணுக்களின் சேர்க்கையினால்தான் பிரபஞ்சமே தோற்றத்திற்கு வந்திருக்கிறது. அந்த அணுக்களினுள்ளே எலக்ட்ரான்கள், புரோட்டான்கள், நியூட்ரான்கள், மெஸான்கள் எனப்படும் பல்வேறு

நுண்ணணுத்துகள்கள் இருக்கின்றன. அந்தப் பல வகை யான நுண்ணணுத் துகள்களுக்கிடையே, எல்லாவிதத்தி லும் ஒன்று போலமையும் இரண்டு துகள்கள் கிடையாது என்று நவீன விஞ்ஞானம் நமக்குக்கூறுகிறது. இந்த விதத்தில் பார்த்தால் 'வேறுபாடுதான் இயற்கையின் அழகு' என்பது முற்றிலும் உண்மையாகும். ஆனால் புற அளவில் நிலவும் இத்தனை வேறுபாடுகளுக்கி டையே அடிப்படையில் பரந்து விரிந்து ஒற்றுமையும் நிலவுகிறது என்பதை மெஞ்ஞானம் நமக்கு எடுத்துப் புகட்டுகிறது. அந்த ஒற்றுமை அம்சம் என்ன என்பதைத் தான் 'ஆத்ம போதம்' போன்ற தத்துவ நூல்கள் நமக்கு எடுத்து விளக்குகின்றன.

எத்தனை மொழி பேசும் மக்கள், எத்தனை வித உருவ அமைப்புடைய மக்கள், எத்தனை வித உணவுப்பழக்கமுள்ள மக்கள், எத்தனை வித மனப்பாங்குடைய மக்கள், இவ்வா றாக எத்தனை எத்தனையோ வேறுபாடுகளை நாம் மக்கள் மத்தியிலே காண்கிறோம். ஆனால் இத்தனை வேறு பாடுகளுக்கிடையேயும் அவர்களிடையே அநேக ஒற்றுமை அம்சங்களும் இருக்கின்றன. அவையானவன: அவர்கள் அனைவரும் ஒரே மனித இனத்தினர். அவர்கள் அனை வரும் மனத்தை உடையவர்கள். அவர்கள் அனைவரும் ஒரே கடவுளின் குழந்தைகள். அவர்கள் அனைவருள்ளும் ஒரே ஆத்ம சொரூபம் இலங்குகின்றது. வேற்றுமைகளை விடுத்து ஒற்றுமைகளைக் காணும் திறம் படைத்தவனே உண்மையில் அறிஞன் ஆவான். அவனே பண்டிதன். அவனே மெய்ஞானி.

மெய்ஞானம் கைவரப்பெற்றவனுக்கு எந்த நிலைமையிலும் வேற்றுமையே தென்படாது. அவனைப் பொறுத்தமட்டில் அவன் எங்கும் எதிலும் ஒரே ஆத்ம சொரூபத்தையே காண்கிறான். சீனியில் செய்யப்பட்ட பல வகை மிட்டாய்கள், ஆடு, கோழி, வாத்து போன்ற பல வடிவங்களில் கடையில் இருக்கின்றன. ஒரு குழந்தை தனக்கு ஆடு வேண்டும் என்கிறது. மற்றொன்று வாத்துதான் வேண்டு என்கிறது. ஆனால் கடைக்காரனுக்கோ அவை எல்லாம் ஐம்பது பைசாப் பெறுமான தின்பண்டங்கள்தான் என்பது நன்கு தெரியும். அதுபோல மெய் அறிவு கைவரப்பெறாதவர்கள் உருவத்திலும், நிறத்திலும் கட்டுண்டு பொருள்களுக்கிடையே வேறுபாடு பாராட்டுகின்றனர். ஆனால் மெய் அறிவு வாய்க்கப் பெற்றவனோ அனைத்தும் ஆத்ம சொரூபம் என்ற உணர்வில் லயித்து நின்று எப்பொழுதும் பிரம்மானந்தத்தில் திளைத்து நிற்கிறான்.

## 41

ज्ञातृज्ञानज्ञेयभेदः परे नात्मानि विद्यते ।
चिदनन्दैकरूपत्वात् दीप्यते स्वयमेव तत् ॥

ஜ்ஞாத்ரு ஜ்ஞான ஜ்ஞேய பேத:
பரே நாத்மநி வித்யதே ।
சிதானந்தைக ரூபத்வாத்
தீப்யதே ஸ்வயமேவ தத் ॥

அறிவா னறிவோ டறிபடுவ பேத
முறுபரமான் மாவி லுறாதே - யறிவின்
புருவாயொன் றாயஃ துறுவத னாற்றன்
னுருவாலே தானொளிரு மோர்.

[ஸ்ரீ ரமணர்]

ज्ञातृ ஞாத்ரு அறிபவன் - ज्ञान ஞான - அறிதல், ज्ञेय ஞேய - அறியப்படு பொருள் என்கிற, भेदः பேத: - மாறு பாடு, परे आमनि பரே ஆத்மநி - பரமாத்ம நிலையில், न विद्यते ந வித்யதே இருப்பதில்லை, चिदानन्द சிதானந்த - அறி வின்பமான, एक रूपत्वात् ஏக ரூபத்வாத் - ஒரே தன்மை கொண்டதால், तत् தத் - அது, स्वयमेव ஸ்வயமேவ - தானே, दीप्यते தீப்யதே - ஒளிர்கிறது.

கருத்துரை : பரமாத்மாவில் அறிபவன், அறியப்படு பொருள், அறிவு என்னும் வேறுபாடெல்லாம் கிடையாது. எல்லையற்ற பேரானந்தமே அதனது இயல்பு என்பதால் அது யாண்டும் தானே ஒளிர்ந்து கொண்டிருக்கிறது.

மனித வாழ்வின் இலட்சியம் ஆத்ம ஞானத்தை அடை வதே ஆகும். ஆத்ம ஞானம் என்றால் என்ன? அனைத்தும் அடிப்படையில் ஒரே ஆத்ம சொரூபமே என்று உணர் வதே ஆத்ம ஞானம் ஆகும். ஆத்ம ஞானம் பெற்றபின் ஏற்படும் நிலை என்ன? அறிபவன், அறியப்படு பொருள், அறிவு என்ற வேறுபாடுகள் எதுவும் இல்லாது அறிவு சொரூபமாகவே ஆகிவிடுதலேயாகும்.

நாம் எவரையாவது சந்தித்து "வாழ்க்கையில் உன் இலட்சியம் என்ன?" என்று கேட்பதாக வைத்துக் கொள் வோம். சாதாரணமாக நமக்கு என்ன பதில் கிடைக்கும்? "கவலையின்றி எப்பொழுதும் ஆனந்தமாக இருக்க வேண் டும்" எவர் எப்படிப் பதில் சொன்னாலும் அனைத்தும் அடிப்படையில் இப்படித்தான் முடியும். நாம் நமது உடல், மனம், புத்தி ஆகியிவற்றின் துணைகொண்டு பலவிதத் தில் இன்பத்தைப் பெற இடையறுது முயன்ற வண்ணம் இருக்கிறோம். நமது இலட்சியம் துன்பம் சிறிதும் கலவாத இன்பத்தை அடையவதேயாகும். ஆனால் பெறுவதோ தோன்றி மறையும் தாற்காலிக இன்பம். இதற்கு என்ன காரணம்? புலன் வழி இன்பங்கள் யாவும் தோன்றி மறை

யும் தன்மையவை. அவை உண்மையில் துன்பங்களே தவிர இன்பமாக மாட்டா. உண்மையான இன்பம் புலன்கள் கடந்த பெருநிலையில் உள்ளது. ஆத்மா புலன்களுக்கு அப்பாற்பட்டது. புலன்களால் எட்டப்பட முடியாதது. உண்மை இன்பம் ஆத்மனில் தான் உள்ளது. எனவே உண்மையில் உள்ளதான ஆத்மனைப் பற்றி அறிவு கைவரப் பெறுகையில் அறிபவன், அறியப்படுபொருள், அறிவு என்ற வேறுபாடெல்லாம் அற்றுப்போகின்றன. எஞ்சுவது ஆத்மன் ஒன்றுதான். அது எப்படி இருக்கிறது? தன்னில் தானாய் ஒளிர்கிறது.

உலகில் காணப்படும் பல்வேறு வேற்றுமைகளையெல்லாம் நாம் மூன்று வகைகளில் அடக்கி விடலாம். (1) ஸஜாதீயம் (2) விஜாதீயம் (3) ஸ்வகதம்.

ஸஜாதீயம்: ஒரே இனத்தில் உண்டாகும் வேற்றுமை இது. உதாரணமாக ஓரிடத்தில் பல குதிரைகள் நின்று கொண்டிருக்கின்றன என்று வைத்துக் கொள்வோம். அவற்றிற்கிடையே கறுப்புக் குதிரை, வெள்ளைக் குதிரை, வரிக்குதிரை என்றெல்லாம் வேறுபாடுகள் இருந்தால் அந்த வேறுபாடு ஸஜாதீய வேறுபாடு எனப்படும்.

விஜாதீயம்: வேற்று இனங்களிடையே ஏற்படும் வேறுபாடு இது. மனிதன், கழுதை, கல், காக்கை போன்றவை வேறு வேறு இனங்களைச் சேர்ந்தவையல்லவா! இவற்றிடையே ஏற்படும் வேற்றுமைக்கு விஜாதீய வேற்றுமை எனப்பெயர்.

ஸவகதம்: ஒன்றிற்குள்ளேயே நிலவும் வேறுபாடு இந்த வகை. உதாரணமாக கால், கை, கண், வயிறு, தலை, மூக்கு போன்ற பல்வேறு உறுப்புக்கள் மனித உடலில் உள்ளன. ஒரே மனித உடலில் காணப்படும் இவை அமைப்பிலும், செயல் முறையிலும் தம்மளவில்

வேறுபட்டவையாகும். இத்தகைய வேற்றுமைக்கு ஸ்வகத வேற்றுமை எனப் பெயர்.

மேற்காணும் மூவகை வேறுபாடுகள் எல்லாம் கால, தேச, வர்த்த மானத்திற்கு உட்பட்ட எல்லைக்குட்பட்ட குண மும், குறியும் கொண்ட கட்புலனாகும் பொருள்களைப் பொறுத்தமட்டில்தான். குணமற்ற, குறியற்ற புலன்களுக்கு அப்பாற்பட்ட கால, தேச, வர்த்தமானத்தில் கட்டுப்படாத ஆத்மனில் இத்தகைய வேறுபாடுகள் எதுவும் கிடையா.

பரமாத்ம ஞானம், பொறி, புலன் அனுபவங்களுக்கு அப்பாற்பட்டது என்ற போது அது எத்தகையதாக இருக்க முடியும் என்ற ஐயம் ஒருவனுள்ளே எழுவது இயற்கை. அதை விளக்குவதற்காக 'ஆத்மன் ஸ்வயம் ஜோதியாகப் பிரகாசிக்கிறது' என்ற பதம் பிரயோகிக்கப்படுகிறது.

இருள் கவ்வியிருக்கும் அறையில் இருக்கும் பொருள் கள் ஒன்றும் கண்ணுக்குத் தெரிவதில்லை. இருளைப் போக்குவதற்காக விளக்கு ஒன்றை ஏற்றுகிறோம். விளக் கின் ஒளியில் ஏனைய பொருள்கள் விளக்கப்படுகின்றன. அதாவது கண்ணுக்குப் புலனாகின்றன. ஏனைய பொருள் களை விளக்குவதுடன் நின்று விடாது அந்த விளக்கானது தன்னையும் தானாகவே விளக்கிக் கொள்ளுகிறது. அந்த விளக்கு அங்கே இருப்பதற்கு எது சான்று? அதுவே தான் சான்று. அதைப்போல ஆத்மனுடைய பிரகாசத்தில் ஏனைய அனைத்தும் அதாவது மனிதனுடைய மனம், புத்தி போன்றவை அனைத்தும் உணரும் திறனைப்பெற வல்லவையாகின்றன. ஆனால் ஆத்மன் இருப்பதற்கு எது சான்று? அதுவே தான் சான்று. எனவே தான் "ஸ்வய மேவ தீப்யதே" அதாவது தானாகவே ஒளிர்கி றது என்ற வாக்கியம் சுலோகத்தில் உபயோகிக்கப்பட்டு இந்தக் கருத்தை வலியுறுத்துகிறது.

## 42

एवमात्माऽरणौ ध्यानमथने सततं कृते।
उदिताऽवगतिज्वाला सर्वाज्ञानेन्धनं दहेत् ॥

ஏவமாத்மா(அ)ரணௌ த்யா
னமதநே ஸததம் க்ருதே ।
உதிதாவகதிர் ஜ்வாலா
ஸர்வஞ்ஞாநேந்தநம் தஹேத் ॥

ஆன்மா வெனும வவரணியி லிவ்வித
மான்மத் தியான வகமதனந் - தான் முயன்று
சந்ததஞ் செய்தலாற் சார்ஞானத் தீமடமை
சந்தனமெல் லாமெரிக்கு மே.

[ஸ்ரீ ரமணர்]

एवं ஏவம் - இம்மாதிரி, आत्म अरणौ ஆத்ம அரணௌ ஆத்மாவாகிற அரணிக் கட்டையில், ध्यान த்யான - தியானம் என்கிற, मथने மதனே - கடைதல், सततं ஸந்ததம் - எப்பொழுதும் தொடர்ந்து, कृते க்ருதே - செயல்படும் பொழுது, उदिता உதிதா - உதித்து, अवगतिः அவகதி: - வெளியாகிற, ज्वाला ஜ்வாலா - தீ நாக்கு, सर्व ஸர்வ - எல்லாவித, अज्ञान அஞ்ஞான - அஞ்ஞானமாகிற इन्धनं இந்தனம் - எரி துரும்புகளையும் दहेत् தஹேத் - எரித்து விடுகிறது.

கருத்துரை : ஆத்மாவின் உயர், கீழ்ப் பகுதிகளை இரண்டு அரணிக் கட்டைகளாகக் கொண்டு அவற்றிற் கிடையே தியானம் என்ற கடையும் செயலை விடாமல் செய்தால் அப்பொழுது ஞானமாகிய தீப் பொறி கிளம்பும். அது நெருப்பாக மாறி எல்லா அஞ்ஞானங்களையும் பொசுக்கிவிடும்.

அஞ்ஞானத்தை அகற்றி ஞானத்தை அடையும் மார்க்கம் இந்த சுலோகத்தில் ஒரு அழகிய உவமானம் மூலம் நன்கு விளக்கப்படுகிறது.

இந்த சுலோகத்தில் தரப்பட்டிருக்கும் உருவகம் பழங்காலத்தில் நெருப்பு உண்டாக்கும் விதத்தைக் குறிக்கிறது. நமது முன்னோர்கள் அரணிக் கட்டைகளை உபயோகித்து நெருப்பை உண்டாக்கினர். இரண்டு அரணிக் கட்டைகள் எடுத்துக் கொள்ளப்படும். அவற்றின் முனைகளில் உள்ள குழிகளில் மேல் கீழாக ஒரு கட்டை பொருத்தப்பட்டிருக்கும். ஒருவன் மேலேயும் அடியிலும் உள்ள இரண்டு கட்டைகளையும் அழுத்திப் பிடித்துக் கொள்வான். மற்றொருவன் நடுக்கட்டையில் கயிறைச் சுற்றி மத்தைச் சுற்றுவது போலக் கயிற்றைச் சுற்றி இழுப்பான். அது பார்ப்பதற்குத் தயிர் கடைவது போல் இருக்கும். சுலோகத்தில் காணப்படும் 'மதனம்' என்ற வார்த்தை கடைதல் என்று பொருள்படுகிறது. அப்படிக் கயிற்றைச் சுற்றி இழுக்கும் பொழுது தீப்பொறி கிளம்பும். பஞ்சை வைத்து அது தீப்பற்றும்படிச் செய்து மற்ற எரி பொருட்களையும் சேர்த்து நெருப்பு உண்டாக்குவார்கள். மேல் கட்டைகளை அழுத்திப் பிடித்து கயிற்றினால் நடுக்கட்டையை வேகமாகச் சுற்றச் சுற்ற தீ சீக்கிரம் கிளம்பும்.

கைவல்ய உபநிஷதத்தில் இந்த 'ஞானத்தீ' உண்டாக்கும் முறை விளக்கமாக விவரிக்கப்பட்டிருக்கிறது. தன்னுடைய புத்தியின் மேல், கீழ்நிலைகளுக்கிடையே மகாவாக்கியமாகிற கட்டையை வைத்துக் கடைய வேண்டும். அப்பொழுது ஞானத் தீ எழும்.

அஞ்ஞானம் என்பது, 'தான் அடிப்படையில் அழியாத அமர ஆத்மன்' என்ற உண்மையை அறியாததால் உடல் புத்தி, முதலியற்றுடன் தன்னை ஒன்றுபடுத்திக் காண்பதேயாகும்.

ஆத்மாவின் உயர் கீழ்ப் பகுதிகளுக்கிடையே தியானம் செய்ய வேண்டும் என்பதன் பொருள் என்ன என்பது பற்றிச் சற்றுப் பார்ப்போம். 'நான் இந்த உடல், புத்தி, இந்த வீடு என்னுடையது. இவள் என் மனைவி, இவன் என் மகன்' என்று எண்ணுதல் கீழான நிலையாகும். இதுதாம் பொதுவாக நாம் இருக்கும் மயக்க நிலையாகும். இந்தக் கீழ்நிலையிலிருந்து நாம் அடைய வேண்டிய உயர்நிலை சச்சிதானந்தப்பெருநிலையாம் அத்மானந்தத்தை அடையவதாகும். கீழ்நிலையாம் மயக்க நிலையிலிருந்து மேல்நிலையான சதானந்த நிலைக்குப் போனதற்குரிய சாதனம், யாண்டும் 'நான் அடிப்படையில் அழியாத அமர ஆத்மனே'; 'அஹம் பிரம்மாஸ்மி', 'அஹம் ஆத்மா பிரம்ம' என்ற மகா வாக்கியங்கள் குறிக்கும் உயர் தத்துவம் அடங்கிய தியானத்தில் சதா திளைத்து நிற்றலாகும். 'எண்ணிய எண்ணியாங்கு எய்துவர்' என்பதற்கேற்ப உயர்ந்த எண்ணத்தை எண்ணி எண்ணமயமாகவே இறுதியில் ஆகிவிடுவதுதான் பிறப்பெடுத்ததன் நோக்கமாகும்.

எண்ணத்தினால்தான் மனிதன் உருவாகிறான். 'உன் எண்ணங்கள் எப்படியோ அப்படியேதான் நீயும் அமைகிறாய்' என்பது தான் மூதுரை. உடலைப்பற்றி எண்ணுகிறவன் உடல் உபாதைகளினால் பாதிக்கப்படுகிறான். ஆத்மாவில் சதா தியானித்து இருப்பவன் ஆத்மமயமாக ஆகி விடுகிறான். கடைதல் என்ற வார்த்தையானது, மோரில் அமைந்திருக்கும் வெண்ணையானது கடைந்தால்தான் கிடைப்பது போன்று, தியானத்தினால்தான் ஆத்ம ஞானம் என்னும் வெண்ணையும் உலகப் பாசங்களில் சிக்கித் தவிக்கும் ஜீவனுக்குக் கிட்டும் என்பதைக் குறிக்கிறது.

## 43

अरुणेनेव बोधेन पूर्वं संतमसे हृते।
तत आविर्भवेदात्मा स्वयमेवांशुमानिव ॥

அருணேநேவ போதேந பூர்வம் சந்தமஸே ஹ்ருதே ।
தத ஆவிர்பவே தாத்மா ஸ்வ்யமேவாம் சுமாநிவ ॥

அருணனா லேயல் கலுதல் போன்முன்
மருவறி வாலம் மடமை - யிரியவே
பொங்குமான் மாபரி பூரணமாகவே,
பொங்குமா தித்தனைப் போல்.

[ஸ்ரீ ரமணர்]

अरुणेन इव அருணேந இவ - அருணனைப் போல, बोधेन போதேந - ஞானத்தால், पूर्वं एव பூர்வம் ஏவ, संतमसे ஸந்தமஸே - நல்ல இருட்டு, हृते ஹ்ருதே - நீக்கப்பட, ततः தத: - பிறகு, आत्मा ஆத்மா - ஆத்மாவானது, स्वयमेव ஸ்வயமேவ - தானே, अंशुमान् इव அம்சுமான் இவ - சூரியன் போல, आविर्भवेत् ஆவிர்பவேத் - உதிக்கும்.

கருத்துரை : சூரியன் உதயமானவுடனே இருள் தானே அகன்று விடுகிறது. அது போல 'நாம் மனம், புத்தி இவை ஒன்றும் அல்ல, அழியாத ஆத்மன்' என்ற ஞானம் உண்டானவுடனேயே மனத்தைக் கவ்வியிருந்த அஞ்ஞான இருள்தானே மறைந்து விடுகிறது. அறியாமையாம் இருள் அகல்கையில் ஞான சூரியன் தானே உள்ளத்தில் ஒளிர்வான்.

ஸ்ரீசங்கராச்சாரியார் பாதயாத்திரையாகப் பன்முறை பாரதத்தை வலம் வந்த பெருமை படைத்தவர் ஆவார். இயற்கையுடன் ஒன்றுபட்டு இயற்கைக் காட்சிகளைப் பூரணமாக அனுபவிக்கக் கொடுத்து வைத்த பேரருளாளர் அவர்.

காலையில் கதிரவன் தன் செங்கிரணங்களைப் பரப் பிக் கொண்டு கிழக்கு திசையில் உதிக்கிறுன். இது தினமும் நிகழும் ஒரு சாதாரண இயற்கைக் காட்சியாகும். அந்தக் காட்சியை நாம் எல்லோரும் தான் பார்க்கிறோம். இந்தக் காலத்தில் அதைக் கூட கண்டு அனுபவிக்க முடியாத நபர்கள் ஏராளம். ஏனெனில் அவர்கள்தான் படுக்கையை விட்டு எழுந்திருப்பதே எட்டு மணிக்குப் பிறகு தானே! நாம் பார்ப்பது எதை? சூரியனை. சூரி யன் கிழக்கே உதயமாகின்றுன். பறவையினங்கள் துயில் நீங்கி வானத்தில் வரிசை வரிசையாகப் பாடிக்கொண்டே செல்லுகின்றன. குடியானவர்கள் தோளிலே கலப்பையை ஏந்திக் கொண்டு வயலுக்குச் செல்லுகின்றனர். யாத வர்கள் பால் கறக்க வேண்டி மாடுகளை ஓட்டிக்கொண்டு செல்கின்றுர்கள். இன்னும் இவை போன்ற எத்தனை எத் தனையோ காட்சிகள்! அனைத்துக் காட்சிகளையும் நாம் பார்க்கிறோம். பார்த்தவுடனே மறந்து விடுகிறோம். அவ்வ ளவுதானே!

ஸ்ரீசங்கரரும் சூரியோதயத்தைக் கண்டார். கண்டதும் அவருக்கு ஒரு பெரிய ஆத்ம தத்துவம் புலனாயிற்று. அதுதான் நமக்கும் அவருக்கும் உள்ள வேற்றுமையாகும். சூரிய உதயம் அவருக்குப் புகட்டிய பாடம் என்ன?

அதிகாலையில் சூரியன் கிழக்கே தோன்றுவதற்கு முன்னர் அதனுடைய செங்கதிர்கள் பூமியைக் கவ்வியி ருக்கும் இருளை அகற்றுகின்றன. சூரியனது கதிர்களால் பூரணமாக இருளானது அகற்றப்பட்ட பின்னர் ஒளிமய மான வானத்தில் சூரியன் தோன்றுகிறது. அதாவது நமது பாதை தெரிய வருகிறது. அதைப் போலவே மறை நூல்களைப் படித்தல் மற்றும் ஆன்மீகப் பயிற்சிகளின் மூலமாக ஒருவனது மனத்தில் குடிகொண்டிருக்கும் காமம், வெகுளி, மயக்கம் போன்ற தீய குணங்களை அகற்ற ஒருவன் முதற்கண் முனைய வேண்டும். அவ்வாறு

முனைந்து மனத்திலுள்ள தீய குணங்களை அகற்றுவ தானது மனத்தைக் கவ்வியிருந்த அஞ்ஞான இருளை அகற்றுவதற்கு ஒப்பாகிறது. அத்தகைய உள்ளத்தில் ஆத் மனாகிய சூரியன் ஒளிர்கிறது. அதாவது 'ஆத்ம போதம்' உண்டாகிறது. சூரிய உதயத்திற்கு எவ்விதம் வேறு எத னுடைய உதவியும் தேவை இல்லையோ அதுபோலவே ஆத்ம போதத்தை அடைவதற்கும் வெளி உதவி எதுவும் அவசியமில்லை. அறிவின் துணையினால் அறியாமையை அகற்றுகின்ற பொழுது தானே ஆத்ம ஞானம் கைவரப் பெறுகிறது.

## 44

आत्मा तु सततं प्राप्तोप्यप्राप्तवदविध्यया ।
तन्नाशे प्राप्तवत्भाति स्वकंठाभरणं यथा ॥

ஆத்மா து ஸததம் ப்ராப்தோ
(அ)ப்யப்ராதவத வித்யயா ।
தந்நாசே ப்ராப்தவத்பாதி
ஸ்வகண்டாபரணம் யதா ॥

ஆன்மாவெப் போது மடைந்துளதே யானாலுந்
தான்மடமை யாலடை தாயரு - மான்மடிய
வெய்தப்பெற் ருற்போ லிலகுந்தன் கண்டவணி
யெய்தப்பெற் ருற்போ லவே.

[ஸ்ரீரமணர்]

आत्मा तु ஆத்மாது - ஆத்மாவோ, सततं ஸததம் - எப்பொழுதும், प्राप्तः ப்ராப்த: அபி - (கிடைத்து) உள்ளதாயிருந்த போதிலும், अविद्यया அவித்யயா - அவித்தை காரணமாக, अप्राप्तवत् அப்ராப்தவத் - அடையப்படாதது போல் (இருக் கிறது) तन्नाशे தந்நாசே - அது (அவித்தை) அழிந்தவுடன், यथा யதா - எப்படி, स्वकण्ठाभरणं ஸ்வகண்டாபரணம் - தன்

கழுத்திலுள்ள நகையோ, அப்படி, प्राप्तवत् ப்ராப்தவத் - கிடைத்தது போல, भाति பாதி - ஒளிர்கிறது.

கருத்துரை : ஆத்மனுக்குப் பிறப்பு, இறப்பு, வளர்ச்சி, தேய்வு என்பதெல்லாம் கிடையாது. அது எப்பொழுதும் உள்ளதொன்றுகும். எனினும் அறியாமை காரணமாக அடையப்படாதது போலத் தோன்றுகிறது. அவித்தை அழிந்தால் அது கிடைத்து விட்டது போலத் தோன்றுகிறது. கழுத்தில் உள்ள நகையைத் தொலைத்துவிட்டதாகத் தேடும் ஒரு பெண் அந்த மறதி மறைந்த பிறகு நகை மீண்டும் கிடைத்து விட்டதாக உணர்வது போல, ஆத்மா தொலையவும் இல்லை. கிடைக்கவும் இல்லை. நம் இயற்கை நிலையை அறியாமையால் மறந்தோம். சாதனை மூலம் மீண்டும் உண்மையை உணர்ந்தோம், அவ்வளவுதான்!

மனிதன் அடிப்படையில் ஆத்ம சொரூபம்தான். இந்த உடல், மனம், அனைத்தும் அவனல்ல. இருப்பினும் அறியாமையின் காரணமாக 'தான்' அல்லாததைத் 'தான்' எனவும் தனதல்லாததைத் தனதாகவும் அவன் கருதுகிறுன்.

பணக்காரர் வீட்டில் பணிபுரியும் பெண்மணி ஒருத்தி தனது எஜமான் வீட்டுக் குழந்தையைத் தன் மடியில் கிடத்தி 'என் கண்ணே', 'என் ராஜா' என்று கொஞ்சுகிறுள். அவள் அப்படிக் கொஞ்சுவதால் அது உண்மையில் அவளுடைய குழந்தை ஆகிவிடுமா? ஆகிவிடாது. தனது ஜீவனோபாயம் அந்த எஜமானரால் நடக்கிறது என்பதை அறிந்து அவள் தாற்காலிகமாக அந்தக் குழந்தையிடம் அன்பைச் செலுத்துகிறுள். அல்லது அன்புடன் இருப்பது போலக் காட்டிக்கொள்கிறுள். திடீரென்று ஒரு நாள் ஏதோ ஒரு தகராறு காரணமாக அந்த எஜமானர் அவளை வேலையிலிருந்து விலக்கி விடுகிறுர் என்று வைத்துக் கொள்வோம். அடுத்த நாள் முதல் அவள் அந்த வீட்டுப் பக்கமே வரமுடியாது. நேற்றுவரை 'என் கண்ணே'

என்று கொஞ்சிய குழந்தையை அவள் கண்ணெடுத்தும் பார்ப்பதில்லை. தன் போக்கிலே அவள் போகிறாள். தாற் காலிகமாக இருந்த பந்தமும் பாசமும் விட்டுப் போகிறது. இடையிலே ஏற்பட்ட அந்தச் சொந்தம் அவ்வளவுதான்!

நாம் எப்பொழுதும் ஆத்ம சொரூபம் தான். அதில் எந்தவித சந்தேகமுமில்லை. ஆனால் இடையிலே அறியா மையாகிய மயக்கம் நம்மை ஆட்கொண்டது. அதனால் நாம் ஆத்ம சொரூபம் என்பதை மறந்து எதையெல் லாமோ 'நான், நான்' என்று சொந்தம் பாராட்டினோம். பிறகு குருவருளாலும் திருவருளாலும் சன்மார்க்கத்தைக் கடைப்பிடித்து அறியாமை நீங்கி அறிவு கைவரப்பெறு கிறோம். சாதனையின் மூலம் மீண்டும் சுய அறிவு அதா வது தன்னைப் பற்றிய உண்மை ஞானத்தை அடையப் பெறுகிறோம்.

'ஸ்வகண்டாபரணம்' என்பது கழுத்தில் நகையைப் போட்டு மறந்து தேடும் நங்கையைக் குறிக்கிறது. நமது அன்றாட வாழ்வில் இது போன்ற எத்தனையோ நிகழ்ச்சிகளுக்கு நாம் ஆளாகிறோம். கழுத்திலே போட் டுக்கொண்ட நகை எங்கும் தொலைந்து போகவில்லை. அது கழுத்திலேதான் இருக்கிறது. அந்த மறதி போன பிறகு மீண்டும் நகை கிடைத்து விட்டது போல மகிழ்ச்சி ஏற்படுகிறது. அது போல சாதனையின் மூலம் நான் ஆத்மசொரூபம் தான் என்ற அறிவு கைவரப் பெறுகிறது. அதன் மூலம் மகிழ்ச்சி ஏற்படுகிறது. அதன் மூலம் நாம் புதிய ஆத்மா எதையும் சிருஷ்டி செய்து விடவில்லை.

என்றும் உள்ள ஒன்ருன 'ஆத்மன்' தான் அனைத்தின் பின்னும் இலங்குகிறது. அதுவே நாம் என்பதை உணர் வதே ஆத்ம போதமாகும்.

## 45

स्थाणौ पुरुषवद्भ्रान्त्या कृता ब्रह्मणि जीवता।
जीवस्य तात्त्विके रूपे तस्मिन्दृष्टे निवर्तते॥

ஸ்தாணௌ புருஷவத்ப்ராந்த்யா க்ருதா
ப்ரஹ்மணி ஜீவதா ।
ஜீவஸ்ய தாத்விகே ரூபே
தஸ்மின் த்ருஷ்டே நிவர்ததே ॥

பிரம்மத்திற் சீவன் பிராந்தியாற் கட்டை
புருடன்போற் கற்பிகன் பொய்யா - முருவத்தின்
றத்துவம் யாதென்று தானுணரி னவ்வுருவம்
வத்துமா காது மதி.

[ஸ்ரீரமணர்]

स्थाणौ ஸ்தாணௌ - தூணில், पुरुषवत् புருஷவத் - மனி தனைப்போல (பிசாசைக் கற்பித்துப் பார்ப்பது போல) भ्रान्त्या ப்ராந்த்ய - பிரமையினால், ब्रह्मणि ப்ரஹ்மணி - பிரும்மத்தில், जीवता ஜீவதா - ஜீவத்வ பாவனை, कृता க்ருதா - செய்யப்பட்ட (ஏற்படுத்தப்பட்)டதாக இருக்கிறது; जीवस्य ஜீவஸ்ய - ஜீவனுடைய, ताच्विके தாத்விகே - தத்துவத் தின் (உண்மை) रूपे ரூபே - தன்மை, तस्मिन् தஸ்மின் - அந்த ஆத்மனில், दृष्टे सति த்ருஷ்டே ஸதி - பார்க்கப்படுகிற பொழுது, निवर्तते நிவர்ததே - தீர்ந்து விடுகிறது.

கருத்துரை : தூணில் நபர் மயக்கத்தினால் பார்க் கப்படுவது போல் பிரம்மத்தில் ஜீவத் தன்மை ஏற்றி வைத்து உணரப்படுகிறது. ஜீவனிலேயே பிரம்மத்தைக் கண்டால் மயக்கம் அழிந்து விடுகிறது.

கருகரு என்று இருட்டும் வேளை. மனிதன் ஒருவன் ஜனசந்தடி அற்ற ஒரு இடத்தில் நடந்து சென்று கொண்டிருக்கிறான். அவன் இயற்கையிலேயே பயந்த சுபாவம் உள்ளவன். தனியனாய்ச் செல்லும் அவனது மனத்தில், 'ஐயோ! தனியாகச் செல்லுகின்றேனே. ஏதாவது பேய் பிசாசு வந்து என்னை இப்பொழுது அடித்துப் போட்டுவிட்டால் நான் என் செய்வேன்,' என்ற அச்சம் குடி கொள்கிறது. உடனே அவனது உடல் குப்பென்று வியர்த்துக் கொட்டுகிறது. அது மட்டுமல்ல கொஞ்ச தூரத்தில் ஏதோ ஒரு உருவம் நிற்பது போல அவனது கண்களுக்குத் தோன்றுகிறது. அவனிடம் அது பேயோ பிசாசோ என்ற பயத்தைக் கிளப்பி விடுகிறது. அவ்வளவு தான். அச்சத்தால் அவன் அப்படியே நின்றுவிடுகிறான்.

கொஞ்ச நேரம் அசையாது நின்றவன் தன் கண்ணுக்குத் தென்பட்ட உருவமும் எந்தவிதச் சலனமும் இல்லாது நிற்பது குறித்து வியப்புறுகிறான். தைரியத்தை வரவழைத்துக்கொண்டு அடிஅடியாக அதை நோக்கி முன்னேறுகிறான். பேய் போலத் தோற்றமளித்த உருவத்தை நோக்கிச் செல்லச் செல்ல அவனிடம் இருந்த அச்சம் குறைந்து தைரியம் கூடுகிறது. இப்பொழுது அதற்கு வெகு அருகில் அவன் வந்துவிட்டான். வந்தவுடன் தனக்குள்ளேயே சிரித்துக்கொள்கிறான். காரணம்? அவனைப் பேயாகப் பயமுறுத்தியது வேறு ஒன்றுமல்ல. பட்டமரம் ஒன்றின் வெட்டப்படாதிருந்த அடிப்பாகம்தான். வீணாகப் பயந்து செத்தோமே என்று தன்னைத் தானே கடிந்து கொண்டு அவன் அச்சம் நீங்கியவனாகத் தனது பாதையில் முன்னேறுகிறான்.

மரத்தின் தடியைப் பேயாக்கியது எது. அந்த மனிதனிடம் இருந்த அறியாமை. எத்தகைய அறியாமை? எதிரில் தெரிவது வெறும் தூணே, பேய் அல்ல என்ற அறிவு இல்லாமை. உண்மை நிலையின் அறிவு கைவரப் பெற்றதும் மயக்கம் ஒழிகிறது. அச்சம் அகலுகிறது.

மேற்கூறப்பட்ட திருஷ்டாந்தத்தில் உள்ளது போல நமது நடைமுறை வாழ்விலும் நாம் பொய்யை மெய்யாகவும் இல்லாததை இருப்பதாகவும், நிலையில்லாததை நிலைத்ததாகவும் எண்ணி ஏமாந்து போகின்றோம்.

அறியாமையின் காரணமாக அனாதியானதும், அறிவு சொரூபமானதும், எங்கும் நிறைந்ததும், எப்பொழுதும் உள்ளதுமான பிரம்மத்தை, அழிந்து போவதும், ஜடசொரூபமானதும் நிலையற்றதுமான ஜீவனில் ஏற்றி வைத்துக் காண்கிறோம். இங்கு ஜீவன் என்பது உடலுடன் தொடர்புள்ள மனம், புத்தி போன்ற மொத்தத்தின் தொகுப்பைக் குறிக்கிறது. பிரம்மனைப் பற்றிய உண்மை அறிவு கைவரப் பெறுதவரை பிரம்மனை ஜீவனில் காண்பதாகிய மயக்க நிலையில் நாம் இருக்கிறோம்.

'உள்ளது ஒன்றுதான். அதுவே பிரம்மம். அது எல்லா உபாதிகளுக்கும் அப்பாற்பட்டது. அறிவு மயமானது ஆனந்த சொரூபமானது' என்ற அறிவு கைவரப்பெற்றதும் பிரம்மனை ஜீவனில் கண்ட 'பிராந்தி' அல்லது மயக்கம் நீங்குகிறது. அறியாமை அகலுகிறது. அறிவு உதயமாகிறது. ஆனந்தம் கை கூடுகிறது.

உலகியல் வாழ்க்கையில் நாம் படுகின்ற அல்லல்களுக்கும் துன்பங்களுக்கும் அடிப்படைக் காரணம் ஏதாவதொரு வித மயக்கத்திற்கு நாம் உட்படுவதால் தான். நமது பிறவிப்பிணி நீங்க நாம் செய்ய வேண்டுவது பிரம்மத்தை ஜீவனில் காண்பதாகிய மயக்கநிலையிலிருந்து நம்மை விடுவித்துக்கொள்வது தான். அந்த மயக்கம் நீங்கினால் பிறவித்தளையும் அகல்கிறது. பெருநிலை கைகூடுகிறது.

# 46

तच्वस्वरूपानुभवादुत्पन्नं ज्ञानमञ्जसा ।
अहं ममेति चाज्ञानं बाधते दिग्भ्रमाआदिवत् ॥

தத்வ ஸ்வரூபானுபவாதுத் பந்நம் ஞானமஞ்ஜஸா ।
அஹம் மமேதி சாஞ்ஞானம் பாததே
திக்ப்ரமாதிவத் ॥

தத்துவசொ ரூபானு பூதியாற் றுனுதி
யுத்தமா ஞான முடனேயந் - மித்தையா
நானெனதஞ் ஞான நசிப்பிக்குந் திக்பிரமை
பானுவுத யத்தெனவே பார்.

[ஸ்ரீ ரமணர்]

तच्व स्वरूप தத்வ ஸ்வரூப - உண்மைத் தன்மையின், अनुभवात् அனுபவாத் - உணர்வினால், उत्पन्नं உத்பந்நம் - விளைந்த, ज्ञानं ஞானம் - அறிவு, अञ्जसा அஞ்ஜஸா - உடனே, अहं அஹம் - நான் என்கிறதும், मम इति च மம இதி ச - எனது என்கிறதுமான, अज्ञानं அஞ்ஞானம் - அறியாமையை, दिग्भ्रमादिवत् திக்ப்ரமாதிவத் - திக்பிரமையைப் போலே, बाधतें பாததே - நீக்கி விடுகிறது.

கருத்துரை : உண்மை சொரூபத்தின் உணர்வின் பலனாக ஏற்படும் ஞானம் உடனேயே நான், எனது என்ற அக்ஞானத்தை அகற்றி விடுகிறது. எவ்விதம் திக் பிரமை நீங்கினால் தெளிவு பிறக்குமோ, அது போலத் தத்துவத்தை உணர்ந்ததும் தெளிவு தோன்றுகிறது.

நோய்வாய்ப் படுவது மனித உடலின் இயல்பு. இரும்பாலாகிய பெரிய பெரிய இயந்திரங்களே சில பல வேளைகளில் பழுதுபட்டுப் போகையில் கேவலம் இரத்தம், சதை, எலும்பு, முதலியவற்றால் ஆன மனித யாக்கை எம்மாத்திரம்?

உடலில் ஏற்படும் பிணிகளைக் குணப்படுத்த வேண்டி மருத்துவரிடம் செல்லுகின்றோம். உடலில் ஜுரம் இருக்கிறது. தலை வலிக்கிறது. போதாதற்கு ஆங்காங்கு உடலின் மீது சிரங்குக் கட்டிகள் வேறு காணப்படுகின்றன. நோயாளியை நன்கு ஆராய்ந்த மருத்துவர் "உங்களுக்குப் பசி, ருசி எப்படி இருக்கிறது. உங்களால் உணவு உட்கொள்ள முடிகிறதா?" என்பன போன்ற பல கேள்விகளைக் கேட்கிறார். நோயாளி அதற்கு, "நாவில் ருசியில்லை, வயிற்றில் பசியில்லை. உண்ட உணவு சரிவர ஜீரணமாவதில்லை." என்று பதில்சொல்கிறான். அதைக் கேட்ட டாக்டர் அந்த நோயாளி அஜீரணத்தால் அவதிப் படுகிறான் என்பதைக் கண்டு கொள்கிறார். உடனே அவர் அந்த நோயாளியை வருத்தும் ஜுரம், தலைவலி, சிரங்கு ஆகியவற்றிற்கு மருந்து கொடுக்காமல் அவற்றின் அடிப் படைக் காரணமான அஜீரணத்தைப் போக்க வேண்டிய மருந்துகளைக் கொடுக்கிறார்.

நோயாளி மருந்தை உட்கொள்ளுகிறான். அஜீரணம் அகலுகிறது. கூடவே மற்ற தொந்தரவுகளும் நீங்குகின்றன.

மயக்கத்தின் காரணமாக, அறியாமையின் காரணமாக மனிதன் உலகப் பொருள்களுடன் தன்னை ஒன்றுபடுத்திக் கொண்டு 'இது நான் அது நான்' என்று அஹம்காரம் (நானென்ற எண்ணம் மேலோங்கினவன்) படைத்தவனாகிறான். மனிதனுக்கும் உலகப்பொருள்களுக்கும் இடையே ஏற்படும் உறவால் 'இது எனது அது எனது' என்ற மமகாரம் (எனது என்ற எண்ணம் மேலோங்கினவன்) கொண்டவனாகிறான். இந்த 'நான்' 'எனது' எண்ணங்களெல்லாம் ஏற்படக் காரணம் என்ன? மேலான ஆத்ம ஞானம் கைவரப் பெறாததால் 'தான் யார்' என்ற தத்துவ ஞானத்தை அடையப் பெறுகையில் யான் எனது எல்லாம் அற்றுப் போய் அவன் ஞான சொரூபமாகிறான்.

ஆத்ம ஞானத்தை அடைந்தவன் எல்லா அறிவையும் பெற்றவனாகிறான். எப்படி?

ஒருவன் ஒரு புதிய ஊருக்கு வந்திருக்கிறான். அந்த ஊரை வந்து அடைந்த சமயமோ அதிகாலை வேளை. இன்னும் விடியவில்லை. இருள் அகலவில்லை. தான் போய்ச் சேர வேண்டிய இடம் ஊரின் வடக்குப் புறத்தில் இருக்கிறது என்பது அவனுக்குத் தெரியும் ஆனால் எது வடக்கு எது தெற்கு என்பதைக் கேட்டுத் தெரிந்து கொள்ள அங்கே யாருமில்லை. எனவே செய்வதறியாது திகைத்து நின்று கொண்டிருக்கிறான். அப்பொழுது படிப் படியாக இருள் அகன்று சூரிய ஒளி பரவத் தொடங்குகிறது. உடனே அவனுக்குத் தாம் போக வேண்டிய வழியும் புலப்பட்டு விடுகிறது. எவ்விதம்? சூரியன் உதிக்கும் திசை கிழக்கு என்பது அவனுக்குத் தெரியுமாதலால் அதை வைத்துக் கொண்டு அவன் எல்லாத் திசைகளையும் அறிந்தவனாகிறான்.

மேற்சொன்னது போலவே ஆத்ம ஞானம் கைவரப் பெற்றவன் மற்ற எல்லாவித அறிவையும் அடைந்தவனாகிறான். ஏனெனில் ஆத்ம ஞானத்தில் மற்ற எல்லா வகையான ஞானமும் அடங்கி விடுகிறது.

## 47

सम्यग्विज्ञानवान्योगी स्वात्मन्येवाखिलं जगत् ।
एकं च सर्वमात्मानमीक्षते ज्ञानचक्षुषा ॥

ஸம்யக் விஞ்ஞான வாந் யோகீ
ஸ்வாத்மந்யே வாகிலம் ஜகத் ।
ஏகம் ச ஸர்வமாத்மாந மீக்ஷதே
ஞானசக்ஷுஷா ॥

நன்று தனையறிவிந் ஞானியாம் யோகியு
மொன்றுமெலாந் தன்னி லுறுவதை-யொன்ருன
தானெல்லா மாயுளதைத் தன்ஞானக்
கண்ணினாற்
ருன்காண்ப னென்றே தரி.

[ஸ்ரீரமணர்]

सम्यग् ஸம்யக் - நல்ல தெளிந்த, विज्ञानवान् விஞ்ஞான வாந் - அனுபவமாகவே உள்ள ஞானம் கொண்ட, योगी யோகீ - யோகி, स्व आत्मनि एव ஸ்வ ஆத்மனி ஏவ - தன் னுடைய ஆத்மாவிற்கு, अखिलं जगत् அகிலம் ஜகத் - முழு உலகத்தையும், எல்லாவற்றையும் எல்லா ஆத்மாவையும். एकं च सर्वमात्मानमीक्षते ஆத்மானம் ச - ஒரே ஆத்ம ஸ்வரூபமா கவும், ज्ञान चक्षुषा ஞான சக்ஷுஷா - ஞானக் கண்ணினால், ईक्षते ஈக்ஷதே இவ்விதம் பார்க்கமுடிகிறது.

கருத்துரை : நல்ல அனுபவ ஞானம் பெற்ற யோகி உலகம் முழுவதையும் (தன்) ஆத்மாவிலேயே பார்க்கிருன். அதே சமயம் எல்லா ஆத்மாக்களும் ஒன்றே என்றும் பார்க்கிருன். அவன் பெற்றிருக்கும் ஞானக் கண்ணுல் இவ்விதம் பார்க்க முடிகிறது.

விஞ்ஞானம், மெய்ஞானம் இரண்டுமே உண்மையை உணர்வதற்கான நாட்டத்தின் இரண்டு பகுதிகளேயா கும். விஞ்ஞானம் ஸ்தூலப்பொருட்களை அறியும் அறிவு. மெய்ஞானம் சூக்ஷ்ம தத்துவத்தை அறியும் அறிவு. கட்பு லனாகும் பொருள்களைப் பற்றிய ஆராய்ச்சியில் விஞ்ஞா னம் ஈடுபடுகிறது. கட்புலனாகாத ஆத்ம தத்துவத்தைப் பற்றிய ஆராய்ச்சியில் ஈடுபடுகிறது மெய்ஞானம். புறக் கருவிகளின் துணை கொண்டு பொருள்களை ஆராய்கி றது. விஞ்ஞானம். மனமாகிய அகக் கருவியின் துணை கொண்டு மனம் கடந்த பெருநிலையாம் பேரின்பத்தை அடைய உதவுகிறது மெய்ஞானம்.

உலகத்திலே நாம் பல வகையான பொருட்களைப் பார்க்கிறோம். தண்ணீர், பேனா, ஆப்பிள், மலை, ஆடு, பானை, தங்கம், இப்படி விதம் விதமான எத்தனையோ பொருள்கள். வகை வகையான ஜீவராசிகள். வகை வகையான பொருள்கள். அவை எண்ணற்றவை. இத்தனையையும் வெவ்வாறாக விஞ்ஞானி தன் கருவிகளின் துணை கொண்டு ஆராய்ந்தான். ஆராய்ந்ததன் முடிவு என்ன? இத்தனைப் பொருள்களும் ஜீவராசிகளும் அடிப்படையான ஒரு பொருளால் ஆக்கப்பட்டிருக்கின்றன என்பதே அது. அது எந்தப் பொருள்? எலெக்ட்ரான், புரோட்டான் போன்ற நுண்ணணுத்துகள்கள்! நம் கண்களுக்கு வெவ்வேறு பொருள்களாகக் காட்சி தருபவை விஞ்ஞானியின் கண்களுக்கு வெறும் எலெக்ட்ரான் புரோட்டான்களின் தொகுப்பாகத் தென்படுகின்றன. நம்மிடம் நிலவும் வேற்றுமை உணர்வு விஞ்ஞானியைப் பொறுத்த மட்டில் ஒற்றுமை உணர்வாக ஆகிவிடுகிறது.

மேலே கூறியது விஞ்ஞானம் கண்ட முடிவு. மெய்ஞானியும் தன் போக்கில் ஆராய்ச்சி செய்து கிட்டத்தட்ட அதே முடிவிற்கு வருகிறான். மெய்ஞானியின் ஆராய்ச்சி பொருளுலகிற்கு அப்பாற்பட்டது என்பதால் ஆங்கு எலெக்ட்ரான், புரோட்டான்களுக்கு இடமில்லை. உலகு அனைத்தையும் ஆராய்ந்த மெய்ஞானி தனது ஆராய்ச்சியின் முடிவாக உலகமனைத்தையும் தன்னில் அதாவது ஆத்ம சொரூபத்தில் காண்கிறான். அனைத்தும் ஆத்ம மயம் என்பது மெய்ஞானியின் முடிவு.

தன்னில் தானாய் லயித்திருக்கும் மெய்ஞானிக்குத் தன்னைத் தவிர அதாவது ஆத்மனைத் தவிர வேறு ஏதும் புலப்படுவதில்லை. அது மட்டுமல்ல. தன்னிடம் எந்த ஆத்மன் இலங்குகின்றதோ அதுவே அனைத்துயிரிடத்தும் திகழ்கிறது என்பதையும் அவன் கண்டு கொள்கிறான்.

இந்த ஞானத்தை அவன் எப்படி அடைந்தான்? அவன் பெற்று விளங்கும் சாதாரண ஊனக்கண்களால் அல்ல. இறையருளால் அவன் பெற்ற ஞானக்கண்ணால் அடைந் தான். இந்த ஞானம் புத்தகங்களிலிருந்து பெறப்படுவது அன்று. அது அனுபவத்தால் பெறப்பட்ட ஞானமா கும். எத்தகைய அனுபவம்? 'இது நான் அல்ல' 'இது நான் அல்ல' என்ற நேதி நேதிப் பயிற்சியைத் தவறாது அன்றாட வாழ்வில் பயிற்சி செய்வதன் மூலம் அடைந்த ஞானானுபவம். 'ஸம்யக் விஞ்ஞானவான் யோகீ' என்பது ஜீவனும் பிரம்மமும் ஒன்றே என்பதை அனுபவ பூர்வ மாக உணர்ந்த யோகி என்று பொருள்படுகிறது.

'யோ மாம் பச்யதி ஸர்வத்ர, ஸர்வம் ச மயி பச் யதி' என்பது கீதையில் கண்ணன் வாக்கு. 'எவன் என்னை எல்லாவற்றிலும், எல்லாவற்றையும் என்னிடத்தும் பார்க்கி றானோ' அவனே உண்மையான அறிவு கைவரப் பெற்றவன் என்கிறார் பகவான். அவன் தான் யோகி; அவனே ஞானி.

கனவுலகில் வெவ்வேறு பொருள்களைக் காண்பவன் விழித்தெழுந்ததும் அனைத்தும் மனத்தின் சேஷ்டைகளே என்று உணர்வது போல், அஞ்ஞானத்தால் வேற்றுமை யைக் காணும் ஒருவன் ஞானத்தை அடைந்த பின் எங்கும் ஒரே ஆத்மனைக் காண்கிறான்.

## 48

आत्मैवेदं जगत्सर्वमात्मनोऽन्यन्न विद्यते ।
मृदो यद्वद्घटादीनि स्वात्मानं सर्वमीक्षते ॥

ஆத்மைவேதம் ஜகத் ஸர்வ
மாத்மநோ(அ)ந்யந்ந வித்யதே ।
ம்ருதோ யத்வத் கடாதீநி
ஸ்வாத்மாநம் ஸர்வமீக்ஷதே ॥

ஆன்மாவே யிவ்வுலகெல் லாமாகு மற்பமு
மான்மாவுக் கன்னி யமாயில்லை-யான்மாவால்
காண்பனவெல் லாமுங் கடாதிகள்மண் ணின்
வேறாய்க்
காண்பது முண்டோ கழறு.

[ஸ்ரீ ரமணர்]

इदं இதம் - இந்த, जगत्सर्वं ஜகத் ஸர்வம் உலகம் எல்லாம், आत्मा एव ஆத்மா ஏவ - ஆத்மாவே தான், आत्मनो ஆத்மநோ - ஆத்மாவுக்கு, अन्यत् அந்யத் - அப்பாற்பட்டதாக அல்லது வேறுபட்டதாக ஒன்றும், न विद्यते ந வித்யதே - கிடையாது, मृदो ம்ருதோ - மண்ணிலிருந்து, घटादीनि கடாதீனி - பானை முதலியன, यद्वत् யத்வத் - எப்படியோ அப்படியே, स्वात्मानं ஸ்வாத்மானம் - தன் ஆத்மாவாக, सर्वं ஸர்வம் - எல்லாவற்றையும், ईक्षते ஈக்ஷதே - பார்க்கிருன்.

கருத்துரை : ஆன்ம ஞானம், கைவரப் பெற்ற ஞானி ஒருவர், "இவ்வண்டம் யாவும் ஆத்மாவே அதாவது பரம் பொருள் சொரூபமே. அதையன்றி வேறெதற்கும் இருப்புக் கிடையாது. பானைகள் பலவாருகத் தோற்றம் தரினும் அவை அனைத்தும் அடிப்படையில் மண்தான். அது போல் அனைத்தினுள்ளும் இருக்கும் உண்மைப் பொருள் தனது ஆத்மாதான்" என்று காண்கிருர்.

அது ஒரு பானைக் கடை. பல்வேறு பானைகள் அழகாக அடுக்கி வைக்கப்பட்டிருக்கின்றன! சில பானைகள் சிறியவை. சில பானைகள் பெரியவை. சில உருண்டு காணப்படுகின்றன. வேறு சில முட்டை வடிவத்தில் அமைக்கப்பட்டிருக்கின்றன. சில பானைகளுக்கு வெளிப் புறத்தில் வெள்ளை நிறம் பூசப்பட்டிருக்கிறது. சிலவற்றிற்கு மஞ்சள் நிறமும், இன்னும் சிலவற்றிற்குக் கறுப்பு நிறமும் பூசப்பட்டிருக்கிறது. இவ்விதம் எத்தனை எத்த

னையோ நிறங்களில் எத்தனை எத்தனையோ வகைக ளில் விதம் விதமாகப் பானைகள் காட்சி தருகின்றன. பானையை விலை கொடுத்து வாங்க வருவோர் தங்கள் தங்கள் விருப்பத்திற்கேற்ப பானைகளைத் தேர்ந்தெடுப்ப தில் கடைக்காரனுடன் பேரம் பேசுகின்றனர்.

பானைக்கடைகளில் மும்முரமாக வியாபாரம் நடப் பதற்கிடையில் அந்த வியாபாரத்தில் ஈடுபடாத ஒருவன் ஒரு ஓரத்தில் நின்று கொண்டு அதை வேடிக்கை பார்த் துக்கொண்டிருக்கிறான். அவன் தனக்குள் 'வகை வகையா கப் பானைகள் இங்கே காணப்படினும், அடிப்படையில் அவை அனைத்தும் மண் தானே. தோற்றத்தில் வேறாகக் காட்சி தரும் அவை ஒரே அடிப்படைப் பொருளான மண்ணால்தானே ஆக்கப்பட்டிருக்கின்றன" என்று சிந்தித்த வண்ணம் நிற்கிறான்.

இவ்வுலகம் அந்தப் பானைக் கடைக்கு நிகர்.

நாமும் உலகைப் பார்க்கிறோம். ஆன்ம ஞானம் கைவ ரப் பெற்ற ஞானியும் உலகைக் காண்கிறார். இருவர் காண்பதும் ஒரே உலகத்தைத்தான். ஆனால் இருவர் பார்க்கின்ற பார்வையும் வேறு. நமக்கு உலகில் எங் குப் பார்த்தாலும் வேற்றுமைகள்தான் காணப்படுகின்றன. ஒருவன் வெளுப்பன், இன்னொருவன் கறுப்பன். ஒருவன் பணக்காரன். மற்றவன் ஏழை. ஒருவன் நமக்கு நண்பன், அடுத்தவன் **நமக்குப்** பகைவன். ஒன்று மலை; மற்றது பள்ளம், ஒன்று பல்லி மற்றது பாம்பு என்று இவ்வாறாக வகை வகையாக நாம் பொருள்களையும் நபர்களையும் வேறுபடுத்திக் காண்கிறோம். இது நாம் பார்க்கும் உல கம். அதாவது ஞானம் கைவரப் பெறாது அஞ்ஞானத்தில் உழலும் சாதாரண மனிதனுக்குக் கட்புலனாகும் உலகம்.

இதே உலகை ஒரு ஞானியும் பார்க்கிறார். அவர் அதை எப்படிக் காண்கிறார்? அனைத்தையும் தன் ஆத்ம

சொரூபமாகப் பார்க்கிறார். அதாவது தன்மயமாகக் காண்கிறார். ஒரே அடிப்படைப் பரம்பொருளே இத்தனையுமாக இலங்குகிறது என்ற உண்மையை உணர்ந்தவர் உலகப் பொருள்களுக்கிடையேயுள்ள புற வேற்றுமைகளையெல்லாம் புறக்கணித்து அனைத்தையும் பரம்பொருள் சொரூபமாக, ஆன்ம சொரூபமாகக் காண்கிறார். அவர் காண்பதுவே மெய். நாம் காண்பதுவோ பொய்.

## 49

जीवन्मुक्तस्तु तद्विद्वान्पूर्वोपाधिगुणांस्त्यजेत् ।
सच्चिदानन्दरूपत्वात् भवेद्भ्रमरकीटवत् ॥

ஜீவன் முக்தஸ்து தத்வித்வாந்
பூர்வோ பாதி குணான்ஸ்த்யஜேத் ।
ஸச்சிதாநந்த ரூபத்வாத்
பவேத் ப்ரமர கீடவத் ॥

சீவன்முக் தன்வித்வான் றேருவதன் முன்றன்னை
மேவு முபாதிகுணம் விட்டுடனே - மேவுவான்
றன்னுருவச் சித்தின்பைத் தான்கீடம் வண்டினுருத்
தன்மையுறல் போலத் தரி.

[ஸ்ரீ ரமணர்]

जीवन्मुक्तस्तु ஜீவன் முக்தஸ்து - ஜீவன் முக்தனோ என்றால், तद्विद्वान् தத் வித்வாந் - அந்தப்பொருளை அறிந்தவன் ஆதலால், पूर्व (उक्त) பூர்வ (உக்த) - முன்பு சொல்லப்பட்ட, उपाधिगुणान् உபாதிகுணாந் - உபாதிகளின் குணங்களை, त्यजेत् த்யஜேத் - விட்டு விடுகிறான், साच्चिदानन्द ஸச்சிதாநந்த - சச்சிதானந்த, रूपत्वात् ரூபத்வாத் - ரூபத்தில் நிற்பதால், भ्रमर

कीटवत् ப்ரமர கீடவத், - குளவி கொட்டும் புழு (குளவியாவது ) போல், भवेत् பவேத் - (சச்சிதானந்தமாக) ஆகிறுன்.

கருத்துரை : ஜீவன் முக்தன் ஆத்மாவைப் பற்றிய உண்மையை உணர்ந்தவன். உடல் முதலான உபாதிகளின் குணங்களை அவன் விட்டுவிடுவான். குளவி கொட்டப் புழு குளவியாவது போன்று அவன் சச்சிதானந்த சொரூபியாகி விடுவான்.

'எண்ணிய எண்ணியாங்கு எய்துவர்' என்பது குறள் வாக்கு. நாம் எதை இடைவிடாது எண்ணிக்கொண்டிருக்கிறோமோ அதுவாகவே ஆகிவிடுகிறோம் என்பது இதன் பொருள். வாழ்க்கையின் நம் ஒவ்வொருவருடைய அன்றாட அனுபவத்திலேயே நாம் இந்தக் கூற்றின் உண்மையை உணர முடியும்.

நல்ல உடல் வலிவு நம்மிடம் இருந்தும் நாம், "நான் மிகவும் பலஹீனமானவன். என்னிடம் எந்தவித சக்தியுமில்லை" என்று இடைவிடாது எண்ணி நிற்போமேயாகில் நாளடைவில் நாம் ஒன்றுக்கும் உதவாத வெறும் கோழைகளாகவே ஆகிவிடுவோம். மாறுக உடலளவில் மிகவும் துர்பலமாகக் காட்சி தரும் ஒருவன் உள்ளத்தில் 'நான் மிகவும் பலசாலி. என்னை எதிர்க்க எவரால் இவ்வுலகில் முடியும்?' என்று ஆண்மை பொருந்திய எண்ணத்தில் இடைவிடாது திளைத்து நிற்பானேயாகில் விரைவில் அவன் மிகுந்த பலசாலியாகி விடுவான். அத்தகையவனைக் கண்டு அனைவரும் அஞ்சும் நிலை கூட ஏற்படலாம்.

எண்ணமே எதையும் உருவாக்குகிறது என்பதை இயற்கையில் நிகழும் ஒரு சாதாரண நிகழ்ச்சியின் மூலம் ஸ்ரீ ஆதிசங்கரர் இந்த சுலோகத்தில் விளக்குகிருர்.

குளவிப் பூச்சியொன்று தான் வசிப்பதற்காகக் கூடு ஒன்றைக் கட்டுகிறது. பின்னர் ஒரு சிறு புழுவைப் பிடித்துக்கொண்டு போய் அந்தக்கூட்டினுள் வைக்கிறது. தான் வெளியே இரைதேடப் போகையிலும் திரும்பி வந்த பின்னரும் அந்தப் புழுவை அது அடிக்கடி கொட்டிக்கொண்டேயிருக்கிறது. ஒரு தடவை புழுவைக் கொட்டி விட்டு அந்தக் குளவி வெளியே சென்று திரும்பி வரும் வரையிலும் அந்தக் கூட்டினுள் அடைபட்டுக்கிடக்கும் அந்தப்புழு, 'ஐயோ! திரும்பி எப்பொழுது வந்து அது என்னை மீண்டும் கொட்டப் போகிறதோ?' என்று அந்தக் குளவியையே எண்ணி எண்ணி இறுதியில் அந்தப்புழு குளவியாகவே மாறி விடுகிறது. எண்ணி எண்ணிப் புழு குளவியாவதை வேதாந்தத்தில் 'ப்ரமர-கீட நியாயம்' என்கிறோம்.

இதைப் போலவே பிரம்மத்திலேயே யாண்டும் லயித்து நிற்பவன் எங்கும் எதிலும் பிரம்மத்தையே அதாவது ஆத்மனையே கண்டு சதா அந்த எண்ணத்திலேயே தோய்ந்திருப்பான். விரைவில் பிரம்மமாகவே ஆகிவிடுகிறான் என்பது சான்றோர்கள் கண்ட முடிவு. இதைத் தான் 'பிரம்மவித் பிரம்மைவ பவதி' என்ற வாக்கியம் விளக்குகிறது.

இவ்வுலக வாழ்வு வாழ்ந்து கொண்டிருப்பதற்கிடையிலேயே பிரம்ம ஸாக்ஷாத்காரம் அடையப்பெற்ற ஞானிகளை நாம் 'ஜீவன் முக்தர்கள்' என்கிறோம். அதாவது உடலுடன் வாழ்ந்து கொண்டிருக்கும் போதே பிரம்ம ஞானம் அல்லது முக்தி கைவரப்பெற்றவர்கள் என்பது அதன் பொருள். இது ஒரு சாராரது கருத்து. ஸ்ரீசங்கரர் மற்றும் தற்காலத்தில் நாமறிந்த பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர், ஸ்ரீரமணர், ஸ்ரீசுவாமி சிவானந்தர் போன்ற சான்றோர்களனைவரும் ஜீவன் முக்தர்களே. மற்றும் ஒரு சாரார் இதற்குச் சிறிது மாறுபட்ட கருத்துக்

கொண்டிருக்கின்றனர். பிரம்மஞானம் கைவரப் பெற்றாலும் கூட உடலை உகுத்த பின்னரே முக்தி கிட்டும் என்பது அவர்களது கருத்து. இதற்கு 'விதேஹ முக்தி' என்று பெயர்.

இந்த இரு சாராரிடையே இத்தகைய சிறு கருத்து வேறுபாடு இருப்பினும் அடிப்படையில் அவர்களுக்கிடையே எந்தவித வேற்றுமையும் கிடையாது. தன்னை ஆத்ம சொரூபமாக, பிரம்மமாகக் கருதுபவன் பிரம்மமாகவே ஆகிவிடுகிறான் என்பதை அவர்கள் ஒப்புக்கொள்ளுகின்றனர்.

நாம் நம்மை இந்த உடல் மயமாக எண்ணுகையில் தான் உடலுக்கு வரும் உபாதைகளும் துன்பங்களும் நம்மைத் தாக்குகின்றன. 'நான் இந்த உடல் அல்ல. நான் எங்கும் வியாபித்துள்ள ஆத்மன்' என்ற எண்ணத்தில் ஊறி விடுவோமானால் 'குளோரோபார்ம்' போன்ற எந்த வித மயக்க மருந்தையும் பயன்படுத்தாமலேயே நமது உடலில் பெரிய ஆபரேஷன்கள் அதாவது அறுவைச் சிகிச்சைகள் பண்ணினாலும் அதனால் ஏற்படும் வலியை நம்மால் உணராமலேயே இருக்கமுடியும். இவ்விதம் அநேக நிகழ்ச்சிகள் நடந்திருக்கின்றன என்பதற்கு ஸ்ரீராமகிருஷ்ணர் ஸ்ரீரமணர் மற்றும் ஸ்ரீசுவாமி சிவானந்தர் போன்றோரது வாழ்க்கைச் சரித்திரமே சான்றாகும். மயக்க மருந்து தற்காலிகமான விளைவை உடலில் நிகழ்த்துகிறது. ஞானிகளோவெனில் உயரிய ஆத்ம ஞானம் கைவரப்பெற்றவர்கள். உடலுடன் அவர்கள் பல்வேறு செயல்களில் ஈடுபட்டாலும் அவற்றுடன் எவ்விதத் தொடர்பும் இல்லாது நிரந்தரமான ஆத்ம போதத்தில் திளைத்திருக்கின்றனர். அத்தகையவர்களைக் கர்மங்கள் பந்தப்படுத்தமாட்டா. ஏன்? 'நான்' 'யான்' 'எனது' என்னும் செருக்கு அங்கில்லை. 'யான்' 'எனது' அற்ற நிலையில் செய்வோனும், செய்விப்போனும், செய்யப்படு காரியமும் எல்லாம் பிரம்மமே. அந்த நிலை தான் பிரம்மானந்தப் பெருநிலை.

'As you think, so you become' என்ற ஆங்கிலப் பழமொழியின் விளக்கமாக இந்த சுலோகம் அமைகிறது.

## 50

तीर्त्वा मोहार्णवं हत्वा रागद्वेषादिराक्षसान् ।
योगी शान्तिसमायुक्त आत्मारामो विराजते ॥

தீர்த்வா மோஹார்ணவம் ஹத்வா
ராகத்வேஷாதிராக்ஷஸாந் ।
யோகீ சாந்தி ஸமாயுக்த:
ஆத்மாராமோ விராஜதே ॥

மோகக் கடல்கடந்து மூளாசை கோபமுத
லாகு மசக்க ரறக்கொன்று - யோகி
யமைதி யொடுகூடி யான்மாவி னின்பத்
தமைந்தொளிர்வ னென்றே யறி.

[ஸ்ரீ ரமணர்]

मोहार्णवं மோஹார்ணவம் - மோகமாகிற கடலை, तीर्त्वा தீர்த்வா - கடந்து, राग ராக - பற்று, द्वेषादि த்வேஷாதி - வெறுப்பு முதலிய, राक्षसान् ராக்ஷஸாந் - அரக்கர்களை, हत्वा ஹத்வா - கொன்று, योगी யோகி - யோகியானவன், शान्ति சாந்தி - அமைதியுடன், समायुक्त ஸமாயுக்த - கூடியவனாகிற, आत्मारामः ஆத்மாராம: - ஆத்மாராமன், विराजते விராஜதே - வீற்றிருக்கிறுன்.

கருத்துரை : மோகக் கடலைக் கடந்து விருப்பு வெறுப்பெனுமரக்கர்களைக் கொன்ற யோகியானவன் அமைதியுடன் கூடி, 'ஆத்மாராமனாக' வீற்றிருக்கிறுன்.

இந்த சுலோகத்தில் ஸ்ரீ சங்கரர் இராமாயணத்தின் சாரத்தை வடித்தெடுத்து அதை வேதாந்த சாரமாக நமக்குத் தருகிறார்.

மனிதனுக்கு எப்பொழுது உண்மையான அமைதி கிட்டுகிறது? ஜீவன் பிரம்மத்துடன் ஐக்கியமாகும் பொழுது. அதாவது, விருப்பு வெறுப்பெனும் இருமைகளை வென்று, மயக்கம் எனும் கடலைக் கடந்த பின்னர் மனிதன் அழியாத அமைதியை அனுபவிக்கிறான்.

இராமாயணம் நமது பண்பாட்டின் கருவூலம். தவிர அது ஒவ்வொருவருடைய வாழ்வின் வழிகாட்டியுமாகும். இராமாயணத்தின் கதையை அடக்கி நிற்கும் தத்துவத்தைப் பெரும்பாலோர் உன்னிப் பார்ப்பதில்லை. இராமாயணத்தின் தத்துவம் வேதாந்தத்தின் சாரமேயன்றி வேறில்லை.

சீதா தேவி ஸ்ரீராமனுடன் சேர்ந்திருந்த வரை அமைதியுடனும் ஆனந்தத்துடனுமிருந்தாள். ஆனால், என்று அவள் மனத்தில் ராமனுக்குப் பதில் காமன் குடி புகுந்தானோ அதாவது பொன்மான் வேண்டும் என்ற ஆசை குடி புகுந்ததோ, அன்று முதல் அவள் அமைதியிழந்து அல்லற்பட்டாள். பொன்மானின் மோகத்தில் அவளைப் பத்துத் தலையுடைய அரக்கனான ராவணன் அபகரித்துச் சென்றதற்கிடையில் அசோக வனத்தில் சிறை வைத்தான். அவளைச் சுற்றி எத்தனையோ அரக்கர்கள் காவல் புரிந்தனர். அவள் செய்த தவறுக்குரிய தண்டனையை அனுபவித்த பின்னர், இறுதியில் ஸ்ரீராமர் இராவணனைக் கொன்று அவளைச் சிறை மீட்கிறார். மயக்கத்திலிருந்து விடுபட்ட சீதாதேவி மீண்டும் இராமரை அடைந்து அமைதியையும் ஆனந்தத்தையும் அனுபவிக்கிறாள். இது இராமாயண ரகசியம். இனித் தனி மனிதனின் வாழ்வை நோக்குவோம்.

இறைவனுடன் இரண்டறக் கலந்திருந்த ஜீவன் மோகத்தின் வயப்பட்டு, அறியாமையின் காரணமாகத் தன் பெருநிலையிலிருந்து நழுவி, அமைதியிழந்து, ஆனந் தமிழந்து பிறப்புச் சக்கரத்தில் சிக்குண்டு பரிதவிக்கிறது. மனிதனுடைய துக்கமனைத்திற்கும் அடிப்படைக் காரணம் அவன் கொண்டு விளங்கும் விருப்பு வெறுப்புக்களே. இந்த இரண்டு அரக்கர்களின் பிடியில் சிக்குண்டு தவிக்கும் ஜீவன், புயல் வீசிக்கொந்தளிக்கும் கடலில் அகப்பட்ட துரும்பு போல் தீராத் துயரத்தில் மூழ்கிப் பரிதவிக் கிறன். மோகம் எனும் கடலில் சிக்குண்டு உழலும் அவனை அவனுடைய பத்து இந்திரியங்கள் அங்குமிங்கும் அலைக்கழித்துப் படாதபாடு படுத்துகின்றன. பத்து இந் திரியங்களுக்கு அதிபதி தான் அவனது மனம். அது அடங்காத வரை மனிதனுக்கு அமைதி ஏற்பட வழியில்லை. எனவே இறைவனருளால் எவ்விதம் இராமனைப் பிரிந்த சீதை ராமனையே இடைவிடாது எண்ணிநின்றளோ, அதுபோல இறைவனைப் பிரிந்த ஜீவன் இறைவனையே துதித்து நின்று, மனமாகிய இராவணனை வென்று மீண்டு உயரிய அமைதியை அடைந்து இறைவனுடன் ஒன்றித்து விடுகிறன்.

இந்த சுலோகத்தில் வரும் 'ஆத்மா ராமன்' என்ற சொல் ஸ்ரீசங்கரர் இராமாயணத்தைக் கருத்தில் கொண்டு இந்த சுலோகத்தை எழுதினார் என்பதற்கு ஆதாரமாக அமைகிறது.

சமஸ்கிருதத்தில் 'ராமன்' என்ற சொல் 'இன்பத்தைத் தருபவன்' என்று பொருள்படுகிறது. 'ஆத்மாராமன்' என்ற வார்த்தை ஆத்மாவில் ராமனைக் காண்பவன். ஆத்மா வில் ஆன்ந்தத்தை அனுபவிப்பவன், புறத்தே இல்லாமல் தன்னுள்ளேயே இன்ப்த்தைக் காண்பவன் என்ற கருத்தைத் தருகிறது.

மனித வாழ்வின் இலட்சியம் என்ன, மனிதன் ஏன் துன்பத்தில் உழல்கிறான், அந்தத் துன்பத்திலிருந்து நிரந்தரமாக விடுபட வழியென்ன என்பதையெல்லாம் மிக அழகிய முறையில் விளக்குகிறது இந்த சுலோகம்.

# 51

बाह्यानित्य सुखासक्तिं हित्वात्म सुखनिर्वृत : ।
घटस्थदीपवत्स्वसिस्थः स्वान्तरेव प्रकाशते ॥

பாஹ்யா நித்ய ஸுகா ஸக்திம்
ஹித்வா(ஆ)த்மஸுக நிர்வ்ருத: ।
கடஸ்த தீபவத் ஸ்வஸ்த:
ஸ்வாந்தரேவ ப்ரகாசதே ॥

அறிந்தவெளி யின்பிச்சை யற்றுண யான்மா
தனின்பிற் றிருத்தி தனையுற் - றனிசமுந்
தன்னொளி யாற்குபுந் தன்னுள் விளக்கெனத்
தன்னுளே தானொன்னிர்வன் றுன்.

[ஸ்ரீரமணர்]

बाह्य பாஹ்ய - புறத்தேயுள்ளதும், अनित्य அநித்ய - அழியக்கூடியதுமான, सुखासक्तिं ஸுகா ஸக்திம் - இன்பத்தில் கொண்டுள்ள விருப்பதை, हित्वा ஹித்வா - ஒழித்துவிட்டு, आत्म ஆத்ம - ஆத்ம, सुख ஸுக - ஆனந்தத்திலே, निर्वृतः நிர்வ்ருத: - அமைத்து நிற்கின்றனவனாக, घटस्त கடஸ்த - குடத்திலுள்ள, द्रीपवत् தீபவத் - விளக்குப்போல, स्वान्तरेव ஸ்வாந்தரேவ - தன்னுள்ளேயே, स्वस्थ ஸ்வஸ்த: - தன்நிலையில் இருப்பவனாக, प्रकाशते பிரகாசதே - ஒளிர்கிறான்.

கருத்துரை : புறப்பொருள்களிலிருந்து வரும் இன்பம் அநித்யம். யோகி அதன் ஆசையை விட்டு விட்டு ஆத்ம சுகத்திலேயே நிலை பெறுகிறான். குடத்தினுள் உள்ள விளக்கு போல தன்னுள் அமர்ந்து தானே ஒளிர்கிறான்.

இன்பம் அடைவதுதான் சகல உயிர்களினுடையவும் ஒரே இலட்சியமாகும். சிற்றுயிர் பேருயிர் அனைத்தும் சதா இன்பத்தை அடைவதற்கான முயற்சிகளிலேயே ஈடுபட்டிருக்கின்றன. முற்றும் கடந்த ஞானியின் இலட்சியமும் இன்பத்தை அடைவதுதான். ஆனால் மற்ற உயிர்களின் இன்ப நாட்டத்திற்கும் ஞானி ஒருவனின் இன்ப நாட்டத்திற்கு இடையே பெருத்த வேறுபாடு உண்டு. மற்ற உயிர்கள் யாவும் சுய இன்பத்தையே விரும்புகின்றன. ஞானியோ சகல உயிர்களினுடையவும் இன்பத்தை நாடுகிறான். மற்ற உயிர்கள், மனிதர்களுட்பட, தோன்றி மறையும் உலகப் பொருள்களிலிருந்து தற்காலிக இன்பத்தை அடைவதுடன் திருப்தி அடைகின்றன. ஆனால் ஞானியோ புற உலகப் பொருள்களின் பின்னே செல்லாது ஆன்ம ஞானத்தைப் பெறுவதன் மூலம் அழியாத நித்திய ஆனந்தத்தை அடைய முயல்கிறான்.

எந்த ஒன்று தோன்றி மறைகிறதோ அதிலிருந்து பெறப்படும் இன்பமும் தோன்றி மறையும் தன்மையுடையதாகவே இருக்கும். இதுவே உண்மை. நாம் வாழ்நாளெல்லாம் உலகப்பொருள்களின் பின்னாலேயே அலைந்து திரிந்து இன்பத்தைத் தேடி அது கிடைக்கப்பெறாது மிகுந்த துன்பத்தில் உழன்று இறுதியில் மரணமடைகிறோம். மீண்டும் பிறப்பு. திரும்பவும் இதே கதி. இப்படி நாம் பிறப்பிறப்புச் சக்கரத்தில் அகப்பட்டு உழல்கிறோம். ஆனால் உண்மை உணர்ந்த ஞானி தனது சிருஷ்டியையும் முயற்சிகளையும் அந்தர் முகமாக்கி உள்ளே ஒளிரும் ஆன்மாவிலிருந்து அழியாத இன்பத்தை அடைகிறான்.

இத்தகைய ஞானி குடத்தினுள் ஒளிரும் ஒரு விளக்கிற்கு ஒப்பானவன் என்று ஸ்ரீசங்கரர் வருணிக்கிறார். மேஜை மீது வைக்கப்பட்ட விளக்கு ஒன்றின் ஒளி அதன் அருகில் உள்ள எல்லாப்பொருள்களின் மீதும் விழுந்து பொருள்களின் பிரதிபலிக்குந் தன்மைக்கேற்ப அவற்றை ஒளிரச் செய்யும். ஆனால் அதே விளக்கை ஒரு குடத்தினுள் இறக்கினால் அது தன்னைத் தானே ஒளிர்விக்கும். அதுபோல புறப்பொருள்களிலிருந்து நாட்டத்தைப் பூரணமாக அகத்தே திருப்பிய ஞானி தன்னுள்ளேயே தானாயமர்ந்து இன்பத்தை அனுபவிக்கிறான்.

ஞானி ஒருவன் உலகில் வாழ்ந்தாலும் அதனால் அவன் எவ்விதத்திலும் பாதிக்கப்படமாட்டான். மின்விசிறியை சதா பயன்படுத்திக்கொண்டிருந்து விட்டு ஒரு மணி நேரம் மின்சாரத் தடை காரணமாக அது இல்லை என்றால், ‘அப்பப்பா! மின் விசிறி இல்லாமல் என்னால் இருக்க முடியவில்லையே’ என்று நம் போன்றவர்கள் கூறுவோம். ஆனால் ஞானிக்கோ அது இருந்தாலும் இல்லாவிட்டாலும் எல்லாம் ஒன்றுதான். சுகம் துக்கம் எல்லாவற்றையும் கடந்த பெருநிலையில் ஞானி இருப்பதால் அவன் சதா ஆத்மானந்தத்தில் திளைத்து நிற்கிறான்.

## 52

उपाधिस्थोऽपि तद्धर्मैरलिप्तो व्योमवन्मुनिः ।
सर्वविन्मूढवत्तिष्ठेदसक्तो वायुवच्चरेत् ॥

*உபாதிஸ்தோ(அ)பி தத்தர் மைரலிப்தோ*
*வ்யோமவன்முனி: ।*
*ஸர்வவின் மூடவத் திஷ்டேத*
*ஸக்தோ வாயுவச் சரேத் ॥*

உபாதியுற் ருேறு மொட்டாவிண் போலவ
வுபாதிதரு மங்களோ டொட்டா- னுபாதியிலான்
முற்றறிவ னேனுமுனி மூடனென வாயுபோற்
பற்றற்றுச் சஞ்சரிப் பான்.

[ஸ்ரீ ரமணர்]

मुनि முனி - முனிவர் (நன்ருய் அனுபவம் பெற்ற யோகி), उपाधिस्थ உபாதிஸ்த - உபாதிகளுள் இருப்பவராக, अपि அபி - இருந்தாலும், तद्धर्मैः தத் தர்மை - அவைகளின் தன்மைகளால், व्योमवत् வ்யோமவத் - வெளியைப் போல, अलिप्त அலிப்த - பாதிக்கப்படாமலேயே, सर्ववित् ஸர்வவித் - எல்லாமறிந்தும், मूढवत् மூடவத் - முட்டாள் போல, तिष्ठेत् திஷ்டேத் - அமர்ந்திருப்பார், असक्त அஸக்த - ஒன்றுடனும் பற்றுக் கொள்ளாமல், वायुवत् வாயுவத் - காற்றைப் போல், चरेत् சரேத் - சஞ்சரிப்பார்.

கருத்துரை : ஆத்ம ஞானிக்கு ‘உடல்’ முதலிய உபாதிகள் இருக்கின்றன. அவை தத்தம் குணப்படி வேலை செய்கின்றன. எனினும் அவர் அவற்ருல் பாதிக்கப்படுவதில்லை. அவரது செய்திகள் புரிந்து கொள்ள முடியாதவையாய் இருக்கும். ஆகாயம் போல் எதனாலும் அவரைக் களங்கப்படுத்த முடியாது. அனைத்துமறிந்தும் முட்டாள் போல் இருப்பார். எதிலும் பற்று இன்றிக் காற்றைப் போலச் சுதந்திரமாக இருப்பார்.

நிர்மலமான நீல நிற ஆகாயத்தில் திடீரென்று ஒரு மாற்றம் நிகழ்கிறது. மாலைக் கதிரவன் மலை வாயிலில் சிறிது சிறிதாக விழுந்து கொண்டிருக்கிருன். அப்பொழுது வானத்தின் காட்சி மாறுகிறது. அதுவரை நீல நிறமாக இருந்த வானத்தில் பல வண்ணங்கள் பளிச்சிடுகின்றன. எங்கோ தெரிகின்ற மேகங்களில் சூரிய ஒளிபட்டுச் சிதறுண்டு அழகிய பல நிறங்கள் அள்ளி வீசப்படுகின்றன.

இள மஞ்சள், சிவப்பு, ஊதா என்ற பல நிறங்களில் வானம் அழகாகக் காட்சி தருகிறது. இத்தனை நிறங்களுக்கும் ஆகாயத்திற்கும் எவ்விதத்திலாவது தொடர்பு உண்டா? சிறிதும் கிடையாது. ஏனெனில் இன்னது என விளக்கிச் சொல்லும் அளவிற்கு ஆகாயத்திற்கு ஒரு குறிப்பிட்ட உருவமோ, குணமோ, தன்மையோ ஏதும் கிடையாது. எனவே அதனிடத்து எந்தவித மாற்றமும் நிகழ இடமில்லை. ஆனால் இத்தனைவித நிறமாற்றங்களெல்லாம் சூரிய ஒளி மற்றும் மேகங்களின் சேர்க்கையினால் நிகழ்ந்தவையாகும். அவற்றிற்குப் பின்னணியாக அமையும் வானத்தில் அவை ஏற்றிக் கூறப்படுகின்றன. அது போல ஆத்ம ஞானி உடல் முதலிய உபாதிகளை எல்லாம் கடந்த பெருநிலையை அடைந்திருப்பினும், அவர் உலகில் உயிரோடிருக்கும் வரை உடல் முதலியவற்றால் ஏற்படும் மாற்றங்களால் அவர் எவ்விதத்திலும் பாதிக்கப் படுவதில்லை.

ரிஷிகேசம் சிவானந்தாசிரமத்தில் குருதேவர் ஸ்ரீசுவாமி சிவானந்தரைத் தரிசிக்கும் பேறு பெற்றவர்கள் ஆத்ம ஞானி என்பவர் இப்படித் தான் இருப்பார் என்பதற்கு நல்லதொரு இலக்கணத்தை அவரிடம் கண்டு கொண்டிருப்பார்கள். அவர் சிறந்த ஜீவன் முக்தராக விளங்கினார் அறிஞர்களுக்கிடையில் அறிஞரைப் போலவும், குழந்தைகளுக்கிடையில் குழந்தையைப் போலவும் அவர் காட்சி தருவார். பிறரது மகிழ்ச்சியில் அவரும் பங்கு கொள்ளுவார். அது போல் பிறரது துன்பத்திலும் அவர் பங்கேற்பார். அதைப் பார்த்துப் பெரிய மகானான அவர் மற்றவர்களது நிலைக்குக் கீழிறங்கி வந்து விட்டார் என்று கருதுதல் தவறாகும். ஏனெனில் மேலே கூறப்பட்ட எடுத்துக்காட்டில் உள்ளது போலப் றத்தே நிகழும் எத்தகைய மாற்றங்களுக்கும் உட்படாத பெருநிலையை அடைந்த மகான் அவர். எனவே நமதுநிலையை வைத்து, நமது குறுகிய மனத்தினால் அவரை எடைபோடுதல் தவறாகும். மகான்களை

அறிந்து கொள்ளுதல் மிகவும் கடினம். மகான்களை மகான்களே அறிவர். மலையுச்சியிலிருக்கும் மகான்கள் எங்கே? பள்ளத்தில் கிடக்கும் சாதாரண மக்கள் எங்கே? இருந்தாலும் நம்மில் பலர் பெரிய மகான்களைப் பற்றித் தாறுமாறான கருத்துக்களை முன்பின் ஆலோசியாது வெளியிட்டு விடுகிறோம். அது எவ்வளவு தவறானது என்பதை இந்த சுலோகம் எடுத்துக் காட்டுகிறது.

இரண்டாவதாக, மகானை ஒரு மூடனுக்கு ஆதிசங்கரர் ஒப்பிடுகிறார். இங்கே 'மூடர்' என்பதை 'அரைப்பைத்தியம்' என்று நாம் கொள்ள வேண்டும். பைத்தியக்காரனுக்கு உலகோரது இன்பதுன்பங்கள் புரியாது. அவன் அழ வேண்டிய சமயத்தில் சிரிப்பான். சிரிக்க வேண்டிய சமயத்தில் அழுவான். குப்பை மேடும் பங்களாவும் எச்சில் இலையும் தங்கத்தட்டும் எல்லாம் அவனுக்கு ஒன்று தான். மாட மாளிகையில் இருந்த பெரும் செல்வந்தரான மகான் பட்டினத்தார் அனைத்தையும் துறந்து பைத்தியக்காரர் போல் குப்பை மேட்டின் மீது ஏறி உட்கார்ந்து கொண்டார். அது கேட்ட அரசன் திடுக்கிட்டு என்னவென்று விசாரிப்பதற்காக அவர் இடத்திற்குச் சென்று நின்று கொண்டு, "உமது இந்தச் செய்கையால் நீர் என்ன மாற்றத்தைக் கண்டு விட்டீர்?" என்று கேட்டான். அதற்குப் பட்டினத்தார் சிரித்துக் கொண்டே பெரும் வேதாந்தத் தத்துவத்தைச் சுருக்கமாக, "நீ நிற்க நான் அமரக் கண்டேன்" என்று சொல்லிச் சிரித்தார்.

அவரது அந்த வாக்கியத்தின் உட்பொருள்: "மன்னனே! பொருள், பொன், ராஜ்யம், பிள்ளை, குட்டி என்று இவ்விதமாக உலகப்பொருட்களின் பின்னே ஓடியாடி சிறிதும் ஓய்வெடுக்காது எங்கே போய் மன அமைதி பெறுவது என்று அறியாது நீ அலைந்து கொண்டிருக்க நானோ பிரம்மானந்தப் பேரின்பத்தைத் தேடிக்கண்டுகொண்டு அதில் நிரந்தரமாக அமர்ந்து விட்டேன்"

என்பதாகும். உலகத் துன்பங்களால் கொஞ்சமும் மாற்றம் அடையாதவர் ஆத்ம ஞானி.

அடுத்ததாக ஆத்ம ஞானி காற்றைப்போன்றவர் என்று ஆதி சங்கரர் கூறுகிருர். உலகில் நாம் எப்படி வாழ வேண்டும் என்பதற்குக் காற்று நல்ல பாடம் புகட்டுகிறது. ஒரு அறையின் கதவுகளை அடைத்துப் போட்டு விட்டால் உடனே உள்ளே புழுங்க ஆரம்பித்து விடுகிறது. நம்மால் அங்கே உட்கார முடியாது. கதவைத் திறந்து வைத்தால் காற்று எவருடைய உத்தரவுக்காகவும் காத்திராமல் தானாகவே உள்ளே நுழைந்து விடும். கதவு அடைத்திருந்தால் அது வேறு திசையில் சென்று விடும். ஒரு இடத்திலுள்ள துர்கந்தத்தைப் போக்கச் சுத்தமான காற்று தேவைப்படுகிறது. காற்றின் இந்த அத்தனை குணங்களையும் ஆத்ம ஞானியிடம் காணலாம். ஆத்ம ஞானி எவரது விருப்பையோ வெறுப்பையோ கருத்தில் கொள்ளாமல் அழையா விருந்தாளியாகப் பல்வேறு இடங்களுக்குச் சென்று நல்லறிவைப் பரப்பி நிற்பார். ஒரு இடத்தில் பாத பூஜை. இன்னொரு இடத்தில் தடியடி. இரண்டாலும் அவரது மனம் கொஞ்சமும் மாற்றமடையாது. ஒரு இடத்தைப் புனிதப்படுத்த மகான் ஒருவரது சன்னிதான விசேஷம் ஒன்றே போதும்.

ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சர், ஸ்ரீராமதாஸர், ஸ்ரீசுவாமி சிவானந்தர் போன்ற பல மகான்களது சரித்திரங்களையும் படித்தால் இத்தனை இலட்சணங்களும் அவர்களிடம் அமைந்திருந்தன என்பதைக் கண்டு கொள்ளலாம்.

# 53

उपाधिविलयाद्विष्णौ निर्विशेषं विशेन्मुनि : ।
जले जलं वियद्व्योम्नि तेजस्तेजसि वा यथा ॥

உபாதி விலயாத் விஷ்ணௌ
நிர்விசேஷம் விசேந்முநி: ।
ஜலே ஜலம் வியத்வ்யோம்நி
தேஜஸ் தேஜஸி வா யதா ॥

உபாதிநா சத்தா 'லுறுவான் முனிவ
னுபாதியில் விஷ்ணுவி னுள்ளே - யபேதமே
தோயத்திற் றோயமுந் தூவிண்ணிலே விண்ணுந்
தீயிற்றீ யும்போலத் தேர்.

[ஸ்ரீ ரமணர்]

मुनिः முனி - ஜீவன் முக்தரான முனிவர், उपाधि உபாதி - உபாதிகளின், विलयात् விலயாத் - அழிவினால் (அவற்றிலிருந்து தனித்து நிற்கிற காரணத்தால்), जले ஜலே - ஜலத்தினால், जलं ஜலம் - நீர், व्योम्नि வ்யோம்நி - ஆகாயம், वियत् வியத் - ஆகாயத்தில், वा வா - அல்லது, तेजसि தேஜஸி - தேயுவில், तेजः தேஜ: - தேயு, यथा யதா-எப்படி (சேர்ந்து நிற்குமோ) அப்படி, विष्णौ விஷ்ணௌ - விஷ்ணுவுக்குள், निर्विशेषं நிர்விசேஷம் - சிறப்பு ஒன்றுமில்லாமல், (தன் நிலையில்) विशेत् விசேத் - அமர்ந்து விடுவார்.

கருத்துரை : உடல், மனம், புத்தி ஆகியவை உபாதிகள். அவற்றை முனிவன் இல்லாதாக்கி விடுகிறான். அதாவது ஆத்ம விசாரத்தால் அவனளவில் அவை அவனுக்கு இல்லை என்றாகி விடுகின்றன. அப்பொழுது ஜலம் ஜலத்துடனும், ஆகாயம் அல்லது வெளி வெளியுடனும் அல்லது ஒளி ஒளியுடனும் எவ்வாறு இரண்டறக் கலந்து

விடுகின்றனவோ அதுபோல அவனும் எங்கும் வியாபகமாயுள்ள பரமாத்மனில் இரண்டறக் கலந்து விடுகிறான்.

ஒரு முறை ஸ்ரீராமபிரான் ஹனுமாரை நோக்கி, "ஆஞ்சனேயா! நீ என்னிடம் எத்தகைய உறவு கொண்டிருக்கிறாய்?", என்று கேட்டார்.

அதற்கு ஆஞ்சநேயர் ஸ்ரீராமருடன் தனக்குள்ள உறவை கீழ்க்காணும் மிகச் சிறந்த சுலோகத்தின் மூலம் விளக்கினார்.

தேஹ புத்யா தாஸோ அஹம்
ஜீவபுத்யா த்வதம்சக: ।
ஆத்ம புத்யா த்வமேவாஹம்
இதி மே நிஸ்சிதா மதி: ॥

"எம்பிரானே! உடல் உணர்வு என்னிடம் இருக்கையில் நான் உமது தாஸன். ஜீவபோதம் என்னிடம் நிலவுகையில் நான் உம்மில் ஒரு அம்சம். 'நான் ஆத்ம சொரூபம்' என்ற நிலையை அடைந்து விடுகையில் நீரே நான். இதுவே எனது உறுதியான கருத்தாகும்."

அனுமனின் இந்த வார்த்தைகள் த்வைத, விசிஷ்டாத்வைத, அத்வைதக் கொள்கைகளை மிக அழகிய முறையில் ஒற்றுமைப்படுத்துகின்றன. பக்தன் முதலில் பகவானின் அடியவனாகத் தன்னைக் கருதி பின்னர் பக்தியின் முதிர்ச்சியால் தான் பகவானின் ஒரு அம்சம் என்று எண்ணி இறுதியில் பராபக்தி நிலையில் தானும் பகவானும் ஒன்றே என்ற நிலையை அடைகிறான். எனவே த்வைதம் பக்தனின் ஆரம்ப நிலை, விசிஷ்டாத்வைதம் இடைநிலை, அத்வைதம் இறுதிநிலை.

அடிப்படையில் மனிதன் ஆத்ம சொரூபமே. ஆனால் அந்த உண்மையை உணரவொட்டாது அவனைத் தடுப்பது அவனிடம் உள்ள அறியாமையாகும். உடல், மனம்,

புத்தி ஆகியவை 'உபாதிகள்' அல்லது ஆத்ம சொரூபத்தை உணர வொட்டாது மனிதர்களைத் தடுக்கும் தடுப்புச் சுவர்களாகும். ஆத்ம விசாரத்தின் மூலம் நான் இந்த உடல் அல்ல, மனம், மற்றும் புத்தி அல்ல, எங்கும் நிறைந்த ஆத்ம சொரூபமே என்பதை உணர்பவன் ஆத்ம ஞானியாகிறான்.

ஆத்மஞானம் கைவரப் பெற்ற பின்னர் ஜீவன் எவ்விதம் பிரம்மனில் லயமாகிறான் என்பதை சங்கரர் மூன்று அழகிய உவமானங்களின் மூலம் விளக்குகிறார்.

இரண்டு வாளிகளில் நீர் இருக்கிறது. அவற்றை ஒன்றோடொன்று கலந்தால் எவ்விதம் இரண்டும் எவ்விதம் வேறுபாடுமின்றி இரண்டறக் கலந்துவிடுமோ, அது போல ஞானம் பெற்ற பின் ஜீவனது உடல் போதமானது பிரம்மனில் இரண்டறக் கலந்து விடுகிறது. உடல் ஸ்தூலமாதலால் தண்ணீரின் உவமானம் கூறப்பட்டது.

அடுத்து ஒளி ஒளியுடன் சேரும் உவமானம் கூறப்படுகிறது. சாதனையில் மேலே செல்லச் செல்ல சாதகனின் அறிவு பிரகாசிக்கிறது. அகத்தே ஏற்படும் ஒளியால் முகம் மற்றும் கண்களிலும் ஒளி உண்டாகிறது. எனவே பிரம்ம ஞானத்தைப் பெறுகையில் மனம் மற்றும் அறிவு பிரம்மத்துடன் இரண்டறக் கலந்துவிடுகின்றன. இரண்டு விளக்குகளின் ஒளியைப் பிரிக்கும் ஒரு தடை அகற்றப் படுகையில் ஒளி ஒன்றிணைவதைப் போலாகும் இது.

மூன்றாவது உவமானம் வெளி வெளியுடன் கலத்தல். உள்ள வெளி ஒன்றுதான். அதைப்பிரிக்கவே முடியாது. மண்பானைக்குள்ளும் பரந்த வெளியிலும் இருக்கும் வெளி ஒன்றே. இதை 'கடாகாசம்', 'மஹாகாசம்' என்பர். உபாதியான மண் உடைகிற பொழுது கடாகாசம் மஹாகாசத்தில் இரண்டறக் கலக்கிறது. அதுபோல யாண்டும் ஆத்ம சொரூபமாகவே இருக்கும் ஜீவன் தனது உடல்

மனம் ஆகிய உபாதிகள் அற்ற நிலையில் பி
ஐக்யமாகிருன்.

## 54

यल्लाभान्नापरो लाभो यत्सुखान्नापरं सुखम् ।
यज्ज्ञानान्नापरं ज्ञानं तदब्रह्मेत्यवधारयेत् ॥

யல்லாபாந் நாபரோ லம்போ
யத்ஸுகாந் நாபரம்
யஜ்ஞானாந்நாபரம் ஞானம்
தத் ப்ரஹ்மேத்யவத

எவ்வடை விற்பிறி தேதுமடை தற்கின்ரு
வெவ்வின்பி நிற்பிறி தின்பின்ரு - வெவ்
தன்னிற் பிறிதறிவு தானின்ரு மோவது
தன்னைப் பிரமமெனச் சார்.

[

यल्लाभात् யல்லாபாத் - எந்த பயனைக் க
न अपरः लाभः ந அபர: லாப: - வேறு பயன்
இல்லையோ, यत्सुखात् யத்ஸுகாத் -எந்த இன்ப
புறம்பாக, अपरं அபரம் - வேறு, सुखं ஸுகம் - இ
- இல்லையோ, यत् ज्ञानात् யத் ஞானாத் - எந்த ஞா
வெளியே, अपरं அபரம் - வேறு, ज्ञानं ஞானம் - ஞா
- இல்லையோ, तत् தத்-அதையே, ब्रह्म ப்ரஹ்ம -
इति இதி - என்று, अवधारयेत् அவதாரயேத் - உறு
தெரிந்து கொள்ளவும்.

கருத்துரை : எதை அடைந்த பிறகு அதிகம் இ
அடைய வேண்டும், இன்பம் மேலும் வேண்டும், இ

அறிவு பெற வேண்டும் என்ற ஆவலே எழாதோ அதுவே பிரம்மம் (பரமாத்மநிலை) என்று அறிதல் வேண்டும்.

பிரம்மத்தை வார்த்தைகளால் இன்னதென்று விளக்கிக் கூற முடியாது. ஏனென்னில் சிந்தனைக்கே எட்டாத ஒன்றை வார்த்தைகளால் விளக்கிக் கூறுவது எங்ஙனம்? இருப்பினும் அதைப் பல விதங்களில் விளக்க முயன்றிருக்கின்றனர் சான்றோர். 'சர்க்கரை தித்திக்கிறது' என்பதை எவ்வளவு தான் வார்த்தைகளால் விளக்கினாலும் அதை வாயில் போட்டுச் சாப்பிட்டுப் பார்க்கும் பொழுதுதான் அதனது ருசியை உண்மையாக உணர முடிவது போல் பிரம்மநிலையை தானே அடைகையில்தான் அதைப் பற்றி ஒருவன் தெரிந்து கொள்ள இயலும். ஆனால் அந்த நிலையை அடைவது வரை அது எப்படியிருக்கும் என்பது பற்றி ஒரு சிறிது அவனுக்குத் தெரிந்திருக்க வேண்டுமல்லவா? அதற்காக முற்றும் உணர்ந்த மகான்கள் பலவிதங்களில் அந்தப் பக்குவநிலையை விவரித்துக் கூறியிருக்கின்றனர்.

ஒரு -குறிப்பிட்ட நண்பரது வீடு தேடிச் செல்கிறோம். இன்ன தெருவில் அஃது இருக்கிறது என்று தெரியுமே தவிர குறிப்பட்ட இன்ன வீடு என்பது நமக்குத் தெரியாது. அப்பொழுது அருகிலுள்ள ஒரு நண்பரிடம் அது பற்றிக் கேட்கிறோம்.. அவர், 'ஓ! அதுவா அதோ அந்தக் காக்கை உட்கார்ந்திருக்கிறதே. அந்த வீடுதான்" என்று சுட்டிக்காட்டுகிறார். இத்தகைய உவமானத்தை வேதாந்தத்தில் தடஸ்த லக்ஷணம் என்று அழைக்கிறோம். காக்கை நிரந்தரமாக அந்த வீட்டிலேயே உட்கார்ந்திருக்கப்போவதில்லை. இருப்பினும் வீட்டைச் சுட்டிக்காட்டுவதற்காக காக்கை சுட்டிக்காட்டப்பட்டது.

இது போலத்தான் பெறற்கரிய பிரம்மநிலை அதாவது பரமாத்ம நிலை எப்படி இருக்கும் என்பதற்கு ஒரு சில எடுத்துக்காட்டுக்களை ஸ்ரீசங்கரர் பயன்படுத்துகிறார்.

'இனிப் பெற வேண்டிய லாபம் ஒன்றுமில்லை. இனிப் பெறவேண்டிய ஸுகம் ஒன்றுமில்லை. இனிப் பெறவேண்டிய அறிவு ஒன்றுமில்லை' என்ற நிலை ஒருவரிடத்து எப்பொழுது எழுமோ அந்நிலையே பிரம்ம நிலையாகும்.

மனிதன் தனது உடல் மற்றும் புலன்களைக் கொண்டு எதைச் செய்தாலும் அதிலே எவ்வளவு லாபம் கிட்டும் என்ற நோக்குடன்தான் செய்வது இயல்பு. பிரம்ம ஞானம் கைவரப்பெறுகையில் ஒருவனிடம் இந்த ஆவல் அறவே இருக்காது. ஏனெனில் இந்த லாபநோக்கம் அப்பொழுது பூரணத்துவத்தை அடைந்துவிடும்.

உயிர்கள் அனைத்தும் ஸுகத்தைத்தான் சதா நாடுகின்றன. அதிலும் என்றும் நின்று நிலவும், அள்ள அள்ளக்குறையாத ஸுகத்தையே அனைத்தும் விரும்புகின்றன. உலக சுகங்கள் அனைத்தும் தோன்றி மறைபவை, அழிபவை. ஆனால் பிரம்ம ஞானத்தால் அடையப்படும் சுகமோ குன்றாதது, குறையாதது. அழியாதது, நித்தியமானது. அதுவே பூரண சுகம்.

அறிவுக்கு எல்லை ஒன்று உண்டு எனில் அது பிரம்ம ஞானம் தான். அதைப் பெறுவதானது அனைத்தையும் அறிந்ததற்கு நிகர் ஆகும்.

## 55

यद्दृष्ट्वा नापरं दृश्यं यद्भूत्वा न पुनर्भवः ।
यज्ज्ञात्वा नापरं ज्ञेयं तद्ब्रह्मेत्यवधारयेत् ॥

யத் த்ருஷ்ட்வா நாபரம் த்ருச்யம்
யத்பூத்வா ந புனர்பவ: ।
யத் ஞாத்வா நாபரம் ஞேயம்
தத்ப்ரஹ்மேத்யவதாரயேத் ॥

எதுகாணக் காண்டற் கெதுவுமே யின்றே
வெதுவான பின்சன்ம மின்றே - வெதுவறிந்த
பின்னறியத் தக்க பிறிதோர் பொருளின்றே
வன்னது தான்பிரம மாம்.

[ஸ்ரீரமணர்]

यत् யத் - எதை, दृष्ट्वा த்ருஷ்ட்வா - பார்த்த பிறகு, अपरं அபரம் - வேறு, दृश्यं த்ருச்யம் - காட்சி, न ந - இல்லையோ, यत् भूत्वा யத் பூத்வா - எதாக ஆன பிறகு, पुनर्भवः புனர்பவ: - மீண்டும் ஆதல், न ந - இல்லையோ, यत् யத் - எதை, ज्ञात्वा ஞாத்வா - அறிந்த பிறகு, अपरं அபரம் - வேறு, ज्ञेयं ஞேயம் - அறிய வேண்டியது, न ந - இல்லையோ, तत् தத் - அதையே, ब्रह्म इति ப்ருஹ்ம இதி - பிரம்மம் என்று, अवधारयेत् அவதாரயேத் - திண்ணமாய் அறிந்து கொள்ளவும்.

கருத்துரை : எதைக் கண்டபிறகு வேறு காட்சியில் விருப்பம் கிடையாதோ, எப்படி ஆனபிறகு மீண்டும் எதாகவும் ஆவது இல்லையோ, எதை அறிந்தால் மீண்டும் அறிய ஒன்றும் இராதோ அதையே பிரம்மம் (ஆத்ம நிலை) என்று உறுதியாகக் கொள்ளுதல் வேண்டும்.

கோடிக்கணக்கான மக்கள் உலகில் வாழ்கின்றனர். எத்தனை எத்தனையோ மொழிகளைப் பேசுபவர்கள், எத்தனை எத்தனையோ விதமான உணவு வகைகளை உண்பவர்கள், விதவிதமான உடைகளை அணிபவர்கள் - இவ்விதம் அவர்களிடையே புறத்தே நிறைய வேற்றுமைகளைக் காணலாம். ஆனால் இவற்றிற்கெல்லாம் அடிப்படையாக அவர்களது வாழ்வினை ஆராய்ந்தால் ஒரு பேருண்மை நமக்கு விளங்கும். அது அத்தனை கோடி மக்களுக்கும் பொதுவானதொரு அம்சமாக அமைகிறது.

அது என்ன?

"என்னிடத்தில் இருப்பது போதாது. இன்னும் வேண்டும்" என்ற எண்ணம்தான்.

நம்மவரது தனிப்பட்ட வாழ்க்கையைச் சற்று ஆராய்ந்து பார்க்கலாமே!

1000 ரூபாய் சம்பளம் வாங்கும் குமாஸ்தா 3000 ரூபாய் பெறும் தலைமைக் குமாஸ்தா பதவியைப் பெற்று விட்டால் தனது பல பிரச்சினைகள் தீர்ந்துவிடும் என்று கருதுகிறான். அந்தத் தலைமைக்குமாஸ்தாவோ 5000 ரூபாய் பெறும் சூப்பரின்டெண்ட் பதவி நமக்குக் கிடைத்தால் மிக மகிழ்ச்சியாக வாழலாம் என்று கனவு காண்கிறான். அந்த சூபரின்டெண்ட் 8000 ரூபாய் பெறும் மானேஜர் பதவிக்காக ஏங்கிக் கிடக்கிறான். மானேஜரோ, "எத்தனை காலம் இந்தக் கம்பெனியில் மானேஜராகவே பணி புரிவது? எப்பொழுதுதான் நான் ஒரு கம்பெனியின் முதலாளி ஸ்தானத்தை அடையப்போகிறேனோ!" என்று எண்ணி எண்ணி மனம் புழுங்கி நிற்கிறான்.

இதைப்போலத்தான் வக்கீல் ஒருவர் டாக்டர் மகிழ்ச்சியாயிருப்பதாக எண்ணுகிறார். டாக்டரோ தொழிலதிபர், நிறைய பணம் சேர்த்து இன்பமாக இருப்பதாக எண்ணுகிறார். தொழிலதிபரோ அரசியல் வாதியைப்பார்த்துப் பொறாமைப்படுகிறார். இவ்விதமே நிறைவற்றதொரு நிலை உலகமெங்கும் நிலவுகிறது.

இந்த நிலை எதுவரை நீடிக்கும்? பிரம்மபதத்தை அடையும்வரை. அதாவது ஆத்ம ஞானத்தைப் பெறுகின்ற வரை. அப்படியாயின் பிரம்மபதம் எத்தகையது?

மேலும் மேலும் அரிய காட்சிகளைக் காண வேண்டும் என்பது கண்களின் இயல்பு. 'த்ருச்யம்' என்ற சொல்

உடல் மூலம் அனுபவிக்கப்படும் அனைத்தையும் குறிப் பதாகிறது. பிரம்மத்தைத் தவிர மற்றது அனைத்தும் அபூர்வமே. எனவே எதைக்கண்டபின் இன்னும் காண வேண்டும் என்ற எண்ணம் எழாதோ அதுவே பிரம்மம். அதற்கு ஊனக்கண் பயன்படாது. ஞானக்கண் வேண் டும். 'த்ருச்யம்' என்ற ஸ்தூல சரீரத்தால் பெறப்படும் அனுபவங்களுக்கு அப்பாற்பட்டது 'பிரம்மம்' என்பதைக் குறிக்கிறது.

அடுத்தது மனமும், புத்தியும் ஓயாது பல திட்டங் களைத் தீட்டியவண்ணம் இருக்கின்றன. 'நான் இப்படி இருப்பேன். அப்படி ஆவேன்' என்றெல்லாம் எத்தனை மனக்கோட்டைகளை நாம் கட்டுகிறோம். ஆசை வயப்பட்ட வர்க்கு அமைதி உண்டாக வழியில்லை. ஆசை எப்பொழுது அடங்கும்! மனம், புத்தி, செயல் கடந்த நிலைக்குப்போய் விடுகையில்! ஆசைகளைக் கடந்த நிலையே ஞானியின் நிலை. அதுவே பிரம்மநிலை. தன்னை உணர்ந்த பிறகு வேறு எந்தவிதமான ஆசையும் அங்கு இராது. எனவே சூக்ஷ்ம சரீரத்தின் அனுபவங்களுக்கு அப்பாற்பட்டது பிரம்மம். பிரம்ம ஞானம் ஏற்பட்ட பின்னர் அனைத்து வாசனைகளும் இல்லாததாய் விடுவதால் பிறப்பிறப்பற்ற பெருநிலையை ஜீவன் அடைகிறான்.

## 56

तिर्यगूर्ध्वमधः पूर्णं सच्चिदानन्दमद्वयम् ।
अनन्तं नित्यमेकं यत्तद्ब्रह्मेत्यवधारयेत् ॥

திர்ய கூர்த்வமத: பூர்ணம் ஸச்சிதானந்தமத்வயம் ।
அனந்தம் நித்ய மேகம் யத்தத்
ப்ரஹ்மேத்ய வதாரயேத் ॥

எதுகுறுக்கு மேல்கீழா மெங்குநிறை வாகு
மெதுசத்சித் தின்பிரண் டில்ல - எதனந்தம்
நித்தமா யொன்ருல் நிகழ்வதெது வாகுமவ்
வத்து பிரம மறி.

[ஸ்ரீ ரமணர்]

तिर्यग् திர்யக் - குறுக்காகவும், ऊर्ध्वं ஊர்த்வம் - மேலே யும், अधः அத: - கீழேயும் (எங்கேயும்), पूर्णं பூரணம் - நிறைந்ததும், सच्चिदानन्दं ஸச்சிதானந்தம் - சச்சிதானந்தப் பொருளும், अद्वयं அத்வயம் - இரண்டற்றதும், अनन्तं அனந் தம் - எல்லையற்றதும், नित्यं நித்யம் - என்றுமுள்ளதும், एकं ஏகம் - ஒன்ருனதும், यत् யத் - எதுவோ, तत् தத் - அது, ब्रह्म इति பிரஹ்ம இதி - பிரம்மம் என்று, अवधारयेत् அவதாரயேத் - உறுதியாகத் தெரிந்து கொள்ளவும்.

கருத்துரை : எது மேலே கீழே எங்கும் இரண்டன்றிச் சச்சிதானந்தமாய், முடிவற்றதாய் நித்தியமாய் இருக்குமோ அதுவே பிரம்மம் என்று அறிந்து கொள்க.

இரண்டு நபர்கள் கடவுள் தத்துவம் பற்றிப் பேசிக் கொண்டிருக்கிருர்கள். அவர்களில் ஒருவன் கண்ணுல் பார்த்தால்தான் கடவுளை நம்புவேன் என்று வாதிடுகிருன். சாதாரணமாகப் பேசிக்கொண்டிருந்த அவர்களது பேச்சு திடீரென்று காரசாரமாக மாறி விடுகிறது. அப்பொழுது ஆஸ்திகன் மற்றவனைக் கன்னத்தில் படாரென்று அடித் துவிடுகிருன். அடிபட்டவன் 'ஐயோ! வலிக்கிறதே' என்று கன்னத்தைப் பிடித்துக்கொண்டு உட்கார்ந்து விடுகிருன். உடனே மற்றவன், 'என்ன வலிக்கிறதா?, எங்கே அதைக் காட்டுப் பார்க்கலாம்', என்று கேட்க அதற்கு அவன், 'உனக்கு என்ன பைத்தியம் பிடித்து விட்டதா? வலியைக் காண்பிக்க முடியுமா? அது ஸ்தூலப்பொருளா கண்ணுல் காண? வலியை உணரத் தான் முடியுமே தவிர கண்

ணுல் காண முடியாது' என்று சொல்கிருன். அதைக் கேட்ட ஆஸ்திக நண்பன் அவனைப் பார்த்து 'நண்பா! நான் உன்னை அடித்ததற்காகக் கோபித்துக்கொள்ளாதே. கடவுளைக் கண்ணுல் கண்டால்தான் நம்புவேன் என்று கூறினாயே. அதற்கு நீயே ஒரு அரிய விளக்கம் தந்து விட்டாய். எவ்விதம் வலியை உணரத் தான் முடியுமே தவிர கண்ணுல் பார்க்க முடியாதோ, அதுபோல் புலன் பொறிகளுக்கு அப்பாற்பட்ட கடவுள் தத்துவத்தை உணரத்தான் முடியுமே தவிர கண்ணுல் காண முடியாது. ஆனால் ஆத்ம ஞானத்தை அடைந்துவிடுகையில் காண்பது யாவும் கடவுட் தோற்றமாகவே தென்படும். இனிமேல் இது போல் 'கடவுளைக் காட்டு அதைக் கண்ணுல் கண்டால்தான் நம்புவேன் என்றெல்லாம் பிதற்றுதே' என்று அவனுக்கு அறிவுரை கூறினான்.

பிரம்ம நிலையே பெருநிலை. அது கால தேச வர்த்தமானத்திற்குக் கட்டுப்படாதது. அது வாக்கிற்கும் மனத்திற்கும் அப்பாற்பட்டது. ஒன்றைப் பற்றி நாம் விளக்க முற்படுவது என்றுலே அது ஒரு எல்லைக்குள் அடங்கியது என்பதுதான் பொருள். எல்லையற்றதை எப்படி எல்லைக்குட்பட்டதாகக் கூறமுடியும்? உருவம் கடந்ததை எப்படி உருவத்திற்குள் கட்டுப்படுத்த முடியும்? குணம், குறி கடந்த ஒன்றை எப்படிக் குணங்களுக்குள் கட்டுப்பட்டதாகக் கூற முடியும்? இதனால்தான் குருதேவர் ஸ்ரீசுவாமி சிவானந்தர், 'To define God is to deny God' கடவுளைப் பற்றி விளக்க முற்படுவதானது கடவுளை மறுப்பதற்கு நிகராகும், என்று குறிப்பிட்டுள்ளார். அதுதான் உண்மை.

எங்கும் நிறைந்த பரம்பொருளை இங்கு தான் உள்ளது, இப்படித்தான் இருக்கும் என்று கூறுவது தவருன செயலே. ஏனெனில் மேலுலகத்தில் கடவுள் இருக்கிருர் என்றுல் கீழுலகில் அவர் இல்லை என்றுகிறது. ஆனா

லும் ஒரு குறிப்பிட்ட இடத்தில் ஒரு குறிப்பிட்ட வடிவத்தில் இறைவனை நாம் வணங்குவதானது எங்கும் எதிலும் பரம் பொருளைக் காண்பதற்கு முன்னோடியாக அமைகிறதேயன்றி வேறல்ல.

இன்று இருந்து நாளை இல்லாமற் போவது பரம் பொருளாகாது. ஏனெனில் அது காலம் கடந்தது. காலத்தில் கட்டுப்படாதது. அதற்கு அன்னியமாக இரண்டாவது என்று வேறு எதுவும் கிடையாது. எனவே அது 'அத்வயம்' ஆகிறது.

ஸ்தூல, சூக்ஷ்ம, காரண சரீரங்கள் சேர்ந்து அமைந்தவர்கள் நாம். ஸ்தூல சரீரம் வெறும் ஜடமே. அதில் 'இருக்கிறது' என்ற தன்மை தவிர வேறு கிடையாது. அது 'ஸத்' எனப்படுகிறது. அடுத்து மனம், புத்தியாலானது சூக்ஷ்ம சரீரம். அவற்றின் மூலம் நாம் அறிவதால் அது 'சித்' எனப்படுகிறது. நல்ல ஆழ்ந்த தூக்கத்தில் நமக்கு ஏற்படும் உணர்வு ஆனந்தம். காரண சரீரத்திற்கு எட்டாத ஒன்றை நாம் இப்படியெல்லாம் விளக்கி ஒருவாறு புரிந்து கொள்ள முற்படுகிறோம்.

## 57

अतद्व्यावृत्तिरूपेण वेदान्तैर्लक्ष्यतेऽद्वयम् ।
अखण्डानन्दमेकं यत्तद्ब्रह्मेत्यवधारयेत् ॥

அதத்வ்யா வ்ருத்தி ரூபேண
வேதாந்தைர் லக்ஷ்யதே(அ)த்வயம்: ।
அகண்டாநந்த மேகம் யத்தத்
ப்ரஹ்மேத்யவதாரயேத் ॥

ஏதழிவில் லாதஎத தையன்றெந் றன்றென்றே
வேத முடிவு விளக்கிடும் - யாதொன்

றகண்டவின் பாகி யாருமது தானே
திகழும் பிரமந் தெளி.

[ஸ்ரீ ரமணர்]

अतद्व्यावृतिरूपेण அதத் வ்யாவ்ருத்தி ரூபேண - அது அல்லாததை நீக்கும் முறையைப் பின்பற்றி, वेदान्तै வேதாந்தை - வேதாந்தங்களால், यत् யத் - எது, लक्ष्यते லக்ஷ்யதே - சுட்டப்படுகிறதோ, अद्वयं அத்வயம் - இரண்டற்றதும், अखण्डानन्दं அகண்டானந்தம் - இடையறாத ஆனந்த சொரூபமானதும், एकमं ஏகம் - ஒன்றானதுமான, तत् தத் - அதுவே, ब्रह्म इति ப்ரஹ்ம இதி - பிரம்மம் என்று, अवधारयेत् அவதாரயேத் - உறுதி செய்து கொள்க.

கருத்துரை : 'இது அல்ல, இது அல்ல' (நேதி நேதி) என்ற முறையைப் பின்பற்றி வேதாந்தம் அந்தப் பரம் பொருளைச் சுட்டிக்காட்டுகிறது. 'அது தனி ஒன்றானது. இரண்டற்றது. இடையறாத இன்பமானது' என்று எதை அது சுட்டுகின்றதோ அதுவே பிரம்மம்.

பிரம்மம் நமது உள்ளுணர்வால் உணர வேண்டியதாகும். அத்தகைய தொன்றைப் பேச்சினால் எவ்வளவு தான் விளக்க முயன்றாலும் அது இயலாத காரியமாகும். பலவாகத் தோன்றும் உலகப்பொருள்களில் மயங்கித் திரிதல் உலகத்தவரது இயல்பு. பிரம்மம் இதுவா அதுவா என்று ஒவ்வொன்றாக ஆராய்கின்ற பொழுது 'அது இல்லை, அது இல்லை' என்று மறை நூல்கள் பதில் சொல்கின்றன. 'நேதி நேதி' என்ற சொல்லால் 'அது பிரம்மம் அல்ல' 'அது பிரம்மம் அல்ல' என்று அவை கூறுவதன் மூலம் பிரம்மம் புலன்கள் கடந்த நிலையில் உணரப்பட வேண்டியதொன்று என்பதை மறைமுகமாகப் போதிக்கின்றன.

ஓரிடத்தில் பத்துப் பதினைந்து புருஷர்கள் நின்று கொண்டிருக்கிறார்கள். ஒரு பெண்ணிடம் 'இது உன் கணவனா?' என்று அவர்களில் ஒவ்வொருவராய்ச் சுட்டிக்காண்பித்துக் கேட்கையில் அவள் 'இவர் இல்லை, இவர் இல்லை' என்று தலையசைக்கிறாள். கடைசியில் அவளது கணவனைச் சுட்டிக் காட்டி 'இவர் உன் கணவனா?' என்று கேட்கும் பொழுது நாணத்தால் தலை குனிந்து நிற்கிறாள். அவளது மௌனம் அவன் தான் அவளுடைய கணவன் என்பதற்கு விளக்கமாயமைகிறது. இது போல, 'இது இல்லை, இது இல்லை' என்று ஒவ்வொன்றாக மறுத்து இறுதியில் மௌனத்தின் மூலம் இதுவே பிரம்மம் என்று சுட்டிக்காட்டுகின்றன. வேதாந்த மறை நூல்கள். இதை 'அதத் வ்யா - விருத்தி ரூபேண' என்ற சொற்றொடர் விளக்குகிறது. 'அது அல்லாத நீக்கும் முறை' என்று இது பொருள் படுகிறது.

உலகப்பொருள்களில் மயங்கி நிற்கின்றவரை, உலக இன்பங்களை நாடி ஓடிச் சென்று கொண்டிருக்கும் வரை பிரம்ம ஞானம் கண்டிப்பாய் தமக்குக் கிட்ட வாய்ப்பே யில்லை. 'ஜஹாங் காம் ஹை வஹாங் ராம் நஹி, ஜஹாங் ராம் ஹை வஹாங் காம் நஹி' என்பது போல 'எங்கு ஆசை உண்டோ அங்கு ராமன் இருக்க மாட்டான், எங்கு ராமன் இருப்பானோ அங்கு ஆசை இருக்காது' ஆசை அறவே அற்ற நிலையில் தான் பிரம்ம ஸாக்ஷாத்காரம் கிட்ட வாய்ப்புண்டு.

பிரம்மம் இரண்டற்றது. 'ஏக மேவ அத்விதீயம் பிரம்ம' என்ற வாக்கியம் இதை நிரூபிக்கிறது. 'ஒன்று' என்பது மட்டுமல்லாமல், 'இரண்டற்றது' என்று சொல்வது உயர்ந்ததொரு தத்துவத்தைக் குறிக்கிறது. எங்கே இரண்டு என்ற நிலைமை நிலவுகிறதோ அங்கே வேற்றுமை பிறந்து விடுகிறது. உண்மை ஒன்றாகத்தான் இருக்க முடியும். எது உண்மை? 'பிரம்மைவ ஸத்யம்' - பிரம்மம் தான் உண்மை. எனவே பிரம்ம இரண்டற்ற ஒன்றுதான் என்று தீர்மானமாகிறது.

உயிர்கள் அனைத்தும் இன்பத்தையே நாடுகின்றன. எத்தகைய இன்பத்தை? இடையறுத இன்பத்தை, துக்கக் கலப்பற்ற இன்பத்தை. முதலில், நடுவில் முடிவில் எந்த நிலையிலும் மாறுத இன்பத்தை. உலகப் பொருள்களி லிருந்து நாம் பெறுவது போலி இன்பம். ஏன்? அது துக்கம் கலந்த இன்பம். நாம் விரும்பியதைப் பெறும் முன்னர் அதைப் பெற வேண்டுமே என்ற ஏக்கம். அது வும் ஒரு வகைத் துன்பம். உலகில் நாம் எதை ஆராய்ந் தாலும் இதுதான் அதைப்பற்றிய அடிப்படை உண்மை. ஆனால் பிரம்மானந்தமோ துக்கக் கலப்பற்ற 'அகண்டா னந்தம்'. பிரம்மத்தை உணர்ந்த ஞானிகள் அனுபவிப்பது இத்தகைய அகண்டானந்தத்தைத்தான்.

## 58

अखण्डानन्दरूपस्य तस्यानन्दलवाश्रिता : ।
ब्रह्माद्यास्तारतम्येन भवन्त्यानन्दिनोखिलाः ॥

அகண்டானந்த ரூபஸ்ய
தஸ்யானந்த லவாச்ரிதா: ।
ப்ரஹ்மாத்யாஸ் தாரதம்யேந
பவந்த்யாநந்திநோ(அ)கிலா: ॥

அகண்ட சுகமய வான்மாவி லற்ப
சுகத்தை யடுத்தே சுரராய்த் - திகழும்
பிரமாதி யேனோர் பிறங்குவரின் புற்றுத்
தராதர மாகத் தரி.

[ஸ்ரீ ரமணர்]

अखण्डानन्दरूपस्य அகண்டானந்த ரூபஸ்ய - அகண்டமான ஆனந்த சொரூபியான, तस्य தஸ்ய - அந்தப் பொருள்களினு

டைய, आनन्द ஆனந்த - இன்பத்தின், लव லவ - அணுவான பகுதியை, आश्रिताः ஆச்ரிதா: - அண்டியவர்களாக, ब्रह्माद्या ப்ரஹ்மாத்யா - பிரம்மதேவர் முதல், अखिलाः அகிலா: - எல்லோரும், तारतम्येन தாரதம்யேன - உயர்வு குறைவாக, आनन्दिनः ஆனந்தின: - இன்பம் துய்ப்பவர்களாக, भवन्ति பவந்தி - ஆகின்றூர்கள்.

கருத்துரை : அந்த இன்பமயப்பொருளின் அணு அளவு இன்பத்தைப் பெற்றே உலகம் முழுவதும் தேவர், பிரம்மா, உட்பட இன்பம் பெறுகிறூர்கள்.

உலகில் அனைவருமே இன்பம் துய்க்கின்றனர். ஏன், அனைத்து ஜீவராசிகளுமே இன்பத்தை அனுபவிக்கின்றன. அவைகள் அனுபவிக்கும் இன்பத்தின் தரத்தில் வேறுபாடு இருக்கலாம். நன்கு பசியோடிருப்பனுக்கு உணவு கிடைத்தால் அது அவனுக்கு இன்பம். பல நாள் தூங்காதிருப்பவனுக்குச் சிறிது உறங்க அவகாசம் கிடைத்து அவன் நிம்மதியாக உறங்கினால் அது அவனுக்கு இன்பம். வெயிலில் வாடுபவனுக்கு நிழல் கிடைத்தால் அது அவனுக்கு இன்பம். பசியோடிருக்கும் புலிக்கு இரை கிடைத்தால், அதற்கு அது இன்பம். பெரிய நாட்டை ஆளும் அரசனுக்கு அண்டைநாடும் அவனுக்கு அடி பணிந்தால் அது அவனுக்கு இன்பம். பல வருடங்களாகப் பிள்ளைப்பேறில்லாத ஒரு பெண்ணிற்குக் குழந்தை பிறந்தால் அது அவளுக்கு இன்பம். இவ்விதம் சிற்றுயிர், பேருயிர் அனைத்துமே இன்பத்தை நாடியே உயிர் வாழ்கின்றன. ஆனால் இந்த இன்பம் கணப்பொழுதில் மறைந்துபோகும் தன்மையது. மனிதர்கள் மட்டுமல்ல. தேவர்களும் சதா இன்பத்தை அனுபவித்த வண்ணம் இருக்கின்றனர். மனிதர்கள் அனுபவிக்கும் இனபத்திற்கும் தேவர்கள் அனு

பவிக்கும் இன்பத்திற்கும் ஒரு அடிப்படை வேற்றுமை உண்டு.

மனிதர்களாகிய நாம் அனுபவிக்கும் இன்பம் துக்கக் கலப்புள்ள இன்பம். அல்வாவை நினைத்தாலே நாவில் நீர் ஊறுகிறது. முதல் அல்வாத்துண்டு மிகவும் ருசியாயிருக்கிறது. வாய்க்குள் போட்டதெங்கே வயிற்றுக்குள் போனதெங்கே என்ற வேகத்தில் அது உள்ளே போய் விடுகிறது. அடுத்த முறை அல்வா சாப்பிடுகையில் முதல் தடவை சாப்பிட்ட பொழுது இருந்த இன்பம் இருப்பதில்லை. மூன்றாவது, நான்காவது.... சிறிது நேரத்திற்குள்ளேயே வாய்க்குள் போட்ட அல்வாத்துண்டம் உள்ளே செல்ல மறுக்கிறது. அதற்கு மேலும் அதை உள்ளே திணித்தால் வயிற்றினுள் போட்ட அல்வா வெளியே வருகிறது. எந்த ஒன்றை மிகவும் விரும்பினோமோ அதே பொருளில் பின்னர் வெறுப்பு ஏற்படுகிறது. இது தான் உலகப்பொருள்களிலிருந்து நாம் பெறும் இன்பத்தைப் பற்றிய உண்மை.

ஆனால் 'பிரம்மானந்தம்' எத்தகையது? முதலில் அது எத்தகையது என்பதை நம்மால் விளக்கிக் கூற இயலாது. ஏனெனில் முதற்கண், அது இப்படித்தான் இருக்கும் என்று விளக்கிக் கூற முடியாத தொன்று. அடுத்து இப்படித்தான் இருக்கும் என்று கூறமுடிந்தால் வரையறுக்க முடியாத ஒன்றை வரையறுத்து விளக்கிய குற்றம் நம்மைச் சாரும். இருந்தாலும் பிரம்மானந்தம் எத்தகையது என்பதை நாம் புரிந்து கொள்ள வேண்டுமல்லவா? அதற்காக ஸ்ரீசங்கரர் இங்கே ஒரு சிறு விளக்கம் தருகிறார். புல் முதல் பிரம்மா வரை உயிர்கள் யாவும் மொத்தமாகப் பெறும் இன்பமானது அந்தப் பிரம்மானந்தத்தின் ஒரு மிகச் சிறிய பகுதிக்கு (அதாவது அணுவளவுக்கு) நிகர். சமுத்திரம் எவ்வளவு பெரியது என்பதை சமுத்திரத்தையே

பார்த்தறியாத ஒரு கிணற்றுத் தவளைக்கு கடல் தவளை ஒன்று எடுத்துக் கூற முயன்றதைப் போலுள்ளது இது. சமுத்திரம் எங்கே? கிணறு எங்கே? இரண்டையும் ஒப்பிட முடியாது தான். இருந்தாலும் ஆயிரமாயிரம் கிணறுகள் சேர்ந்தது ஒரு கடல் என்று சொல்லுவதைப் போன்று உயிர்கள் அனைத்தினுடையவும் மொத்த இன்பம் பிரம் மானந்தத்தின் ஒரு திவலை என்று கூறப்படுகிறது.

பிரம்மானந்தம் எத்தகையது என்பதை அனுபவத்தால் உணர வேண்டுமே ஒழிய வார்த்தைகளால் விளக்கிக் கூற இயலாது என்பதை நமக்கு உணர்த்துவதற்காக ஸ்ரீசங் கரர் இவ்வாறு உவமானம் சொல்கிறார்.

## 59

तद्युक्तमखिलं वस्तु व्यवहारस्तदन्वितः ।
तस्मात्सर्वगतं ब्रह्म क्षीरे सर्पिरिवाखिले ॥

தத்யுக்த மகிலம் வஸ்து வ்யவஹாரஸ்ததந்வித: ।
தஸ்மாத் ஸர்வகதம் ப்ரஹ்ம க்ஷீரே ஸர்பிரிவாகிலே॥

அதனிடத் துள்ள தகிலமுஞ் செய்கை
யதையடுத் துள்ளதே யாகு - மதனாற்
பரவிடு மெல்லாம் பரம்பொருள் பாலில்
விரவிடு நெய் போல வே.

[ஸ்ரீரமணர்]

अखिलं அகிலம் वस्तु வஸ்து - எல்லா(ப்) பொருள்க ளும், तद्युक्तं தத்யுக்தம் - அதனுடன் இணைந்தனவே, व्यवहार வ்யவஹார - (எல்லாவற்றுடைய) செயலும், तदन्वितः தத்

அன்வித - அதனுடைய சேர்க்கையாலேயே, तस्मात् தஸ்மாத் - அதனால், क्षीरे க்ஷீரே - பாலில், अखिले அகிலே - எங்கும், सर्पि इव ஸர்பி: இவ - நெய் போல, ब्रह्म ப்ரஹ்ம - பரப்பிரம்மம், सर्वगतं ஸர்வகதம் - எங்கும் நிறைந்தது.

கருத்துரை : எல்லாப் பொருள்களுடனும் அது இணைந்துள்ளது. அது சேர்ந்தால் தான் எதுவும் இயங்குகிறது. பாலுள் வெண்ணெய் போல அது அனைத்தினுள்ளும் மறைந்து நிற்கிறது.

கடவுள் எங்கே கடவுள் எங்கே என்று காணத்துடிப்பவர்களுக்கும், கண்ணுல் பார்த்தால் தான் நம்பமுடியும் என்று சவால் விடும் நாஸ்திகர்களுக்கும் ஸ்ரீசங்கரர் இங்கே ஒரு அரிய உவமானத்தின் மூலம் உண்மையை எடுத்துரைக்கின்ருர்.

பிரம்மம் அல்லது கடவுள் எங்கும் எதிலும், எப்பொழுதும் உறையும், தத்துவமாகும். எங்கும், எதிலும் எப்பொழுதும் கடவுள் இருக்கிருர் (இருக்கிருர் என்பதால் கடவுள் ஆணல்ல, கடவுள் அவர் அவள் அது அனைத்தையும் கடந்த தத்துவமாகும்.) என்ருல் ஏன் அவரைக் காண முடியவில்லை என்ற பிரச்சினை அன்றும் எழுப்பப்பட்டது, இன்றும் எழுப்பப்படுகிறது. இப்படிக்கேட்பதே கேட்பவனது அறியாமைக்கு எடுத்துக்காட்டாகும். ஏன்? இந்த ஊனக்கண்ணுல் காண அது ஒரு ஸ்தூலப் பொருளல்லவே. மாருக, இந்த ஸ்தூலப்பொருளும், கடவுளே என்பதை நாம் ஒப்புக்கொள்ளும் பட்சத்தில் அதைக் கடவுளாகக் காண்பதற்கேற்ற மனபரிபாகம் நம்மிடம் வந்துவிடுமாகில் நாம் இந்த ஊனக்கண்ணுலேயே கடவுளை எங்கும் கண்டு களிக்கலாம். அப்படிக் காணும் பெருநிலையிலுள்ளோர் இத்தகைய அசட்டுத்தனமாக கேள்விகளைக் கேட்போருக்கு பதில் சொல்லவும் முன்வரமாட்டார்கள்.

ஏனெனில் அவர்கள் எப்படிப் பதில் சொன்னாலும் அறியாமை கவ்வி நிற்கும் மனத்தவர்களுக்கு அது புரியாது என்பதை அவர்கள் அறிவர்.

கடவுள் எங்ஙனம் அனைத்திலும் வியாபித்து விளங்குகிறார் என்பதை ஸ்ரீசங்கரர் ஒரு அழகான உவமானத்தின் மூலம் விளக்குகிறார். பாலில் வெண்ணெய் இருக்கிறது என்பது அனைவருக்கும் தெரியும். ஆனால் நம் முன்னர் வைக்கப்பட்டுள்ள ஒரு கப் பாலில் வெண்ணெய் தெரியவில்லையே. அதனால் அந்தப் பால் மோசம் என்றோ, அல்லது பாலில் வெண்ணெய் உள்ளது என்ற கோட்பாடே தவறு என்றோ நாம் கூற முற்படுவோமேயாகில் அது எவ்வளவு அசட்டுத்தனமான கூற்றாகும். அதைக் கேட்போர் சிரித்து நம்மை ஏளனம் செய்வார்களல்லவா!

பாலில் வெண்ணெய் இருக்கிறது என்பதை நிரூபிக்க நாம் என்ன செய்ய வேண்டும். காய்ச்சிய பாலை ஆற வைக்க வேண்டும். அது இளம் சூடாக இருக்கையில் அதனுடன் கொஞ்சம் மோரையோ தயிரையோ சேர்க்க வேண்டும். பின்னர் அதை ஓரிடத்தில் அசையாது வைக்க வேண்டும். இரவு முழுவதும் அப்படி அது இருந்த பின்னர் மறுநாள் காலையில் அந்தப் பாத்திரத்தை பார்த்தால் பால் தயிராகக் காட்சி தரும். பின்னர் மத்தைக் கொண்டு தயிரைக் கடைய வேண்டும். அப்படிக் கடைகையில் வெண்ணெய் பாலிலிருந்து பிரிகிறது. அந்த வெண்ணெயைத் தனியாக எடுத்து நீருள்ள ஒரு பாத்திரத்தில் போடுகிறோம். மத்தைக் கொண்டு கடைகையில் ஜாக்கிரதையாக இருத்தல் வேண்டும். ஏனெனில் அதிகம் கடைந்துவிட்டால் வெண்ணெ மீண்டும் உருகித் தயிருடன் சேர்ந்து விடும். வெண்ணெயைத் தண்ணீரில் போட்டோமல்லவா. அந்த நீரை நாள்தோறும் புதுப்

பிக்க வேண்டும். ஒரு குறிப்பிட்ட அளவு வெண்ணை சேர்ந்ததும் அதை உருக்கி நெய்யாக ஆக்குகிறோம். பாலிலிருந்து வெண்ணையை எடுக்க நாம் இவ்வளவு முயற்சிகள் எடுத்துக்கொள்ள வேண்டியதிருக்கிறது.

பாலில் உள்ள வெண்ணையைப் பெறுவதற்கே நாம் இத்தனை முயற்சிகளை மேற்கொள்ள வேண்டியிருக்கிறது என்றால் மனத்தகத்து மிளிரும் பிரம்மத்தை உணர நாம் எவ்வளவு பாடுபடவேண்டும்?

இந்த உதாரணத்தில் பால் மனத்தைக் குறிக்கிறது. வாழ்க்கையில் பல்வேறு இன்ப துன்பங்களை அனுபவித்ததன் பின்னர் மனம் ஏகாந்த வாழ்வை நாடி அடங்கத் தலைப்படுகிறது. இந்த ஏகாந்தம் அவனது வீட்டிலேயே அவனுக்குக்கிட்டலாம். அதற்காக இமயமலைக் குகைகளுக்குச் செல்ல வேண்டியதில்லை. தீயின் உஷ்ணத்தினால் பால் பக்குவமடைவது போல இன்ப துன்பங்களாகிய வாழ்க்கைப் பிரச்சினைகளால் மனம் பக்குவப்படுகிறது.

மனம் ஓரளவு அடங்கிய பின்னர் கொஞ்சம் சுவாத்தியாயம் அல்லது ஆன்மீக நூல்களைப் படிப்பது அவசியமாகிறது. இது பாலில் கொஞ்சம் தயிரையோ, மோரையோ சேர்ப்பதற்கு நிகர் பிறகு காலக்கிரமத்தில் சாதகன் படிப்படியாக அதுகாறும் வெளியே பாய்ந்தோடிச் சென்ற புலன்களைச் சிறிது சிறிதாக அடக்க வல்லவனாகிறான். பால் தயிர் ஆகி கட்டியாகி விடுவது போல, அவனது அடங்காத மனம் அடங்கி அவன் நிலைத்த புத்தியைப் பெறுகிறான். பின்னர் அதிகாலையில் பிரம்ம முகூர்த்தத்தில் ஜபம், தியானம் முதலானவற்றை ஒழுங்காகச் செய்து வரவேண்டும். அவற்றால் சாதகனிடம் ஆன்மீக சக்தி கூடுகிறது. அது எப்படித் தெரிகிறது? அவனது முகத்தில் ஒரு வித தேஜஸ், மனத்தில் அமைதி,

சிந்தனையில் தெளிவு, சொல்லில் கம்பீரம் போன்றவற்றால் புலனாகின்றன. உள்ளுணர்வு அதிகரிப்பதற்கேற்ப அவன் அந்தர் முகமான வாழ்வினில் பெரிதும் நாட்டம் செலுத்துகிறான். இறுதியில் ஆத்மானுபூதியை அடைந்து பேரின்ப நிலையை எய்துகிறான்.

## 60

अनण्वस्थूलमह्रस्वमदिमजमव्ययम् ।
अरूपगुणवर्णाख्यं तद्ब्रह्मेत्यवधारयेत् ॥

அநண்வஸ்தூலமஹ்ரஸ்வ மதீர்கமஜமவ்யயம் ।
அரூப குண வர்ணாக்யம்
தத்ப்ரஹ்மேத்ய வதாரயேத் ॥

பருமையு நுண்மையுற் பத்தி விரசெங்
குறுகலு நீட்சியுங் கூடா - துருவங்
குணங்குல நாமமுங் கொள்ளாம லுள்ள
துணர்க பிரமமென் றுற்று.

[ஸ்ரீரமணர்]

अनणु அநணு - அணுவுமல்லாமல் (சூட்சுமமானது) अस्थूलं அஸ்தூலம் - ஸ்தூலமுமில்லாமல், अह्रस्वं அஹ்ரஸ்வம் - குறுகியதுமில்லாமல், अदीर्घं அதீர்கம் - நெடுகியதுமில்லாமல், अजं அஜம் - பிறவாததும், अव्ययं அவ்யயம் - அழியாததும், अरूपगुणवर्णाख्यं அரூபகுண வர்ணாக்யம் - உருவம், குணம், நிறம் (சொல்லி), விளக்க முடியாததுமான, तत् தத் - அந்தப் பொருளை, ब्रह्म इति ப்ரஹ்ம இதி - பிரம்மம் என்று,

अवधारयेत् அவதாரயேத் - உறுதி கொள்ளுங்கள்.

கருத்துரை : பருமன், நுண்மை, குறுகல், நீட்சி, பெயர் உருவம் போன்ற குணம் குறிகள் எதுவும் அற்றது பிரம்மம்.

ஸ்தூலமான ஒரு பொருளை மனத்தினால் கிரகிப்பது மிக எளிது. ஆனால் சூக்ஷ்மமான தொன்றை மனத்தால் கிரகிப்பது கடினம்.

உதாரணமாக, 'மலை' என்று யாராவது சொன்ன வுடன் நமக்கு மனத்தில் ஒரு பெரிய மலையே உரு வாகிவிடுகிறது. 'கடல்' என்று எவராவது சொன்னால் பரந்து விரிந்த நீலக்கடல் உடனே நம் மனக்கண்ணில் தோன்றுகிறது. மலையும் கடலும் ஸ்தூலப்பொருள்கள்.

காலை வேளை, இதமான தென்றற் காற்று வீசுகி றது. அப்பொழுது புள்ளினங்கள் சிறகடித்துப் பறந்து செல்லுகின்றன' என்று புத்தகத்தில் படிப்பதாக வைத் துக் கொள்ளுவோம். உடனே நமக்கு மனத்தில் என்ன தோன்றும்? பறந்து செல்லும் புள்ளினம் நம் மனக்கண் ணில் தோன்றும்.. ஏனெனில் அது ஸ்தூலம். ஆனால் அதே வாக்கியத்தில் 'இதமான தென்றற்காற்று வீசுகி றது' என்ற வர்ணனை வருகிறது. காற்றிற்கு உருவம் கிடையாதே. அது எப்படி மனத்தில் தோன்றும்? முன்பு எப்பொழுதோ ஒரு நாள் காலையில் நாம் அதிகாலையில் நடந்து சென்ற சமயம் வீசிய தென்றற் காற்றை அனு பவித்த உணர்ச்சி இப்பொழுது நினைவிற்கு வரலாம். அல்லது அது பற்றிய நினைவு மனதில் எழாமலே போகலாம்.

எனவே ஒரு பொருள் சூக்ஷ்மமாக ஆவதற்கேற்ப மனத்தினால் அதைக் கிரகிக்க முடியாமற் போகிறது. ஏன்? உஷ்ணம், குளிர்ச்சி, மகிழ்ச்சி, துன்பம் போன்ற பல் வேறு உணர்ச்சிகளைப் பற்றிக் கூறுகையில் மனத்தினால் அவற்றைக் கிரகிக்க முடிவதில்லை. ஏனெனில் பிரபஞ் சத்திலுள்ள பொருள்களைப் பற்றி மனம் மற்றும் புத்தி கிரகிக்க வேண்டுமானால் அவற்றிற்குக் கீழ்க்கண்ட குணநிசயங்கள் இருந்தாக வேண்டும்.

முதலில் பொருளிடத்தில் ஒரு குறிப்பிட்ட 'குணம்' இருந்தாக வேண்டும். இதை ஆங்கிலத்தில், 'Property' என்று கூறுகிறோம். பொருள் என்று சொன்னால் அது ஏதாவது குணத்தைக் கொண்டதாக இருத்தல் அவசியம். அடுத்து அதற்கு ஒரு பெயர் இருந்தாக வேண்டும். பிறகு அதற்கு செயல்முறை, தன்மை மற்றும் இதரப் பொருள் களுடன் உண்டான தொடர்பு இத்தனையும் இருந்தாக வேண்டும்.

ஸ்தூலமானதொன்றை விளக்குதல் எளிது. அதற்குக் குறைவான வார்த்தைகள் போதும். ஆனால் சூக்ஷ்ம மானதொன்றை விளக்க வார்த்தைகள் பல வேண்டும். உதாரணமாகப் பஞ்சபூதங்களில் மண் மிகவும் ஸ்தூல மானது, மண்ணைப் பற்றி விளக்குவது எளிது. கரிசல் மண், வண்டல் மண், செம்மண், உவர்மண் என்று மண் ணின் பெயரைச் சொன்ன மாத்திரத்திலேயே நமக்கு அதைப் பற்றிய விளக்கமும் மனத்தில் எழுகிறது. ஆனால் 'ஆகாயம்' மிகவும் சூக்ஷ்மமானது. அதை ஆங்கிலத்தில் 'Ether' என்று சொல்லுகிறோம். ஆகாயத்தை வார்த் தைகளால் விளக்குதல் மிகவும் கடினம். அது எங்கும் பரந்து விரிந்தது. எல்லாவற்றிலும் ஊடுருவியிருப்பது.

எப்பொழுது இருப்பது என்றெல்லாம் சொன்னாலும், ஆகாயத்தைப் பற்றிப் பூராவாக விளக்குதல் முடியாத காரியம். ஏனெனில் விளக்கத்திற்கு அப்பாற்பட்டதாக அது விளங்குகிறது. கிட்டத்தட்ட பிரம்மத்தைப் பற்றிய விளக்கம் ஆகாயத்தைப் பற்றிய விளக்கத்தை போன்ற தேயாம். ஆகாயத்தைக் காட்டிலும் அதி சூக்ஷ்மமானது. பிரம்மம். பஞ்சபூதங்களில் ஒன்றாகிய ஆகாயத்தைப் பற்றியே நம்மால் திருப்திகரமாக விளக்கிக் கூற இயலாத நிலைமையில், குணம் குறியற்ற வாக்கிற்கும் மனத்திற்கும் எட்டாத பிரம்மத்தைப் பற்றி விளக்குவது எங்ஙனம்?

பிரம்மத்தை வார்த்தைகளால் விவரிக்க முடியாது என்று சொல்லிவிட்டு, திரும்பத் திரும்ப 'அது இவ்விதம் இல்லை' என்று கூறுவது, அது அதிசூக்ஷ்மமானது, அனைத்தையும் கடந்தது என்ற உண்மையை நமக்குப் புரிய வைப்பதற்காகத் தான்.

## 61

यद्भासा भास्यतेऽर्कादि भास्यैर्यत्त न भास्यते ।
येन सर्वमिदं भाति तद्ब्रह्मेत्यवधारयेत् ॥

யத்பாஸா பாஸ்யதே(அ)ர்காதி
பாஸ்யைர்யத்து ந பாஸ்யதே ।
யேந ஸர்வமிதம் பாதி தத்
ப்ரஹ்மேத்யவதாரயேத் ॥

எதனொளியி னாலொளிரு மேயிரவி யாதி
யெதனை யவையொளிர்க்க வேலா - தெதனாலே
யிந்தவுல கெல்லா மிலகு மதுதானே
யந்தப் பிரம மறி.

[ஸ்ரீ ரமணர்]

यत् भासा யத் பாஸா - எதனுடைய ஒளியால், अर्कादि அர்காதி - சூரியன் முதலியவை, भास्यते பாஸ்யதே - ஒளி தரப்படுகிறதோ, यत् யத் - எது, भास्यैः பாஸ்யை: - அப்படி ஒளி பெற்றவைகளால், न भास्यते ந பாஸ்யதே - பிரகா சிப்பிக்கப்படுகிறதில்லையோ, येन யேந - எதனால், इदं सर्वं இதம் ஸர்வம் - இந்த எல்லாம், भाति பாதி - விளக்கம் பெறுகிறதோ, तत् தத் - அதை, ब्रह्मेति ப்ரஹ்மேதி - பிரம் மம் என்று, अवधारयेत् அவதாரயேத் - அறிந்து கொள்ளவும்.

கருத்துரை : சூரியன் முதலானவை அந்தப் பிரம் மத்தினுடைய ஒளி கொண்டே பிரகாசிக்கின்றன. ஆனால் அவை அதை ஒளிர வைக்க முடியாது. எதனால் அனைத் தும் ஒளியைப் பெறுகின்றனவோ அதுவே பிரம்மம் என்று உறுதி கொள்வாயாக.

முந்தைய சில சுலோகங்களில் பிரம்மம் 'இது அல்ல' என்று எதிரிடை முறையில் விளக்கங்கள் தரப்பட்டன. இதனால் வாசகர்களின் மனதில் பிரம்மத்தைப் பற்றிய ஒரு குழப்பமான கருத்து உருவாகக் கூடும் அல்லவா? அதைப் போக்குவதற்காக ஸ்ரீசங்கரர் இந்த சுலோகத்தில் பிரம்மத்தைப் பற்றிய ஒரு நேரிடை விளக்கம் தருகிறார்.

பிரபஞ்சத்தில் சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள் போன்ற ஒளிரும் வஸ்துக்கள் உள்ளன. உலகை இருள்

சூழ்ந்து கொள்ளும் மாலை வேளையில் மினுக் மினுக் என்று மின் மினிப் பூச்சிகள் ஏதோ தாங்கள் தாம் உலகிற்கு வெளிச்சத்தைத் தரப்போவதாக எண்ணிக் கொண்டு வெளி வருகின்றன. ஆனால் சிறிது நேரத்தில் நட்சத்திரங்கள் பிரகாசிக்கத் தொடங்கியவுடன் அவற்றின் ஒளி மங்கிப் போகிறது. அதன் பின் சந்திரன் உதயமானதும் நட்சத்தி

ரங்கள் இருந்த இடம் தெரியாது மறைந்து போகின்றன. தானே உலகிற்கு ஒளியைத் தருகிறோம் என்ற மமதையில் சந்திரன் இருக்கையிலே கிழக்கே சூரியன் உதயமாகிறது. சந்திரனும் இருந்த இடம் தெரியாது மறைந்து போகிறது.

சூரியனும் வானத்தில் பிரகாசித்துக்கொண்டிருக்கிறான். எங்கும் ஒரே ஒளி வெள்ளம். இருந்தாலும் ஒரு குருடனைப் பொறுத்த மட்டில் உலகெங்கும் அவனுக்கு ஒரே இருள் மயம்தான். ஏன்? சூரிய வெளிச்சத்தைப் பார்ப்பதற்கான கண் ஒளி அவனிடம் இல்லை.

கண் உள்ள ஒருவன் இருட்டு அறைக்குள் இருக்கிறான். அந்த அறையில் ஒரே கும்மிருட்டு. அறைக்கு வெளியே அபரிமிதமான சூரிய வெளிச்சம் உள்ளது. அப்பொழுது அறைக்கு வெளியேயிருந்து மற்றொருவன் 'உள்ளே இருப்பது யார்?' என்று கேட்கிறான். அதற்கு உள்ளேயிருந்து 'நான் இருக்கிறேன்' என்ற பதில் வருகிறது. புற வெளிச்சம் எதுவும் இல்லாதநிலையிலும் 'நான் இருக்கிறேன்' என்ற உணர்வு ஏற்படக் காரணம் என்ன? அவனிடம் உள்ள அக வெளிச்சமே. அந்த அக வெளிச்சத்தின் அடிப்படையாலமைவது பிரம்மம். அந்தப் பிரம்மத்திடமிருந்துதான் ஏனைய அனைத்தும் ஒளியைப் பெறுகின்றன. பிரம்மத்திடமிருந்து அனைத்தும் ஒளியைப் பெற்றாலும், அவை எதனாலும் பிரம்மத்தை ஒளிர வைக்க முடியாது.

இதை ஒரு உதாரணத்தால் விளக்கலாம். ஒருவன் கனவு காண்கிறான். நனவு நிலையிலிருந்தவனது மனம் தான் கனவுலகப்பொருள்களைச் சிருஷ்டிக்கிறது. கனவில் அவன் காணும் மலை, கடல், சிங்கம், புலி, நதி எல்லாம் அந்த மனத்தின் படைப்புக்களே. அந்த

மனம் தான் அந்தப் பொருள்களின் தோற்றம், இருப்பு, மறைவு, எல்லாம். அந்த மனத்தை அவை ஆதாரமாகக் கொண்டிருக்கின்றனவேயன்றி, அவற்றை மனம் ஆதாரமாகக் கொண்டிருப்பதல்ல. அது போல பிரம்மம் தான் மற்றைய அனைத்துமாகத் தோன்றுகிறது. மற்றவற்றிற்கு ஒளி தருவதும் அந்தப் பிரம்மமே.

## 62

स्वयमन्तर्बहिर्व्याप्य भासयन्नखिलं जगत् ।
ब्रह्म प्रकाशते वह्निप्रतप्तायसपिण्डवत् ॥

ஸ்வய மந்தர் பஹிர் வ்யாப்ய
பாஸயந்நகிலம் ஜகத் ।
ப்ரஹ்ம ப்ரகாசதே வஹ்னி
ப்ரதப் தாயஸபிண்டவத் ॥

ஒளிர்த்துலக மெல்லாந்தா னுள்வெளி வியாபித்
தொளிர்ந்திடு மப்பிரம மோர்வா - யொளிரு
நெருப்பினிற் காயந்தங்கி நேரொளிரு மந்த
விருப்புப்ண்டையைப் போலவே.

[ஸ்ரீரமணர்]

स्वयं ஸ்வயம் - தானே, अन्तर्बहिः அந்தர் பஹி: - உள்ளேயும் வெளியேயும், व्याप्य வ்யாப்ய - ஊடுருவிப் பரவி, अखिलं அகிலம் - எல்லா, जगत् ஜகத் - உலகையும், भासयन् பாஸயந் - ஒளிரச்செய்து கொண்டு, येन யேந - எதனால், ब्रह्म ப்ரஹ்ம - பிரம்மமானது, वह्नि வஹ்னி - நெருப்

பினால், प्रतप्त ப்ரதப்த - நன்கு சுடப்பட்ட, आयस ஆயஸ - இரும்புப், पिण्डवत् பிண்டவத் - பந்துபோல, प्रकाशते ப்ரகாசதே - பிரகாசிக்கிறது.

கருத்துரை : உள்ளும் வெளியும் நிறைந்து நிற்கும் பிரம்மம் எல்லாப்பொருளையும் விளக்கம் பெறச் செய்து கொண்டு நெருப்புப் பிழம்பான இரும்புப் பந்துபோல் இருக்கிறது.

விளக்கு ஒன்று எரிந்து கொண்டிருக்கிறது. எரியும் பொழுது அது செய்யும் வேலை என்ன? நாற்புறமும் ஒளி வெள்ளத்தைப் பாய்ச்சுகிறது. விளக்கின் ஒளியில் அதைச் சுற்றியுள்ள பொருள்கள் யாவும் நமக்குக் கட்புலனாகின்றன. அது மட்டுமல்ல, விளக்கு அங்கே இருக்கிறது என்பதற்கு அத்தாட்சி என்ன? அந்த விளக்கே தான். எந்த ஒன்று தன்னையும் விளக்கிக் கொண்டு பிற பொருள்களையும் விளக்கிக் காட்டுகிறதோ அது விளக்காகிறது.

பிரம்மம் விளக்கிற்கு நிகர். ஏனையவற்றிற்கு ஆதாரம் பிரம்மம். அதற்கும் அதுவேதான் ஆதாரம். 'ஸர்வம் பிரம்ம மயம் ஜகத்'.

அனைத்தினுள்ளும் அனைத்தைக் கடந்தும் பிரம்மம் திகழ்கிறது. 'கடவுள்' என்ற அழகிய தமிழ்ச் சொல் 'பிரம்மம்' என்ற சமஸ்கிருத பதத்தின் அரிய மொழி பெயர்ப்பாக அமைகிறது. அனைத்தினுள்ளும், அனைத்தையும் கடந்தும் விளங்கும் பரம்பொருள் அல்லவா அது! எனவே தான் அது கடவுள் ஆகிறது.

இந்தக் கருத்தை விளக்க ஸ்ரீசங்கரர் இந்த சு... தில் ஒரு அழகிய உவமானத்தைக் கையாளுகிறார்.

இரும்புப் பந்து ஒன்றை நெருப்பினுள் போடுகிறோம். சிறிது நேரத்தில் அது நெருப்புருண்டையாகிவிடுகிறது.

சற்று முன்னர் குளிர்ந்த, கருத்த இரும்பு உருண்டையாகக் காட்சி தந்த பொருள் இப்பொழுது தக தகவென்று ஜொலிக்கும் ஒரு நெருப்பு உருண்டையாகக் காட்சி தருகிறது. நெருப்பு உருண்டையின் உட்புறமும் நெருப்பு. வெளிப்புறமும் நெருப்பு. அது அனலை நாற்புறமும் வீசுகிறது.

நெருப்பின் குணம் சூடு. அதன் நிறம் பொன் அல்லது தங்கம் போன்றது. இரும்பு தொடுவதற்குக் குளிர்ச்சியாக இருக்கும். அதன் நிறம் கருப்பு. இரும்பு உருண்டையை நெருப்பில் இட்டுக் காய்ச்சுகையில் அதன் கருத்த நிறம் குளிர்ச்சியான குணம் இரண்டுமே மாறி அது பொன் நிறத்தில் நெருப்பு மயமாக மாறி விடுகிறது. அது போலவே அண்டம் முழுவதும் பிரம்ம மயமாகவே அமைகிறது. நெருப்பிலிருந்து நெருப்புருண்டை எவ்வாறு பேதமற்று விளங்குகிறதோ, அதுபோல் பிரம்மத்திலிருந்து பிரபஞ்சமும் அதன் பொருள்களும் அபின்னமாக இருக்கின்றன.

இருட்டிய அறையில் கிடக்கும் ஒரு பொருளைத் தொட்டு அது இன்னதென உணர்கிறோம். அந்த (உணர்வு) ஒளி எங்கிருந்து வந்தது? நம் உள்ள உணர்வாகிய ஒளியின் பிரகாசத்தில் தான் நாம் அந்தப் பொருளை இன்னதென உணர்ந்தோம்.

பிரபஞ்சம் ஜடப்பொருள்களால் ஆனது. தோன்றி மறையுந் தன்மையவை. ஆனால் பிரம்மமோ சேதன சொரூபம். தோற்றமும் மறைவும் அற்றது. இரும்பு உருண்டை நெருப்பு உருண்டை ஆவது போல ஜடப்பிரபஞ்சம் சேதனப் பிரம்மத்துடன் தொடர்புடைய காரணத்தினால் அனைத்தும் பிரம்ம மயமாகிவிடுகிறது.

# 63

जगद्विलक्षणं ब्रह्म ब्रह्मणोऽन्यन्न किंचन ।
ब्रह्मान्यद्भाति चेन्मिथ्या यथा मरुमरिचिका ॥

ஜகத் விலக்ஷணம் ப்ரஹ்ம
ப்ரஹ்மணோ(அ)ந்யந்ந கிஞ்சன ।
ப்ரஹ்மாந்யத்பாதி சேந்மித்யா யதா மரு மரீசிகா ॥

பிரம முலகிற் பிறிதாகு மந்தப்
பிரமத் தணுவில் பிறிதாய்ப் - பிரமத்திற்
கன்னிய மேது மவிர்ந்தா லதுமித்தை
யுன்னுக கானனீ ரொத்து.

[ஸ்ரீரமணர்]

जगत् ஜகத் - உலகத்துக்கு, विलक्षणं விலக்ஷணம் - (மாறு பட்டது) தனித்தது, ब्रह्म ப்ரஹ்ம - பிரம்மம்; (என்றாலும்) ब्रह्मणः ப்ரஹ்மண: - பிரம்மத்திற்கு, अन्यत् அந்யத் - வேறானது, न किंचन ந கிஞ்சன - ஒன்றும் கிடையாது, ब्रह्म ப்ரஹ்மணா - பிரம்மத்திற்கு, अन्यत् அந்யத் - வேறான ஒன்று, भाति चेत् பாதிசேத் - ஒளிதந்தால், मरुमरीचिका மருமரீசிகா - கானல் நீர், यथा யதா - எப்படியோ (அப்படி), मिथ्या மித்யா - பொய்யாம்.

கருத்துரை : பிரம்மனின்றி ஒருபோதும் ஜகத் அல்லது பிரபஞ்சம் இல்லை. எனினும் அது உலக அனுபவத்தினுள் அடங்குவதில்லை. அனுபவங்களுக்குட்பட்டு ஏதாவது பொருள் புலப்படுமாகில் அது பிரம்மமாக இருக்க முடியாது. அது கானல் நீருக்கொப்ப ஏமாற்றமேயாம்.

'ஜகத்' என்பது இந்த உலகத்தை மட்டும் குறிக்கும் ஒரு சொல் அல்ல. அண்டபகிரண்டங்கள், பொறிபுலன்கள் அனைத்தும் அதில் அடங்கும். அவற்றிற்கு அப்பாலும்

வியாபித்து நிற்கும் அகண்டாகாரப் பெருவெளியையும் குறிக்கும். 'ஜகத் விலக்ஷணம் பிரம்ம' என்பது இந்தப் பொறி புலன்களின் அனுபவத்துக்குட்படும் ஜகத்திலிருந்து அப்பாற்பட்டது பிரம்மம் என்று பொருள்படுகிறது.

'பிரம்மனோ அந்யந் ந கிஞ்சன' - பிரம்மத்திற்கு அன்னியமாக, அதற்கு வேறாக எதுவும் கிடையாது. இறைவனில்லாத எதுவும் இல்லை' என்பதை இது உறுதியாகக் கூறுகிறது. அவ்விதம் இருந்தும் ஜகத் கானல் நீருக்கு நிகர் என்கிறார் ஸ்ரீசங்கரர். இந்தக் கருத்துதான் ஸர்வ வேதாந்தத்திற்கு அடிப்படையாகவும் அமைகிறது.

சென்ற சுலோகத்தில் நெருப்புருண்டைக்கு நிகராக பிரம்மம் கூறப்பட்டது. இரும்பு உருண்டை தான் நெருப்பு உருண்டையாக ஆயிற்று என்பதால், ஜகத் வேறு பிரம்மம் வேறு என்ற த்வைதக் கருத்து ஒருவரது மனத்தில் எழும் வாய்ப்பு உள்ளது. ஆனால் தரப்படும் விளக்கங்களோ அத்வைத மயம். எனவே இந்த விளக்கத்தோடு விட்டு விட்டால் 'இரண்டு' என்னும் த்வைத பாவனையை உருவாக்கின ஒரு நிலைக்கு உட்படக்கூடாது என்பதற்காக அடுத்த இந்த சுலோகத்திலேயே 'கானல்நீர்' உவமானம் தரப்படுகிறது.

'மரு மரீசிகா' என்னும் பதம் கானல் நீர் எனப்படுகிறது. பரந்து விரிந்த பாலைவனம். எங்கு நோக்கினும் ஒரே மணற்பரப்பு. மணல், மணல் எங்கும் ஒரே மணல் தான். அந்தப் பாலைவனத்தில் ஒருவன் சென்று கொண்டிருக்கிறான். வெயிலில் செல்லும் ஒருவனுக்குத் தாகம் ஏற்படுவது இயற்கைதானே! யாத்திரிகனின் கண்களுக்குத் தூரத்தில் பரந்த ஒரு நீர்ப்பரப்பு இருப்பதாகத் தெரிகிறது. ஆவலுடன் அங்கே செல்லுகிறான். ஆனால் என்ன துரதிருஷ்டம்! அவன் முன்னே அதை நோக்கிச் செல்ல செல்ல அதுவும் அவனுக்கு அப்பால் போகிறது. அதுதான் கானல் நீர். கானல் நீரில் நீரின் தன்மைகள்

எல்லாம் தெரியும். அலைகள் போன்றவை தென்படும். எனினும் ஏமாற்றத்தைத் தரும் ஒன்று அது.

இல்லாத ஒன்று இருப்பதைப் போலத் தெரிகிறது அல்லவா? அது தான் 'மித்யா' எனப்படுகிறது. மணற் பரப்பு தான் இருந்தது. நிகழ்காலத்திலும் அதுதான் இருக்கிறது. இனியும் அதுதான் இருக்கும். ஆனால் இடையிலே இல்லாத ஒன்று இருப்பது போலத்தோற்றம் தருகிறதே, அந்தக் கானல் நீர் 'மித்யா' அல்லது பொய்.

அதுபோல இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் அனைத்திலும்; இலங்குவது பிரம்மம். எனவே அது தான் 'ஸத்யம்'. இந்த ஜகத் முன்பும் பின்பும் இல்லாது இப்போது நிலைத்தது போலத்தென்படுவதால் அது 'மித்யா'. எனவே தான் 'பிரம்ம ஸத்யம் ஜகன் மித்யா' என்றார் ஆதி சங்கரர். மாறாதது எதுவோ அதுவே ஸத் யம். மாறுவது எதுவோ அது மித்யை அல்லது பொய்.

கானல் நீருக்கு உண்மையான இருப்பு எதுவும் கிடை யாது. உண்மையில் இருப்பது பாலைவனமாகிய மணற்பரப்பு. இல்லாத ஒன்று இருப்பது போலத் தோன் றுகிறது. அது பொய். உண்மையில் உள்ளது பிரம்மம் தான். சென்ற, நிகழ், எதிர் எல்லாக் காலத்திலும் உள்ளது அது. இந்த ஜகத் கானல் நீருக்கு ஒப்ப உண்மையில் இருப்பு எதுவும் அற்றதொன்று. சதா மாறி அமையும் ஒன்றில் ஸ்திரத்வத்தை எப்படிக் காண முடியும்? எனவே உள்ளது பிரம்மம் ஒன்றே என்ற அத்வைதக் கொள்கை இந்த சுலோகத்தில் நிலை நாட்டப்படுகிறது.

## 64

दृश्यते श्रूयते यद्यत् ब्रह्मणोऽन्यन्न तदभवेत् ।
तत्वज्ञानाच्च तदब्रह्म साच्चिदानन्दमद्वयम् ॥

த்ருச்யதே ச்ரூயதே யத்யத்
ப்ரஹ்மணோ அந்யந்ந தத்பவேத் ।
தத்வ(க்)ஞானாச்ச தத் ப்ரஹ்ம
ஸச்சிதானந்தமத்வயம் ॥

எதுவெது காணவுங் கேட்கவு மேயு
மதுபிரமத் தன்னிய மாகா - ததுவுமே
தத்துவ ஞானத்தினாற் சச்சிதா னந்தமா
மத்துவி தப்பிரம மாம்.

[ஸ்ரீ ரமணர்]

यद्यत् யத்யத் - எதெல்லாம் दृश्यते த்ருச்யதே - காணப் படுகிறதோ श्रूयते ச்ரூயதே - கேட்கப்படுகிறதோ, तत् தத் - அது, ब्रह्मण ப்ரஹ்மணா - பிரம்மத்திற்கு, अन्यत् அந்யத் - வேறானதாக, न भवेत् ந பவேத்- இருக்க முடியாது, तत्वज्ञानात् தத்வக்ஞானாத் - உண்மைப் பொருளின் அனுபவ அறிவினால், तदब्रह्म தத்ப்ரஹ்ம - அந்த பிரம்மமும், अद्वयं அத்வயம் - இரண்டற்ற, सच्चिदानन्दम् ஸச்சிதானந்தம் சச்சிதானந்தப்பொருளே.

கருத்துரை : புலப்படும் அனைத்துமே பிரம்மத்தின் துணை கொண்டுதான் புலனாகின்றன. தத்துவ ஞானத்தின் மூலம் ஸச்சிதானந்த பரப்பிரம்மம் என்று அறியலாம்.

இந்தப் பிரபஞ்சத்திலிருந்து பிரம்மம் வேறுபட்டது என்பது சென்ற சுலோகத்தின் அடிப்படைக் கருத்தாகும். இந்தப் பிரபஞ்சம் அனைத்தும் பிரம்மமே என்பது இந்த சுலோகத்தின் கருத்து.

வெளிப்படையாகப் பார்க்கையில் இந்த இரண்டு கருத்துக்களும் ஒன்றுக்கொன்று முரண்பட்டவையாகத் தோன்றும். ஆனால் அத்வைதத்தில் முரண்பாட்டிற்கே இடமில்லை. அதிலும் ஸாக்ஷாத் பகவத் சொரூபமான ஸ்ரீசங்கரர் முரண்பட்ட கருத்துக்களை ஒரு போதும் தெரிவிக்கமாட்டார். எனவே முரண்பட்டன போல நமக்குத் தோன்றும் கருத்துக்கள் உண்மையில் முரண்பாடு உடையன அல்ல. காண்பவனின் கோணத்தைப் பொறுத்துக் கருத்து மாறுபடுகிறது. அவ்வளவுதான்.

முதல் வகுப்புக் குழந்தைக்கு ஆசிரியர் கணிதம் போதிக்கிறார். எப்படி? ஒரு புறம் ஐந்து களி மண் உருண்டைகளையும் இன்னொரு புறம் மூன்று களிமண் உருண்டைகளையும் வைத்துக்கொண்டு ஐந்தும் மூன்றும் எட்டு என்று போதிக்கிறார். ஆசிரியரின் நோக்கில் ஐந்து, மூன்று, எட்டு ஆகியனவெல்லாம் எதையும் குறிக்காத வெறும் எண்கள் மாத்திரமே. ஆனால் குழந்தையின் நோக்கில் ஐந்து என்பது ஐந்து களிமண் உருண்டைகள் தான். அது போல், மூன்று, எட்டு போன்ற எல்லா எண்களும் அத்தனை களிமண் உருண்டைகளாகவே அமைகின்றன. இப்பொழுது ஒரு கேள்வி எழுகிறது? ஐந்து மூன்று ஆகியன எதைக் குறிக்கின்றன? வெறும் எண்களையா, அல்லது களிமண் உருண்டைகளையா? குழந்தையின் நோக்கில் அவை களிமண் உருண்டைகளைக் குறிக்கின்றன. அது சரியே. ஆனால் அதே குழந்தை உயர் கணிதத்தைப் படிக்கையில் ஐந்து, மூன்று ஆகியவை களிமண் உருண்டைகள் அல்ல, வெறும் எண்களே என்ற உண்மையைத் தெரிந்து கொள்கிறான். இந்த உண்மையை உணர்ந்த பின்னர் அவனுக்குக் களிமண் உருண்டையின் அவசியம் எழாது. உருவ நிலையிலிருந்து அருவ நிலைக்கு அவன் சென்றுவிடுகிறான்.

கானல் நீரை உண்மை என்று கருதுகின்ற வரை

யில் வழிப்போக்கனுக்கு அது உண்மைதான். அது மட்டுமல்ல பாலைவனம். அதில் அவன் காணும் கானல் நீர் இரண்டுமே அவனைப் பொறுத்த மட்டில் உண்மை தான். ஆனால் தான் பார்ப்பது பொய்யான கானல் நீர்தான் என்ற உண்மை புலப்பட்ட பின்னர், உள்ளது பாலைவனம் ஒன்றுதான் என்ற உண்மையை அவன் உணருகிறான்.

அது போல அறியாமையில் ஒருவன் உழலும் வரை அவன் ஜகத் வேறு, பிரம்மம் வேறு என்றுதான் காண்கிறான். அப்படித்தான் அவனுக்கு உண்மையைப் போதிக்க வேண்டியிருக்கிறது. ஆனால் விசாரம் மற்றும் விவேகத்தின் மூலம் அவன் உண்மையை உணர்ந்த பின்னர் தான் காணும் ஜகத் பொய்; பிரம்மம் தான் உண்மை. அது சச்சிதானந்த மயம் என்பதை அவன் உணருகிறான்.

## 65

सर्वगं सच्चिदात्मानं ज्ञानचक्षुर्निरीक्षते ।
अज्ञानचक्षुर्नेक्षेत भास्वन्तं भानुमन्धवत् ॥

ஸர்வகம் ஸச்சிதாத்மானம் ஞானசக்ஷுர் நிரீக்ஷதே ।
அக்ஞானசக்ஷுர் நேக்ஷேத
பாஸ்வந்தம் பானுமந்தவத் ॥

சருவத்துஞ் சார்ந்ததாஞ் சச்சிதா னந்தப்
பிரமத்தை ஞானக்கண் பெற்றான் - றரிசிப்பான்
ஞானக்கண் ணில்லாதா னண்ணுனே
காட்சி யொளிர்
பானுவையந் தன்போலப் பார்.

[ஸ்ரீரமணர்]

सर्वगं ஸர்வகம் - எங்கும் நிறைந்திருக்கிற, सच्चिदात्मानं ஸச்சிதாத்மானம் - ஸச்சிதானந்தப் பொருளை, ज्ञानचक्षुष ஞான சக்ஷு - ஞானக் கண் உடையவன் தான், निरीक्षते நிரீக்ஷதே - பார்க்கிறது, अज्ञानचक्षु அக்ஞான சக்ஷு - அஞ்ஞானக் கண் (ஊனக்கண்), भास्वन्तं பாஸ்வந்தம் - பிரகாசிக்கின்ற, भानुं பானும் - சூரியனை (ஆத்மனை), अन्धवत् அந்தவத் - குருடன் (பார்க்க முடியாதது) போல், नेक्षेत நேக்ஷேத - பார்க்கிறதில்லை.

கருத்துரை : எங்கும் ஊடுருவி நிற்கும் சச்சிதானந்தப் பிரம்மத்தை ஞானக்கண்தான் பார்க்க முடியும். சூரியனைக் குருடன் பார்க்க முடியாது. அதைப் போல அஞ்ஞானக் கண் படைத்தவன் அந்தப் பரம் பொருளைப் பார்க்கிறதில்லை.

நம் ஒவ்வொருவருக்கும் இரண்டு விதமான கண்கள் உண்டு. ஒன்று புறத்தே முகத்தில் இருக்கின்ற ஊனக் கண்கள். மற்றது அகத்தே அமைந்திருக்கும் ஞானக்கண். பார்க்கும் சக்தி படைத்த அனைவரும் உலகப்பொருள் களை ஊனக்கண்களால் பார்க்கின்றனர். இது எந்தவித சிரமுமில்லாதது; இயற்கையாக நிகழும் ஒரு செயல். ஆனால் ஞானக்கண் ஊனக்கண்களைப் போன்றதொன் றன்று. அனைவரிடத்தும் அது உள்ளூர அடங்கிக் கிடக் கிறது. தீவிரமான இடைவிடாத பயிற்சியின் மூலம்தான் ஞானக்கண்ணுல் உண்மையைக் காணும் பேறு ஒருவ னுக்கு கிட்டும். ஊனக்கண்ணுல் பிரம்மத்தைப் பார்க்க முடியாது. எனவே ஞானம் மலராத ஒருவன் 'பிரம்மத்தை என்னால் காண முடியவில்லையே' என்றெல்லாம் புலம் பினால் அது பொருளற்ற ஒரு வரட்டுக் கூச்சலேயாகும். அதை அறிவுடைய் எவரும் பொருட்படுத்தக்கூடாது.

இதை நவீன விஞ்ஞானமும் நமக்குத் தெளிவாகப் புகட்டுகிறது. பிரபஞ்சத்தில் உள்ள அனைத்து ஸ்தூலப்

பொருட்களும், சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள், கிரகங்கள் போன்ற அனைத்தும் உட்பட வெறும் எலெக்ட்ரான்களின் தொகுப்பே என்பது நவீன விஞ்ஞான சாஸ்திரம் கண்ட முடிவு. 'எலெக்ட்ரான்' என்பது அணுவின் உள்ளே உள்ள உட்கருவைச் சுற்றி வருகின்ற மிக மிக நுண்ணிய துகள்கள். அவற்றைத் துகள்கள் என்றுகூட உறுதியாகச் சொல்ல முடியாது. ஏனெனில் அந்த எலக்ட்ரான் எடையுள்ள ஒரு துகளா அல்லது எடையற்ற அலை வடிவத்தில் உள்ள கதிரா என்பது இன்னும் திட்டவட்டமாகத் தெரிந்தபாடில்லை. ஆனால் அனைத்துப் பொருள்களும் எலக்ட்ரான்களின் சேர்க்கையே என்பது விஞ்ஞானிகளின் உறுதியான முடிவு.

இந்த அடிப்படைப் பொருளான 'எலக்ட்ரானை' நாம் ஊனக்கண்களால் காண முடியுமா? முடியாது. உலகில் நாம் பொருள்களை வெவ்வேறு வடிவத்தில் காண்கிறோம். யானை, நாய், கல், கட்டை, அழகிய பெண், செடி, புழு, பாம்பு, தங்கம், இரும்பு..... இவை அனைத்தும் விஞ்ஞானியின் கண்ணுக்கு வெறும் எலக்ட்ரானே. ஊனக்கண்களால் காணமுடியவில்லை என்பதற்காக, அந்த எலக்ட்ரானே பொய் என்றோ அல்லது, அதைப்பபற்றிக் கூறும் விஞ்ஞானிகளது கூற்று பொய் என்றோ நாம் கூற முடியுமா? முடியாது. ஏன்? அப்படிக் கூறினால் செய்முறை மூலம் நிரூபித்துக் காட்டும் விஞ்ஞான சாஸ்திரமே பொய் என்று கூறிய குற்றத்திற்கு உட்பட்டவர்களாவோம். எனவே அவ்விதம் நம்மால் கூறமுடியாது.

ஊனக் கண்ணால் காண முடியாத எலக்ட்ரானைப் பார்க்க 'எலக்ட்ரான் மைக்ரோஸ்கோப்' என்ற ஒரு நவீன விஞ்ஞானக் கருவியை நாம் தற்காலத்தில் பயன்படுத்துகிறோம். இந்தக் கருவி பொருள்களின் அணுக்களில் எலக்ட்ரான்களின் அமைப்பை நமக்குப் படம் பிடித்துக் காட்டுகிறது. அதைப் பார்த்து நாம் 'எலக்ட்ரான்' உண்

மையில் உள்ள ஒன்றுதான் என்ற முடிவுக்கு வரு கிறோம்.

விஞ்ஞானத்திற்குப் பொருந்துவது மெய்ஞானத்திற் கும் பொருந்துகிறது. லௌகிகப்பொருள்களைத் தான் ஊனக்கண்ணால் பார்க்க முடியும். அலௌகிகமான அதாவது பொறிபுலன்களுக்கு அப்பாற்பட்டதொன்றைப் பார்க்க இது பயன்படாது. அதற்கு ஞானக் கண்தேவை. ஞானக்கண் வந்த பின்னர் பார்க்கின்ற அனைத்தும் பர மனின் சொரூபமாகவேதான் தெரியும்.

சூரியன் வானில் பிரகாசித்துக் கொண்டிருக்கிறான். ஆனாலும் குருடன் ஒருவனால் அதைக்காண முடியாது. அவனைப் பொறுத்தமட்டில் எங்கும் ஒரே இருள் மயம் தான். உலகத்தில் குருடர்கள் குறைவு. கண்ணுடையவர் கள் அதிகம். ஆனால் ஆன்மீக ரிதீயில் குருடர்கள் அதிகம். உண்மையைப் பார்க்கும் தன்மையுடையவர்கள் மிகவும் குறைவு. எனவே ஞானக்கண் இல்லாதவர்களால் பிரம்மனை உணரவே முடியாது. அவர்கள் குருடர்க ளுக்கு நிகர்தான்.

## 66

श्रवणादिभिरूद्दीप्तज्ञानग्नि परितापितः ।
जिवस्सर्वमलान्मुक्तः स्वर्णवद् द्योततेस्वयम् ॥

ச்ரவணாதிபிருத்தீப்தக்ஞானாக்னி பரிதாபித: ।
ஜீவஸ்ஸர்வமலாந் முக்த: ஸ்வர்ணவத்யோததே ஸ்வயம் ॥

ச்ரவண மாதிகளாற் றேசுறு ஞான
வெரியினிற் காய்ச்சி யெடுக்கச் - சருவ
மலமும்போய்ச் சீவன் மறுவில்பொன் போனிர்
மலனாகித் தானொளிர் வான்.

[ஸ்ரீரமணர்]

श्रवणादिभिः ச்ரவணுதிபி: - கேட்டல் முதலியவற்ருல், उद्दीप्त உத்தீப்த - கொளுத்தப்பட்ட (தூண்டப்பட்ட), ज्ञानाग्नि ஞானாக்னி - ஞானாத்தீயினால், परितापितः பரிதாபித: - பொசுக்கப்பட்ட, सर्वमलात् ஸர்வமலாத் - எல்லா அழுக்குக ளிலிருந்தும், मुक्तः முக்த: - விடுபட்ட, जीवः ஜீவ: - ஜீவன், स्वर्णवत् ஸ்வர்ணத் தங்கம் போல, स्वयं ஸ்வயம் - தானே, द्योतते த்யோததே - பிரகாசிக்கிருன்.

கருத்துரை : ச்ரவணம் (உயர் கருத்துகளைக் கேட் டல்) முதலியவற்ருல் ஞானச்சுடர் தூண்டி எழும். அந்தச் சுடர் ஓங்க அதில் எரியும் ஜீவன் எல்லா மலங்களும் பொசுங்கி நீங்கத் தானே பொன் போல் பொலிவு பெறு கிருன்.

அறிவைப் பெறுவதில் மூன்று படித்தரங்கள் உண்டு. கேட்டல், சிந்தித்தல், தெளிதல் என்பவையே அவை. இவற்றை சமஸ்கிருதத்தில் ச்ரவணம், மனனம், நிதித்தி யாசனம் என்பர்.

மனிதனது அறியாமை மூன்று விதமாகச் செயல்ப டுகிறது. ஆத்மனைப் பற்றிய அறிவு ஏதேனும் உனக்கு உண்டா என்று யாராவது ஒருவர் நம்மிடம் கேட்டால் உண்மையிலேயே நமக்கு அது தெரியாவிட்டால் உடனே நாம், 'எனக்குத்தெரியாது' என்று சொல்லுகிரேம். இதை எப்படிப் போக்குவது?

இத்தகைய அறியாமையை நாம் இரண்டு விதங்க ளில் நீக்க முடியும். ஒன்று, ஆத்ம ஞானம் கைவரப் பெற்ற மகான்களை அணுகி ஆத்மனைப் பற்றிய உண் மைகளைச் சிரத்தையுடன் கேட்டல் அல்லது அத்தகைய மகான்கள் எழுதிய உயர் நூல்களைப் படித்தல்.

சாதாரண நூல்களே படித்தவுடன் நமக்குப் புரிவதில்லை. இந்த நிலையில் எத்தனை தரம் ஆத்மனைப் பற்றிய விளக்கத்தைக் கேட்டாலும் அல்லது நூல்களைப் படித்தாலும் அது நமக்கு உள்ளபடி புலனாவதில்லை. இதனால்தான் ஆத்மீகச் சொற்பொழிவுகள் நடக்குமிடங்களில் கூட்டம் மிகவும் குறைவாக இருக்கும். ஒருவரிடம் அவர் ஏன் அந்தக்கூட்டத்திற்குச் செல்லவில்லை என்று கேட்டால், அவர் உடனே, “அதெல்லாம் எனக்குப் புரியாது. அங்கே போயென்ன, போகாதென்ன?” என்று கூறுகிறார். இது தான் அறியாமையின் இரண்டாவது நிலை. இதை எப்படிப் போக்குவது? கேட்டதை மீண்டும் மீண்டும் நமக்குள்ளேயே சிந்தித்தல் வேண்டும். உண்மையாகப் பார்க்குமிடத்து, நமக்குப் புரியாதது என்று எதுவுமே கிடையாது. சிந்திக்கச் சிந்திக்க எவ்வளவு கடினமான விஷயமும் நமக்குப் புலனாகும்.

கேட்டாய் விட்டது. கேட்டது புரிந்துவிட்டது. இருந்தாலும் நமக்கு மனத்தினுள், “எனக்கு இன்னும் சொந்த அனுபவம் கிடைக்கவில்லையே” என்ற ஏக்கம் இருக்கிறது. இது அறியாமையின் மூன்றும் நிலை. இதை எப்படிப் போக்குவது? தியானம் செய்வதினால், மனத்தை ஒரு நிலைப்படுத்தி உண்மையைப் பற்றிச் சிந்திக்குங்கால், உள்ளுள்ள ஆத்மஞானம் சிறிது சிறிதாகப் புலப்படத்தொடங்குகிறது.

இதை விளக்குவதற்கு ஸ்ரீசங்கரர் அரியதொரு உவமானத்தைக் கையாளுகிறார். அசுத்தமான தங்கத் தாதுவிலிருந்து சுத்தமான தங்கத்தைப் பெறுவதுதான் அது. தங்கம் இயற்கையில் தங்கமாகவே கிடைக்கிறது எனினும் அது சுரங்கத்தில் மண் போன்ற அநேக மாசுக்களுடன் கலந்ததாகக் காணப்படுகிறது. அந்த நிலையில் தங்கத் தாதுவைப் பார்த்தால் அதில் தங்கம் எதுவும் இருப்பதாகக் கூடச் சொல்ல முடியாது. இது போல்தானே

நமது நிலையும். நாம் அடிப்படையில் ஸாக்ஷாத் இறை சொரூபம் எனினும் வெளிப்படையாகப் பார்க்கையில் காம, க்ரோத, லோப, மோஹமாகிய துர்க்குணங்களின் மாசுக்கள் நம் மனத்தைக் கவ்வியிருக்கும் நிலையில், 'நம்மிடமும் தெய்வீகத்தன்மை இருக்குமா?' என்ற சந்தேகம் ஏற்படுகிறதல்லவா? அது போல் தங்கத்தாதுவில் அநேக மாசுக்கள் படிந்திருக்கின்றன. க்ட்டி கட்டியாக உள்ளதை முதலில் உடைத்துப்பொடியாக்கி, அதைப் பிற வஸ்துக்களுடன் சேர்த்து உஷ்ணப்படுத்தி, உலையிலிட்டுக் காய்ச்சுகையில் தங்கத்திலுள்ள மாசு அகன்று தங்கம் சுடர்விட்டுப் பிரகாசிக்கிறது.

அனைவரும் அடிப்படையில் பிரம்ம சொரூபம் தான். ஆத்ம சொரூபமே. இருந்தாலும் அது முதலில் புலப்படுவதில்லை. ஏன்? படலம் படலமாகப் படிந்துள்ள மாசுக்களால் உயர் கருத்துக்களைக் கேட்டல், சிந்தித்தல், தியானித்தல் மூலம் மனத்தகத்துள்ள மாசு அகன்று, சுடச்சுடரும் ஒளிவிடும் பொன் போல, ஆத்ம ஒளி நம்மிடம் பிரகாசிக்கிறது.

## 67

हृदाकाशोदितो ह्यात्मा बोधभानुस्तमोपहृत् ।
सर्वव्यापी सर्वधारी भाति भासयतेऽखिलम् ॥

ஹ்ருதாகாசோதி தோஹ்யாத்மா
போதபாநுஸ்தமோபஹ்ருத் ।
ஸர்வ வ்யாபி ஸர்வதாரீ பாதி பாஸயதே(அ)கிலம் ॥

இதயவெளி தோன்றி யிருளை யழிஞான
வுதயரவி யான்மா வொளிரு - நிதமுமே
யெல்லாவற் றும்பரவி யெல்லாமுந் தாங்கிநின்

றெல்லா மொளிர்விக்கு மெண்.

[ஸ்ரீ ரமணர்]

हृत् आकाश ஹ்ருத் ஆகாச - இதயமாகிற ஆகாயத்தில், उदित உதித - உதித்த, बोधभानुः போத ப்ானு: - ஞானச் சூரியனாகிய, आत्मा ஆத்மா - ஆத்மா, तमोपहृत् தமோபஹ்ருத் - அஞ்ஞான இருளை நீக்குவதாகவும், सर्वव्यापी ஸர்வ வ்யாபி - எங்கும் பரந்து நிறைந்ததாகவும், सर्वधारी ஸர்வ தாரீ - எல்லாவற்றையும் தாங்குவதாகவும், भाति பாதி - பிரகாசிக்கிறது, अखिलं அகிலம் - எல்லா உலகத்தையும், भासयत பாஸயதே - ஒளிரவும் செய்கிறது.

கருத்துரை : ஆத்மா இதய ஆகாயத்தில் உதிக்கும். அது ஞான சூரியன். அஞ்ஞான இருளை நீக்கும். அது எங்கும் நிறைந்தது. அனைத்தையும் தாங்கி நிற்கும் பொருள். தான் ஒளிர்ந்து அனைத்தையும் ஒளி பெறச் செய்கிறது.

உலகை இருள் கவ்விக்கொண்டிருக்கிறது. இந்த இருள் எப்படி அகலும்? ஞான சூரியன் உதிக்க வேண்டும்? எங்கே? நமது இதயத்தில்.

இதயம் என்றவுடன் நமக்கு நமது உடலில் மார்பின் இடப்புறத்தில் தாமரை மொட்டு வடிவத்தில் அமைந் திருக்கும் இருதயத்தின் நினைவு வரும். ஞானிகளும் யோகிகளும் குறிப்பது இந்த மாமிசத்தாலாகிய இத யத்தை அல்ல. எங்கிருந்து நல்ல எண்ணங்கள் நல்ல மனிதப் பண்புகள், கருணை, அன்பு, பொறுமை, தியாகம் போன்ற உயர்ந்த குணங்கள் உதிக்கின்றனவோ, அதை இதயம் என்று சான்றோர் குறிப்பிடுகின்றனர். விஞ்ஞானி கள், டாக்டர்கள் மற்றும் இலக்கிய அறிஞர்கள் குறிப்பிடும் இதயம் அல்ல அது.

இதயத்தை அறிஞர்கள் தாமரையுடன் ஒப்பிடுவர். சூரியனைக் கண்டு தாமரை மலரும். அது போல் ஞான சூரியனைக் கண்டதும் நமது இதயத் தாமரை மலருகிறது. இறைவனை 'இருதய கமல வாசன், பக்தரது இதயமாகிய தாமரையில் வசிப்போன்' என்பர் பெரியோர். அத்தகைய இதயத்தை ஆகாயத்துடன் ஒப்பிட்டு அதில் ஞான சூரியன் தோன்றும் என்கிறார் ஸ்ரீசங்கரர்.

ஞான சூரியன் நமது இதயத்தில் எப்பொழுது தோன்றும்? நமது மனம், புத்தி இரண்டும் பூரணமாகத் தூய்மையடையும் பொழுது அறிவு வளருவதற்கிடையிலே மனமும் பக்தியால் பண்பட வேண்டும். அறிவு வளர்ந்து மனம் பக்தி எனும் ஈரமற்றுக் காய்ந்து கிடந்தால் அதனால் ஒரு பயனும் கிட்டாது. ஞானம், பக்தி இரண்டும் ஒருங்கே நம்மிடம் மலருகையில் நமது இதய ஆகாயத்தில் ஞானமெனும் சூரியன் உதிக்கிறது. அது உதித்த மாத்திரத்திலேயே அஞ்ஞான இருள் இருந்த இடம் தெரியாது அகலுகிறது.

அந்த உயர் ஞானம்தான் ஆத்மா. ஆத்மா ஞான சொரூபம். அந்த ஆத்மா எத்தகையது? ஸர்வவ்யாபி; எங்கும் நிறைந்தது. ஸர்வதாரி - அனைத்தையும் தாங்குவது. 'எல்லாவற்றையும் சிரமத்துடன் ஆத்மா தன் மீது தாங்குகிறது', அல்லது இறைவன் தாங்குகிறார் என்று பொருள்படாதல்லவா? நூலும் ஆடையும் ஒன்றுதான். நூல் ஆடையைத் தாங்குகிறது என்று சொன்னால் அது பொருளுள்ளதாகப்படும். அதுபோல் இறைவனும் இயற்கையும் இணைபிரியாதவை. ஆகவே 'தாங்குதல்' என்பது நூலுக்கும் ஆடைக்கும் உள்ள உறவைப் போன்றதேயாகும். அத்தகைய ஆத்மா ஞான சொரூபமாக அகில உலகத்தையும் ஒளிரச்செய்கிறது.

# 68

दिग्देशकालाद्यनपेक्ष्य सर्वगं ।
शीतादिहृन्नित्यसुखं निरञ्जनम् ॥
यस्स्वात्मतीर्थं भजते विनिष्क्रियः ।
स सर्ववित् सर्वगतोमृतो भवेत् ॥

திக் தேசகாலாத்யநபேக்ஷ்ய ஸர்வகம்
ஸீதாதி ஹ்ருந்நித்ய ஸுகம் நிரஞ்சனம் ।
யஸ் ஸ்வாத்ம தீர்த்தம் பஜதே விநிஷ்க்ரிய:
ஸ ஸர்வவித் ஸர்வகதோ(அ)ம்ருதோ பவேத் ॥

திக்கிடங் காலமுத ரூடாம லென்றுமெத்
திக்குமார்ந் தேகுளிர்முன் றீர்ப்பதா - யெக்களங்கு
மற்றநித் யானந்த வான்மதீர்த் தத்துட்டோய்
வுற்றவ னார்செய்கை யொன்றின்றி - மற்றவன்
யாவு மறிந்தோனா யெங்குநிறைந் தாரமிர்த
னாவ னெனவே யறி.

[ஸ்ரீ ரமணர்]

यः யஃ - எவனொருவன், विनिष्क्रियः விநிஷ்க்ரிய: - செயல் நீங்கிய நிலையினனாகி, दिग् திக் - திசை, देश தேச - இடம், कालादि காலாதி - காலம் முதலியவற்றை, अनपेक्ष्य அநபேக்ஷ்ய - அபேட்சிக்காமல், सर्वगं ஸர்வகம் - எங்கும் நிறைந்திருந்ததும், शीतादिहृत् ஸீதாதிஹ்ருத் - குளிர் முதலிய தொந்தங்களை அழிக்க வல்லதும், नित्यसुखं நித்யஸுகம் - என்றும் இன்பமயமானதும், निरञ्चनम् நிரஞ்ஜனம் - களங்கமற்றதுமான, आत्मतीर्थं ஆத்ம தீர்த்தம் - ஆத்மா என்கிற புண்ணிய நீரில், भजते பஜதே - நீராடுகிறேனோ, सः ஸ: - அவன், सर्ववित् ஸர்வவித் -எல்லாமறிந்தவனாகவும், सर्वगतो ஸர்வகதோ - எங்கும் நிறைந்தவனாகவும், अमृतः அம்ருத:

- அழியாதவனாகவும், भवेत् பவேத் - ஆவான்.

கருத்துரை : எவனொருவன் செயல் நீங்கிய நிலையினனாகிய திசை, இடம், காலம் முதலியவற்றை அபேட்சிக்காமல் எங்கும் நிறைந்ததும், சீதோஷ்ணம் முதலான எதிரிடை இரட்டைகளை அழிக்கவல்லதும் என்றும் இன்பமயமானதும் களங்கமற்றதுமான ஆத்மா என்னும் புண்ணிய நீரில் நீராடுகிறானோ அவன் எல்லாமறிந்தவனாகவும், எங்கும் நிறைந்தவனாகவும் அழியாதவனாகவும் ஆவான்.

இது ஆத்மபோதத்தில் கடைசி சுலோகமாகும். ஏனைய சுலோகங்களிலிருந்து இது கொஞ்சம் மாறுபடுகிறது. மற்றவற்றில் ஒரு உவமானத்துடன் கூட ஆத்மதத்துவம் விளக்கப்பட்டது. ஆனால் இதில் ஆன்ம ஞானம் பற்றிய ஒரு பொதுவான கருத்து வெளியிடப்படுகிறது. இந்த நூலின் உட்கருத்தின் சுருக்கமாகவும் இது அமைகிறது.

அழியாப் பெருநிலையை ஒருவன் எங்ஙனம் அடையக்கூடும் என்பது இதில் சுருக்கமாகக் கூறப்படுகிறது.

பிரபஞ்சம் முழுவதும் காலம், இடம், திசை என்ற மூன்றினுள் கட்டுப்பட்டதாய் உள்ளது. இதை ஆங்கிலத்தில் Time, Space, Direction என்று கூறலாம். ஆனால் ஆத்ம தத்துவமோ இதனைத்தையும் கடந்ததாகவும், இஃதொன்றிலும் கட்டுப்படாததாகவும் உள்ளது. ஆத்ம ஞானத்தை உணர்ந்த ஞானியும் அவ்வாறே ஆகிறான்.

"ய: ஆத்ம தீர்த்தம் பஜதே" என்பது 'எவன் ஆன்மாவாகிய புனித தீர்த்தத்தில் நீராடுகிறானோ' எனப்பொருள்படுகிறது. அவன் பெருநிலையை அடைகிறான். 'தீர்த்தம்' என்பது புனித நீரைக்குறிக்கிறது. 'கங்கா தீர்த்தம்' என்று சொல்லுகிறோம். கோவிலில் பகவத்பிரஸாதமாக நாம் பெறும் ஜலத்தைத் தீர்த்தம் என்கிறோம். அந்தப்

புனித தீர்த்தத்தால் பாபம் அனைத்தும் அகலுகிறது என்று ஜனங்கள் நம்புகின்றனர். இங்கே ஸ்ரீசங்கரர் ஆத்ம தீர்த்தத்தில் நீராடுபவன் இறைநிலையை எய்துகிறான் என்று சொல்லுகிறார். நாம் செய்யும் புறச் சடங்குகள் யாவும் ஆன்ம சுகத்திற்காகவே அமைந்துள்ளன என்பதை நாம் யாண்டும் மனதில் கொள்ள வேண்டும். புறந்தூய்மை நீரான் அமையும், அகந்தூய்மை வாய்மையால் காணப்படும். மனத்துக் கண் மாசிலன் ஆதலே அறம். இதுவே அனைத்தினுடையவும் அடிப்படை சாரமாகும். 'ஸர்வம் பிரம்ம மயம்' என்பதை உணர்ந்தவன் ஆத்ம தீர்த்தம் அதாவது ஆத்மாவில் நீராடுபவன் ஆகிறான்.

அவனது இலக்ஷணம் எது? 'விநிஷ்க்ரிய: செயல் நீங்கிய நிலையினன். செயல் நீங்கிய நிலை என்றால் செயல் அற்ற நிலை அன்று. எத்தனையோ வகையான செயல்களைச் செய்தாலும் அவைகளை 'நான் செய்கிறேன்' என்ற அகங்கார எண்ணம் அற்றுச் செய்யும் நிலை அது. 'யான்', 'எனது' - இந்த இரண்டும் அற்றுவிட்டால் பின்னர் எந்தச்செயலும் நம்மைப் பந்தப்படுத்தாது. நம்மைச் செய்விப்பது அந்தப் பரம்பொருள். நாம் செய்வதும் அவனுக்குப் பூஜையாகவே அமைகிறது. அந்த நிலையில் செயல்களின் விளைவுகள் நம்மைப் பந்தப்படுத்தா. நாம் உலகில் வாழ்ந்தாலும் கர்ம பல முக்தர்களாக அதாவது ஜீவன் முக்தர்களாக ஆகிவிடுகிறோம்.

ஆத்ம ஞானம் கைவரப்பெறுபவர் அனைத்தையும் அறிந்தவர்களாகிறார்கள். எங்கும் நிறைந்தவர்களாகவும், அழியாப் பெருநிலையை அடைந்தவர்களாவும் ஆகிறார்கள். சுகதுக்கம், சீத உஷ்ணம், லாப நஷ்டம், இன்ப துன்பம் ஆகிய எதிரிடை இரட்டைகள் அவர்களை ஒன்றும் செய்யாது. 'த்வந்த்வங்கள்' எனப்படும் எதிரிடை இரட்டைகளால் தாக்கப்படாத த்வந்த்வாதீதப் பெருநிலைக்கு அவர்கள் சென்று விடுகிறார்கள்.

மனிதப்பிறவியெடுத்தவர்கள் அடையவேண்டியது ஆத்மபோதமே. அதற்கு இணையான செல்வம்இல்லை. பெருநிலை வேறு இல்லை. எனவே படிப்படியான சாதனையினால் மனத்தில் மண்டிக்கிடக்கும் மாசுக்களை அகற்றி, ஆத்ம ஞானத்தை இந்தப்பிறவியிலேயே பெற முயல்வோமாக.

இத்துடன் ஸ்ரீசங்கரரின் ஒப்பற்ற வேதாந்த நூலான 'ஆத்ம போதம்' முற்றுப்பெறுகிறது. ஏதோ ஒரு தடவை அல்லது இரண்டு தடவைகள் படித்துவிட்டு மூடி வைத்து விடும் நூலல்ல இது. திரும்பத் திரும்பப் படிக்க வேண்டும். படித்துப் பொருளை உணரவேண்டும். உணர்ந்து நடைமுறையில் அனுஷ்டானத்திற்குக் கொண்டுவர வேண்டும். பின்னர் காலக்கிரமத்தில் ஆத்ம போதம் தானாக நம்மிடம் உதயமாகும். நாமும் பெறற்கரிய பெருநிலையை அடைந்தவர்களாவோம்.

ஸ்ரீஆதி சங்கர பகவத் பாதரின் அருள் நம்மனைவர் மீதும் மலர்வதாகுக!